*Sarojini Naidu*—Tamil translation by M. K. Thangavelu of Padmini Sen Gupta's monograph in English. Sahitya Akademi, New Delhi (1986) Rs. 5.


First Published : 1986

சாகித்திய அக்காதெமி

*தலைமை அலுவலகம்:*

*ரவீந்திரபவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி 110 001*

*கிளை அலுவலகங்கள்:*

*29, எல்டாம்ஸ் சாலை, தேனும்பேட்டை, சென்னை 600 018*

*பிளாக் V–B, ரவீந்திர சரோபர் ஸ்டேடியம், கல்கத்தா 700 029*

*172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,*
*தாதர், பம்பாய் 400 014*

ரூ. 5.

*அச்சிட்டோர்: டயோசிசன் அச்சகம், சென்னை 600 007*

# பொருளடக்கம்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனனுக்கு நிமித்தகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து இந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

*(நாகார்ஜுன மலைச் சிற்பம்—கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. பட உதவி: நேஷனல் மியூஸியம், புது தில்லி.)*

# 1. அற்புத வனம்

சரோஜினி, கனவுலகம் என்ற பரம்பரைச் செல்வத்தை முழுமையாகப் பெற்றவர்; அவரது தந்தையும் ஓரளவில் தாயும் வாழ்ந்த அதே கனவுலகை வழிவழிச் செல்வமாக அடைந்தவர். ''எனது மூதாதையர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகக் காட்டையும் மலைக் குகைகளையும் காதலித்தவர்கள்; சீரிய கனவு கண்டவர்கள்; பெருங்கல்வியாளர்கள்; பெரிய துறவிகள். எனது தந்தையே ஒரு கனவுலகவாசிதான்; சிறந்த கற்பனையாளர்; வாழ்வில் மகோன்னதமான தோல்வியைத் தழுவிய மிகப் பெரிய மனிதர்.''[1] மேற்கூற்றின் வழிக் கனவுகளின் இயல்பை மனத்தில் கொண்டு, ''கனவுகளை உருவாக்கிய அதே பொருள்களாகவே நாங்களும் அமைகின்றோம்'' என்ற கவி உண்மையையும் ஒப்புக்கொண்டால் சரோஜினி நாயுடுவின் இலக்கியப் படைப்பைப் பற்றிய ஆய்வுரை எதனையும் சரியாக மதிப்பிடக்கூடும்.

சரோஜினி நாயுடு ஓர் ஆழ்ந்த கவிஞர்; ஒரு சிந்தனையாளர்; ஒரு தத்துவ ஞானி என்றெல்லாம் வலிந்து சித்திரிப்பதில் தம் எழுதுகோலின் மையைச் சிலர் விரயம் செய்தார்களோ என்று எண்ண வேண்டியுள்ளது. மேற்கூறிய அனைத்துச் சாயல்களின் தோற்றங்களும் ஆன்ம அநுபூதி நிலைகளுங்கூடச் சரோஜினியின் பாடல்களில் வெளிப்படுவது உண்டு. ஆனால் அச்சாயல்களில் அவர் ஒருநிலைப்படாதவர். அவரது இசைப் பாடல்கள் அவர்தம் கவிதையில் வரும் பல்லக்குத் தூக்குவோரின் சுமைபோலவே இலேசானவை; அழகாய்த் தோன்றி நழுவுகின்ற ''ஒரு மலர்'', ''ஒரு பறவை'', ''ஒரு நகைப்பு'', ''ஒரு விண்மீன்'', ''ஓர் அலை விளிம்பில் மின்னும் ஒளிவீச்சு'', ''ஒரு கண்ணீர்த் துளி'' போன்று விரைந்து மறைபவை.

இவரது கற்பனை உலகமும் உருவக லட்சியமும் ஷேக்ஸ்பியரின் ''இளவேனில் இரவுக் கனவு'' (Mid-summer's Night Dream) என்னும் கவிதையில் வரும் தேவதைகளைப் போன்று அழகியவை. ''சிலந்தி வலை'', ''விட்டில் பூச்சி'', ''கடுகு வித்து''—இவை யாவும் காற்றில் மிதக்கும் கற்பனை உயிரினம்; சின்னஞ் சிறியவை; மெல்லிய அழகிய பொய்ம்மாயங்கள். மேலும் சொன்னால், சரோஜினி இந்த இன்பக் கனவுலகில்—ஏன்—துயரத்திலுங்கூடச் சற்றே தனித்தும் ஒதுங்கியுமே நிற்கின்றார். ஏனென்றால்,

---

[1] 'தங்கத் தலைவாயில்', (The Golden Threshold) பக்கம் 14.

1902-ஆம் ஆண்டு முதற்கொண்டே, தம் முற்காலப் பருவத்தில் எழுதிய கவிதைகளிலும் ஒரு வசன கவிதைகளிலும் தவிர—அவரது கனவுலகத்தைத் தன் உண்மை வாழ்வில் அவர் பகிர்ந்துகொள்ள வில்லை; அவர் உருவாகி வந்த அரசியலிலும் பழுத்த காங்கிரஸ் வாழ்விலும் தம் கனவுலகத்தை உள்ளபடி பகிர்ந்துகொள்ள அவரால் முடியவில்லை. எனவே சரோஜினியின் பாவனு சக்திகளின் உயிர் நிலையாகிய மற்றை நிலையும் அதைச் சார்ந்த கனவுகளும், விடுதலைப் போராட்ட வீரர்களில் இணைபிரியாத ஒருவராக இருந் துங்கூட—அவரை வேறு பிரித்தே எடுத்துக் காட்டுகின்றன. அவரது உண்மைச் சொரூபத்தினுல் தமது சமகாலத் தொண்டர்களின்றும் வேறுபட்ட ஒருவராகவே அவர் விளங்கினுர். விளக்கமாகச் சொன்னுல் இடையரு விடுதலைப் போராட்டத்தின் மந்த கதி யோடும், கட்டுப்பாடுகள் நிறைந்த காந்தீயத்தின் அடக்கமான இயல்புகளோடும் வேறுபட்டுத் தோன்றும் வகையில் சரோஜினி தமது வண்ணமிக்க எழில் தோற்றத்தில் புன்னகை ஏந்திய சுதந் தரப் போக்குடன் தனித்து ஒளிவீசித் திகழ்ந்தார். ஆகையால் தான் அவரது முற்பருவக் கவிதைகளில் முதற் கவிதையாக, "ஒரு கனவின் பாடல்" (The Song of a Dream) அமைந்துவிட்டது.

"தனியே நான் ஓரிரவுக் கனவுலகில் விந்தைத்
தவவனத்தில் ஒளியூடே விம்மிதத்தில் நின்றேன்;
நனிசிறந்த காட்சிகளில் மயக்குமொரு மலர்போல்
நறுமணத்தின் உயிர்ப்பொன்று இதழ்விரியக் கண்டேன்;
சத்தியத்தின் உயிர்ப்பெல்லாம் பறவைகளாய்ப் பாடும்;
தனியன்பின் உயிர்ப்பெல்லாம் விண்மீனுய் மின்னும்;
நித்தியத்தின் சாந்தியது நீரோடை யாகி
நிகழ் அற்புதக்காட்டில் துயில்நாட்டில் நின்றேன்.

தனித்திருந்தேன் அற்புதமாம் மலர்த்தோப்பின் ஒளியில்
தனியன்பின் உயிர்ப்பெல்லாம் விண்மீனுய்த் திரண்டே
இனித்திருந்த எண்ணிளமை மென்பருவம் சூழ்ந்தே
எழில்திரண்டு கண்சிமிட்டி மின்னுவதைக் கண்டேன்
சத்தியத்தின் உயிரிசைத்த பாடலை நான் கேட்டேன்
தாகவிடாய் தணிந்திடவே கீழ்க்குனிந்து கண்டேன்
நித்தியநற் சாந்தியெனும் நீரோடை தவழும்
நீள்அற்புதக் காட்டில் துயில்நாட்டில் நின்றேன்".

இந்தக் கவிதை சரோஜினி 17 வயதுச் சிறுமியாய்க் கேம்பிரிட்ஜ் கிர்ட்டன் கல்லூரியில் பயின்றுகொண்டிருந்தபோது எழுதப் பெற்றது; 1901-ஆம் ஆண்டு இந்திய மாதர்கள் மாத இதழில் (The Indian Ladies' Magazine) வெளியிடப் பெற்றது.

சரோஜினி தீட்டிய மிகச் சிறந்த கனவுச் சித்திரங்களில் ஒன்று—புதுமையான வகையில்—கவிதை உருவில் அமையவில்லை; உரைநடைக் கற்பனையாக அமைந்துள்ளது. 1902-ஆம் ஆண்டு அவரால் வரையப்பட்ட 'நீலாம்புஜம்' என்ற உரைநடைக் கற்பனையே இங்குச் சுட்டப் பெறுவது. இவ்வுரைக் கவிதை பெரும்பாலும் அவர் கவிதைகளில் தீட்டப் பெறும் அதீதக் கற்பனையியல், இலட்சிய இயல்களின் வடிவமைப்புகளைப் பின்பற்றுவதாக அமைந்துள்ளது. சரோஜினியின் சிறுமிப் பருவத்தின் பெரும் பகுதியையும், மணவாழ்வில் பெண்மையின் முற்பருவத்தையும் சார்ந்த, வாழ்வுச் சூழ்நிலைகளை இவ்வுரைக் கவிதை சுட்டிக்காட்டுவதாகவும் உள்ளது.

சரோஜினி அதிகமாகச் சொல்வளம் மிக்க உரைநடைக் கவிதைகளில் திளைத்துள்ளார் என்பது குறித்தே ஒருவர் அவற்றை விரும்பக்கூடும். அவர் கவிதைகள் நீர்வீழ்ச்சிகளைப்போல் துள்ளி விழும். எதுகை மோனைகளின் கவர்ச்சிகளை நிரம்பப் பெற்றிருந்தும் அவரது உரைநடைக் கவிதைகளை விரும்புதற்குரிய சிறப்பான காரணமும் உண்டு. அவரது கவிதைகளில் நிரம்பி வழியும் எதுகைமோனைச் சொற்சிலம்பங்களின் சப்த ஜாலங்கள் சிலவேளைகளில் சலிப்பூட்டவும் கூடும். ஆனால் அவரது உரைக் கவிதையின் சொற்கள், அவர் யாப்பில் காணும் இரட்டையசை ஒலி விசித்திரத் தளைகளிலிருந்து விடுபட்டு விளங்குகின்றன. தம் சமகாலத்தில் பல்வேறு வகைப்பட்ட ஆங்கிலக் கவியுலகின் சட்டதிட்டங்கள் என்னும் வலையில் அகப்படாது விடுபட்டு நிற்கும் ஒருவராக 'நீலாம்புஜம்' என்ற உரைக் கனவில் சரோஜினி தனித்து நிலவுகின்றார்.

'நீலாம்புஜம்' 1902-ஆம் ஆண்டு இந்திய மாதர்களின் மாத இதழில் வெளியிடப்பட்டது. அது நடேசன் வெளியீட்டில் கவிஞரின் சொற்பொழிவுத் தொகுதியிலும் சேர்க்கப்பட்டு, மீண்டும் தோன்றிய போதிலும் சிலரே அதைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கக் கூடும்.[1] இக்கவிதையில் சரோஜினி ஓர் ஏகாந்தமான ஆன்மலயம் கூடி ஓர் இளநங்கைக்குரிய மிடுக்குடன் வண்ண வண்ண மலை வளையத்திடையே நெருப்புச் சுடர் வீசும் பன்னிறப் பளிங்குநீர்ப் பரப்புடைய ஓர் ஏரிகரைமேலே நடமாடும் காட்சியைக் காண்கிறோம். 'நல்லுறக்க மெல்லசைவில்', 'நீர் அலைகளின் தாளபேதங்களுடன் அடியொற்றி நடந்தபடி இங்கே சரோஜினி உலாவுகின்றார். ஒரு நங்கையின் நெஞ்சத்திலே நிறைந்துள்ள வண்ணத்தையும் அழகையும் தம் இலட்சியங்களோடு ஒருங்கு பின்னி உருவாக்கிய உளங்கவர் உருவம் ஒன்று இங்கே புதிய கவர்ச்சியுடன்

[1] சரோஜினி நாயுடுவின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும்: பக்கம் 1 தொடர்ச்சி (Speeches and writings of Sarojini Naidu- Page 1st Seg).

உருவாகிறது. அவர் விண்மீன்களை உற்று நோக்குவது பொருள் பொதிந்தது. அவ்விண்மீன்களின் நெருங்கமுடியாத தீப்பொறி களின் ஒளியிலிருந்து பலவகைப்பட்ட உற்சாகக் கனல் கொழுந்து விட்டு ஓங்கும் ஜுவாலைகளை எட்டிப் பிடிக்கும் வரையில்—அறி வைத் தேடி, வாழ்வைத் தேடி, அனைத்துக்கும் மேலாக இந்த அகிலாண்டத்தின் அழியாத அழகைத் தேடி, எல்லையற்ற இதய தாபங்களுடன் எழுகின்ற மனிதாபிமானப் பெருவேட்கையின் கொடுமுடியைத் தொட்டுப் பிடிக்கும் வரையில் அவ்விண்மீன்களை இடையறாது ஏறிட்டு நிமிர்ந்து நோக்குகிறார் அப்பெண்மணி.

சரோஜினி நாயுடு இந்நிலையில் திருமணமாகி நான்காண்டுகளே முடிந்து, இருபத்து மூன்று வயதே நிரம்பிய ஒரு பெண்ணைப் பெரு மிதம் நிறைந்த ஒரு தாயாய், மகிழ்ச்சி நிறைந்த ஒரு மனைவியாய் விளங்குகிறார். இங்கிலாந்திலும் இத்தாலியிலும் வாழ்ந்தபின் வாழ்க்கையின் அயல் நாகரிக இன்ப மணங்களையெல்லாம் நெஞ் சார நுகர்ந்து வளம் பெற்ற பின்னர் பாடுபட்டுப் பணி செய்யவும், கவிபாடிக் களிக்கவும் தாய் நாடு திரும்பிய ஒரு நன்மகளாய்த் தோன்றுகின்றார். இச்சூழ்நிலையில் மொட்டொன்று மலராகிப் பொன்னிறக் கதிரவனின் இளஞ்சூட்டின்முன் தன் மெல்லழகைத் திறந்து இதழ் விரித்துப் பொலிவதைக் காணலாம்.

''அது முதல் கொண்டு ஆழமான அறிவுப் பசியினாலும் தணிந் தறியா ஆன்மிக தாகத்தினாலும் பக்குவம் பெற்று நிரந்தரமான மர்மக் கற்பனை நிழலில் அவர் நுழைந்துவிடுகிறார். காற்றிலும் நீரிலும் ஒலிக்கும் கீதத்திலும், மலைச் சிகரத்தில் காணும் வைகறை வான்முகட்டிலும் கவிஞர்கள், தீர்க்கதரிசிகள், எல்லாக் காலங் களிலும் எல்லாவிடங்களிலும் ஒளிபரப்பிய ஞானிகள், கனவுலகச் சிற்பிகள்—இவர்கள் வாய் மலர்ந்த ஆன்ம நிலைகளிலும் எங்கும் விம்மி நிற்கும் அழகின் பெருங்களிப்பையெல்லாம் தேடித் தேடி மர்மக் கனவுகளில் சரோஜினி நுழைகின்றார்.''

முதல் முதலாக, சரோஜினி வெளியுலகில் அடியெடுத்து வைக்குங்கால் வடிக்கப்பட்ட கற்பனைப் படைப்பே 'நீலாம்புஜம்'. ஐதராபாத்தில் அவரது வாழ்வின் பின்னணியில் உருவாகிய உரைக்கவி இதுவாகும். வெள்ளியும் தங்கமும் வானவில்லின் வண்ண ஜாலங்களும் ஒளி வீசுகின்ற செல்வச் சமுதாயத்தில் அரண்மனைகளுக்குள்ளும் ஆடம்பர வீட்டுச் சுவர்களுக்குள்ளும் முகத் திரையிட்டு மூடி மறைந்திருந்த அந்த உலகமும், அதன் எதி ராக வெளியுலகில் ஒளி வீசும் கதிரவன், பறவைகளின் கீதம், செஞ்சிவப்பும் ரோஜாவும் ஆரஞ்சும் கலந்த வண்ணக் கலவை மலர்க் கொத்துக்களைத் தாங்கிய பூந்தோட்டங்கள், இலட்சிய

எழுச்சி மிகுந்த ஆக்கப் பணிகளுக்கான நிர்மாணத் திட்டங்கள் ஆகியவையே அவர்தம் கற்பனைப் பரவசத்திற்கு உயிர்ப்பூட்டின.

சரோஜினியின் இவ்வுரைப் பாடலில் ஒரு சிறுமி தன்னந்தனியாக உலகில் நடைபோடுவதைக் காணலாம். உணர்ச்சி மிக்க நெடுவட்ட முகத்தில் அழகிய கண்களால் ஒளி வீசி ''உள்ளே பூரித்து நிற்கும் இசை மயமான ஆன்மா''வைச் சுட்டிக் காட்டி நிற்கும் அழகிய சோபையுடன் அச்சிறுமி விளங்குகிறாள். தங்க வண்ணத்திலும் ஊதாச் சிவப்பு வண்ணத்திலும் உடையணிந்து சுருண்ட கருங் கூந்தலிலே கவர்ச்சி மிக்க மலர்சூடி, நீலாம்புஜப் பெண் அந்த ஏரிக்கரையை விட்டு நீங்கி, மலர்ந்த அலரியும் கனிந்த மாதுளையும் நிறைந்த நந்தவனத்தில் புகுகின்றாள். அங்கே ஒரு மண்டபம்; ''செப்பு விளக்குகளில் சந்தன நெய்யில் தோய்த்த திரிகளில் ஏற்றிய தீபங்கள் மங்கிய ஒளியுடன் அம்மண்டபத்தைக் காட்டிச் சுடர்கின்றன. அந்நங்கை அங்கேயே தயங்கி நிற்கிறாள். 'ஆன்மிக எழில் பொதிந்த அவள் முகத்தில்' அந்த இன்பப் புன்னகை ஊடுருவி நிற்கிறது. அங்கே 'தங்கமும் ஒளிச்செம்மையும் பச்சையும் கலந்த உடைகளில்' சில பெண்கள் அங்குமிங்கும் சாய்ந்தபடி இருப்பதையும், 'கிளர்ச்சியூட்டும் பனிக் குழம்பு' போன்ற மெல்லிய பட்டுச் சேலைகளில் சிலர் பூவேலைப் பின்னல் செய்வதையும், பஞ்சணையில் சாய்ந்தபடி மணமிக்க தாம்பூலங்களைத் தம் முத்துப் பற்களால் அசைபோட்ட வண்ணம் சிலர் சொகுசாகக் காட்சி வழங்குவதையும், காதல் கீதங்களை இசைத்தவண்ணம் சிலர் இன்பப் பொழுது போக்குவதையும் அவள் காண்கிறாள்.

இங்கே பண்டைய இந்தியாவின் அரசிளங்குமரிகளின் சுகபோக வாழ்வில் பொதுவாகத் தோன்றும் வழக்கமான பெண்ணுலகின் அசல் ஓவியம் ஒன்று வரையப்பட்டிருப்பதைக் காண்கிறோம். புதிய விருந்தாளிக்கும் இங்கே வரவேற்புண்டு. மாடப்புறுக்களுடன் சிறிது நேரம் விளையாடிய பிறகு இடைகழியில் நடந்து தன் அறையை நோக்கிப் புறப்படுகிறாள் அவள்; தன் அறைச் சாளரங்களைத் திறந்து தங்க இழையோடிய சிவப்புத் திரைகளை ஒதுக்கி வெளியே இருட்டை நோக்கி நிற்கிறாள்; தன் குழந்தை பருவ நினைவுகளால் உந்தப் பெற்றுத் தன் உணர்ச்சிக்கு வடிகாலாக ஏதோ குரல் கொடுக்கிறாள். கவிஞர்கள், தீர்க்கதரிசிகள் கற்பனைச் சிந்தனையாளர்கள், பேராசான்களின் ஜீவன்மிக்க கீதங்கள் அவளுக்கு உணர்வூட்டுகின்றன. இத்தகைய இயற்கைச் சூழ்நிலையில் வாழும் அவள், 'விதியை உருவாக்கும் சின்னஞ்சிறு அற்ப நிகழ்ச்சிகளின் மூலங்களிலும் கணத்துக்குக் கணம் மாறி வரும் ஒளி மிக்க, ஆனால் நிலையற்ற உலகினிடையே புதைந்து கிடக்கும் அமரத்துவத்திலும் நுழைந்து ஊடுருவிப் பார்க்கும் தணியாத வேட்கையை எப்போதும் தாங்கி நிற்கிறாள்.'

சரோஜினியின் குழந்தைப் பருவம் ஆர்வம் நிரம்பியது ஆயினும், இப்போது அது மறைந்து அவள் ஓர் 'இசைமயமான பெண்ணாய்' நிற்கிருள். அவளது கவிதையுள்ளம், 'வாக்கைக் கடந்த ஒரு காட்சியோடும் நுண்ணிய விவரிக்கவொண்ணுச் சிந்தனையோடும் ஒன்றித்து நிற்கிறது. இலயத்தின் வயப்பட்ட ஒரு கவியின் ஆன்மாவை உடனடியாக நெருக்கும் முடிவான தேவைகளோடும் தன் கவியுள்ளம் கலந்து உறவாட அதற்குரிய அன்பினையும் உயிர்நிலையையும் நாடித் தேடி அவள் நின்று கொண்டிருக்கிருள்.

நீலாம்புஜம், கீழ்மாடத்திலுள்ள பெண்களின் சிரிப்பை உற்றுக் கேட்கிருள்; சங்கீதத்தையும் களியாட்டங்களையும் கூடக் கேட்கிருள்; சற்றுத் தயங்கி நிற்கிருள்; அவள் இதழ்களில் தோன்றும் குமிண் சிரிப்புகள் 'ஆழ்ந்த துயரத்தையும் உட்கரந்த கண்ணீரையும் புலப்படுத்தும் புன்னகை'யை வெளிக்காட்டுகின்றன. அவள் கடந்து செல்லும் வாழ்நாட்களையெல்லாம் மறந்து விட்டு அழகுக்கு ஏங்கும் ஆன்ம பரவசத்தின் ஏகாந்தத்தில் நுழைந்து விடுகிருள்; 'அழியாத வாழ்வில் தணியாத ஆர்வம் மிக்க கனவுலகவாசியாய், மென்மையான ஆசைக் கனவுகள் நிறைந்த பெண்மணியாய், நிறைவேருத பாரம்பரியமான இன்பச் செல்வப் பேறுகளை அடைய ஏங்கி ஏங்கி விம்முற்று அழுதாள்.

அடுத்து இந்த இளம் கவியரசியாம் அரசியல்வாதி ஒரு கேள்விக் குறியுடன் நிற்கிருள். எதைத் தேடி? இனி, அவள் நடத்தப் போகும் உண்மையான வாழ்வில் நிறைவேருத இந்தப் பரம்பரைச் செல்வப் பேற்றை அடைந்தாளா? இத்தகு வினுக்களுடன் ஒரு வியப்பும் தோன்றும். ஏனென்ருல் சரோஜினியிடம் அவரது இன்ப உணர்ச்சியினிடையே—வண்ண எண்ணங்களிடையே எப்போதுமே புதைந்து கிடக்கும் ஒரு துயர உணர்ச்சி இழையோடிக் கொண்டிருந்தது. அவரது நிறைவேருத கனவுகளைப் புலப்படுத்தும் பேச்சுகள் கவிதைகளின் பெரு மகிழ்ச்சியினூடே—அடியோடு வீழ்த்தி அழிக்கப்பட்ட அந்த அற்புத வனத்தினுள்ளே—இந்தியாவுக்காக, விடுதலைக்காக ஏங்கும் அவளது ஆன்ம வேதனையாக—இடையே இழையோடிக் கொண்டிருந்தது.

''எங்கள் கரங்கள் பலவீனமானவையே; ஆனல்
எங்கள் பணி நளினமானது;
இருட்டின் ஊடே உங்கள் ஒளிமிக்க வைகறையினைக்
கனவில் கண்டோம்!
ஆழ்ந்த அமைதியிலே, நாளை வரும் ஆனந்தக் களிப்புக்காக
அயராது உழைத்தோம்;

எங்கள் துயரக் கேணியிலிருந்து சுரக்கும் தண்ணீரால்
நீங்கள் விதைத்த
விதைகளுக்கு நீர் பாய்ச்சினோம்;
உங்கள் விழிப்பின் மகிழ்ச்சிப் பொழுதை வளமாக்க
நாங்கள் ஓயாது உழைத்தோம்;
எங்கள் இரவுக் காவல் முடிந்து விட்டது;
அதோ பகல் ஒளி மலர்ந்து கொண்டிருக்கிறது.''

நாம் எப்போதுமே அழியா வாழ்வை நோக்கி, அயரா வேட்கை கொண்ட அந்த ஏகாந்தக் கன்னியைத் திரும்பப் பார்க்கிறோம். அந்த நித்திய நிலையை அவளது நீண்டகாலப் பணிகளில்—அவளுக்கே தெரியாமல் எதிர்பாராத நிலையில்—அவள் கண்டாள். ஏனெனில் இப்பருவத்தில் தான் தனது வாழ்வின் பொன்மயமான வாயிற்படியில் அவள் நின்றாள்.

## 2. கன்னிப் பருவம்

சரோஜினி 1879-ஆம் ஆண்டு பிப்ரவரி 13-ஆம் நாள் எட்டுக் குழந்தைகளில் மூத்த பெண்ணாகப் பிறந்தார்.

எட்மண்டு கோஸ் அவர்கள் 'காலப் பறவை' (Bird of Time) என்ற சரோஜினியின் இரண்டாவது கவிதைத் தொகுதியின் முன்னுரையில் கூறுகிறார்: ''சரோஜினி, துக்கத்துடன் வாழ்நாள் முழுவதும் நட்புப் பூண்டவர்—அவரது பிரபலமான வாழ்க்கையில் இது ஒரு முகமாகும்—ஆறுதலினால் கிடைக்கும் தனி மகிழ்வையும் சோர்வையும்கூட உணர்ந்தவர். அவரது முல்லைச் சிரிப்பு மாலைகளை மங்கச் செய்து, வாழ்க்கையெனும் நீலவானத்தை இருளச் செய்தன; அவர் கண்ட, கூடுதலான துன்பங்கள்.'' அவரது துன்பங்கள் ஒரு தம்பியின் மரணத்திலிருந்து தொடங்கின. நெடுகிலும் பல துன்ப அனுபவங்களினால் அவர் வருந்தினார். இந்நிகழ்ச்சிகள் அவரை ஆழ்ந்த கவிதைகளை எழுத ஏன் ஊக்குவிக்கவில்லை என்று பலர் வியப்படைகின்றனர். எடுத்துக்காட்டாகக் கோகலேயின் இறப்பையொட்டி, பலராலும் மேற்கோள் காட்டப்படுவதும் அநுபவிக்கப்படுவதுமான ஆழமில்லாத கவிதை ஒன்றையே அவர் எழுதினார். ஒரு பெரிய மேதையான நெருங்கிய நண்பரின் இறப்பே அவரை ஆழம் பொருந்திய கவிதையை எழுத உந்தவில்லை. அடிக்கடி தம் குழந்தைகள், சகோதரிகள், நண்பர்களைப் பற்றிக் கவிதைகள் எழுதினாலும் அவை யாவும் நோக்கற்ற பாவன்மையோடு அலங்கரிக்கப்பட்டு, அவர்கள் பெயரையோ அல்லது வாழ்க்கையையோ சித்திரிப்பதோடு நின்றுவிடுகின்றன.

சரோஜினி அகோரநாத் சட்டோபத்யாயாவுக்கும் வரத சுந்தரிக்கும் பிறந்த அன்பு மகள். அகோரநாத் தம்மைச் சாட்டர்ஜி என்று முதலில் அழைத்துக்கொண்டார். இவர் கிழக்கு வங்காளக் கிராமமான பிரம்ம நகரத்திலிருந்து வந்தவர். அகோரநாத்தின் முன்னோர்கள் இயற்கையை விரும்புபவர்கள்; காட்டில் தியானம் செய்பவர்கள்; பரம்பரையான அறிவுத் திறனை அவரும் பெற்றிருந்தார். தம் தந்தையின் வாழ்க்கை பெரிதும் வீழ்ச்சியுற்றது என்று சரோஜினி கூறினாலும், அவர் அடைந்த வெற்றிகள் பெரியன. அவர் சம்ஸ்கிருதத்தில் வல்லவர்; மேனாட்டு இலக்கியங்களைப் பரவலாகக் கற்றவர்; ஆங்கிலம் எபிரேய மொழிகளிலும், பிரெஞ்சு, ஜெர்மனி உருஷ்ய மொழிகளிலும் புலமை பெற்றவர். ஒவ்வொரு நாளும் எவையேனும் புதியனவற்றைக் கற்கவேண்டு

மென்பது அவரது குறிக்கோள். கல்கத்தாவில், கேசவ சந்திர சென்னுடன் தொடர்பு கொண்டு பிரம்ம பக்தி முறையான நவபீடணத்தில் சேர்ந்தார். கேசவ சந்திரசென் தொடங்கிய பாரத் ஆஸ்ரமத்தில் முதல் முதல் இருந்தவர்களில் ஒருவரே அவர் மனைவி.

அகோரநாத்தின் விருப்பப் பாடம் வேதியல். அந்த விருப்பம் ஐதராபாத்தில் ஒரு பழைய பரிசோதனைச் சாலையில் பின்னிரவில், கொப்பறைகளுக்கு முன்னால் அமர்ந்தவாறு புதிய விதிமுறைகளைக் கண்டறியவும், சாதாரண உலோகங்களைத் தங்கமாக்கவும் உழைப்பதற்குத் தகுந்த ஆர்வமுள்ள இரசவாதியாக அவரை மாற்றியது. ''அன்பே! இரவும் பகலும் ஆய்வுகள் நடைபெறுகின்றன. தெளிந்த பரிசோதனைக் குறிப்புகளைக் கொண்டு வருபவர் சகோதரரைப் போல வரவேற்கப்பட்டனர். இந்த இரசவாதமே அந்தமிலா அழகினைத் தேடித் திரியும் கவிஞனின் உலகியல் உதாரணமாகும். இரசவாதியும் கவிஞனும் உலகின் மாயத்தை அறிய விழையும் இரட்டைப் படைப்பாளிகள்; தந்தையை ஆர்வத் திறன் தூண்டியது; என்னை அழகுணர்ச்சி தூண்டியது.''[1]

அகோரநாத் ஐதராபாத்தில் தங்குவதற்கு முன்னால் வேதியலில் உதவித்தொகை பெற்றுத் தூரநாடு சென்றார். 1877-இல் எடின்பர்க் பல்கலைக் கழகத்தில் அறிவியலில் டாக்டர் பட்டம் பெற்றார். அவர் 1878-இல் இந்தியாவுக்குத் திரும்பிய போது தென்னிந்தியாவில் ஐதராபாத்திற்கு வரவேற்கப்பட்டார். அங்கு ஆங்கில மொழி வழிப்படி கற்பிக்கும் ஒரு பள்ளியை ஆரம்பித்தார்; பிறகு அகோரநாத் ஐதராபாத் கல்லூரியை நிறுவினார்; அதன் முதல்வரானார். அது பின்னர் நிசாம் கல்லூரி ஆயிற்று. விரைவில் அகோரநாத் தம் மனைவியின் துணையுடன் பெண் கல்வியில் கவனம் செலுத்தத் தொடங்கினார். மற்றப் பெண்களின் துணையுடன் உஸ்மானியா பல்கலைக் கழகத்தின் பகுதியாகப் பெண்கள் கல்லூரி ஒன்று தொடங்கப்பட்டது. அகோரநாத் சாதிப் பிரிவினைக்கும் பால்யத் திருமணத்துக்கும் எதிராக இருந்தார். ஐதராபாத்தில் பல ஆண்டுகளாக அவரது சேவைகள் பெரிதும் பாராட்டப்பட்டன. ஆனால் அவர் அரசியலில் ஈடுபடவே, பணியிலிருந்து தாற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டு ஐதராபாத்தை விட்டுச் சில காலம் விலகியிருக்க நேர்ந்தது. சில ஆண்டுகள் கழித்துப் பின் மீண்டும் நிசாம் கல்லூரி முதல்வரானார். ஐதராபாத்தில் பிரிட்டிஷ் இந்தியாவின் சிறப்புத் திருமணச் சட்டம் அறிமுகமாவதற்கு இவரே பொறுப்பானவர். 1885-இலிருந்து

[1] The Golden Threshold, பக். 15

இந்திய தேசீய காங்கிரஸின் தொடக்கத்திலிருந்தே அவர் சிறந்த பங்கேற்ருர்.

ஐதராபாத்தில் சரோஜினி கன்னிப் பருவத்தில் இருந்தபோது அவர் இருந்த வீட்டை, அவரது சகோதரக் கவிஞர் பின்வருமாறு வருணிக்கிருர்: ''அறிவுக்கும் பண்பாட்டுக்கும் காட்சிச் சாலையாக எங்கள் வீடு அனைவருக்கும் ஒருபடித்தாகத் திறந்திருக்கும். அந்தக் காரணத்தால் மாயையின் உண்மையறியும் எல்லையில் இருப்போர் உட்படப் பலதிறப்பட்டவர் கலந்துள்ளும் ஓர் உயிர்க்காட்சிச் சாலை அது.''[1]

அவர் வீட்டில் அகமும் முகமும் மலர்ந்த வரவேற்புக் காட்டப் பட்டது. ''தங்கத் தலைவாயில்'' என்ற நூலின் முன்னுரையில் ஆர்தர் சைமனுக்கு எழுதிய சரோஜினியின் கடிதத்தின்மூலம், எத்தகைய சிறந்த வரவேற்பு அனைவருக்கும் இருந்தது என்பதை அறியலாம். தமக்கு வேண்டியவரைச் சரோஜினி தம் வீட்டிற்கு வரவேற்கிருர்: ''வாருங்கள், வந்து மார்ச்சு மாதக் காலையழகை என்னோடு பகிர்ந்துகொள்ளுங்கள். இந்தச் சிறந்த பொன்னிறமும் நீலமும் கலந்த வானம், கதிரொளியைத் தொடும் சிவப்பு அல்லி கள், மறக்கவே முடியாத இனிமையைக் கொடுத்துத் தென்றலில் தவழ்ந்துவரும் வேம்பு, சண்பகம் ஆகியவற்றின் இன்ப வெறி யூட்டும் மணங்கள்; கூடுகட்டும் காலங்களில் வாழ்வின் பேரின்பங் களைக் கிறீச்சிட்டுப் பாடிவரும் ஆயிரக்கணக்கான பொன்னிற நீல நிற வெண்ணிறப் பறவைகள்; எங்கும் வாழ்வுக்காக—அன்புக் காகக் கொழுந்துவிட்டெரியும் ஆவலானது மிகுதியாகவும் வெளிப் படையாகவும் நிரம்பியிருக்கிறது. அந்தச் சிவப்பு அல்லிகள் எனது இதயக் குருதியால் இதழ் இதழாகப் பின்னப்பட்டவை என்பது உங்களுக்குத் தெரியுமா? துடிக்கும் இச்சிறிய பறவைகள் எனது ஆன்மா உருவாக்கிய இசை; இந்த இனிய மணங்கள் எனது கற்பனைச் சாற்றில் கலந்த உணர்ச்சிகள்; அந்த நீலப் பொன்னிற வானம் 'நானே தான்.' எனது இந்தப் பகுதி மற்ருெரு பகுதியை— நரம்பு சதைகளாலாகித் துன்பமடைந்து அழும் மற்ருெரு பகுதி யைத் தொடர்ச்சியாக, துடுக்காக, ஆமாம்! சிறிது வெளிப்படை யாகவே வெற்றி பெறுகிறது. இது நாளையோ இருபது ஆண்டு களுக்குப் பிறகோ மடியவேண்டும்.''[2]

அவரது கடிதங்களிலும் கவிதைகளிலும் இத்துன்பத்தின் ஓலம் எப்போதும் இருக்கிறது. அவர் நிலையாக நோய்வாய்ப்பட்டிருந் ததையும் 70 ஆண்டுவரை அநுபவ அழுத்தமும் முயற்சிகளும் மிகுந்த சுறுசுறுப்பான வாழ்க்கையை வாழும் வகையில் அவற்றைக்

---

[1] 'Life and Myself' by Harin Chandranath Chattopadhyaya பக். 15
[2] The Golden Threshold, பக். 17 & 18

கம்பீரமாக அவர் வென்றதையும் அவருடன் தனிப்பட்ட முறையில் பழகிய நம்மைப் போன்றோர் அறிவர்.

இங்கும் அவரது கடிதங்களிலுள்ள சிறந்த உரைநடை மிக அருமையானதாகத் தோன்றுகிறது. சரோஜினி அதிகமாக உரை நடை எழுதியிருக்கலாம் என்று படுகிறது.

ஆர்தர் சைமனுக்கு எழுதிய இக்கடிதம் 'தங்கத் தலைவாயில்' என்ற அவருடைய புகுந்த வீட்டிலிருந்து எழுதப் பட்டது. அவரது முதற்கவிதை நூலுக்கும் பெயர் இதுவே. குழந்தைப் பருவத்தில் அவர் தங்கியிருந்த வீடு வண்ணமும் இசையும் நிறைந்த இன்ப மாய் விளங்கியது. அவரது தாய் வரதசுந்தரியின் சமையலறை எப்போதும் உணவு வகைகளால் நிறைந்திருந்தது. விருந்தினர் கள், இந்து, முஸ்லீம் அனைவரும் மேற்கத்திய முறையில் தயாரிக்கப் பட்ட உணவு வகைகள் பலவற்றையும் சுவையான இனிப்புகளையும் பெற்றனர். சமைப்பதைச் சரோஜினியும் விரும்பினார் என்பதில் வியப்பொன்றும் இல்லை. சில ஆண்டுகளில் அவரே இனிய உணவு வகைகளில் பிரியமுள்ளவர் ஆனார். பணியாட்கள் அவர் வீட்டில் நிரம்பி நெருக்கமான பிணைப்பைக் கொண்டனர்.

சரோஜினியின் பெற்றோர் தமக்குள் வங்காளத்தில் பேசிக் கொண்டனர். ஆனால் தம் குழந்தைகளுடன் இந்துஸ்தானியிலும், பணியாட்களுடன் தெலுங்கிலும் உரையாடினர். வரதசுந்தரிக்கும் பல மொழிகள் தெரியும் என்று கூறப்படுகிறது. சரோஜினியின் மூத்த சகோதரர் வீரேந்திரநாத் 16 மொழிகளில் வல்லுநர். சரோஜினி தம் தந்தையார் கட்டாயப்படுத்துவதற்கு முன்னால் ஆங்கிலத்தை அறிய விரும்பவில்லை. அவர் ஆங்கிலத்தில் பேச மறுக் கவே அவரை ஒரு நாள் முழுவதும் அறையில் தள்ளிப் பூட்டி வைத்துத் தந்தையார் தண்டித்தது உண்மை. சரோஜினி அந்தத் தண்டனையை வரவேற்றதாகத் தெரிகிறது. ஏனெனில் அவர் அன்று முதல் தம் தந்தைக்குக் கட்டுப்பட்டு, ஆங்கிலத்தில் பேசுவது மட்டுமல்லாமல் அதில் உண்மையான முதன்மை பெறவும் முடிவெடுத்தார். இந்த முடிவை அவர் மிக அழுத்தமாகப் பின் பற்றியதால், உருது மொழியினை மிக நன்றாக அறிந்திருந்தாலும், வேறு எந்த மொழியிலும் எழுதாமல் ஆங்கிலத்தில் மட்டுமே எழுதினார்.

சட்டோபாத்யாய குடும்பத்தினர் வங்காளிகள். அவர்கள் தங்கியிருப்பதோ தெலுங்கு தேசம். வீட்டில் நான்கு மொழி கள் பேசப்பட்டன. பெற்றோர் உரையாட வங்காளம்; குழந்தை களுடன் பேச ஆங்கிலம்; பணியாட்களுடன் பேசத் தெலுங்கு; வீட்டுக்கு வருபவருடன் இந்துஸ்தானி; உருது, ஆங்கிலம் இவை

களும் பயன்பட்டன. ஆகவே முழுமையாக நோக்கினுல் மற்ற இந்திய மொழிகளைக் காட்டிலும் ஆங்கிலத்தில் பேசவே அவர்களுக்கு எளிமையாக இருந்திருக்க வேண்டும். அக்கால வாழ்க்கையைச் சரோஜினி இப்படிக் குறிப்பிடுகிருர்:

''நான் சிறு குழந்தையாக இருந்தபோது, கற்பனையும் கனவும் காணும் தன்மையோடு இருந்தாலும் கவிதை எழுதவேண்டும் என்ற தனி விருப்பம் கொண்டவளாக நினைக்கவில்லை. என் தந்தையின் நேர் மேற்பார்வையில் எனது பயிற்சி ஆழ்ந்ததும் அறிவியல் நோக்குடையதுமாக அமைந்தது. நான் ஒரு கணித மேதையாகவோ, அறிவியலறிஞராகவோ திகழ வேண்டும் என்று தந்தையார் முடிவெடுத்திருந்தார். நான் அவரிடமும் மற்றும் (இளையவயதில், விரும்பத்தக்க வங்காளத்து இசைப்பாடல்கள் சில இயற்றிய) எனது தாயிடமும் பரம்பரையாகப் பெற்ற கவிதையார்வமே வென்று நிலைத்தது. எனக்குப் பதினோராம் வயதில் ஒரு நாள் அல்ஜீப்ராக் கணக்கினைப் போட்டுப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தேன். அது சரியாக வரவில்லை. எதிர்பாராமல் அதற்குப் பதிலாக ஒரு முழுக் கவிதை தோன்றியது. நான் அதை எழுதினேன். அந்நாள் முதல் எனது 'கவிதை வாழ்க்கை' தொடங்கியது. பதின்மூன்றும் வயதில் 1300 அடிகளைக் கொண்ட 'ஏரியின் அழகி' என்ற நீண்ட பாடலை ஆறு நாட்களில் எழுதினேன். 'நான் நோய்வாய்ப்பட்டிருக்கிறேன், ஆகவே ஒரு நூலையும் தொடக் கூடாது' என்று கூறிய எனது மருத்துவரோடு முரண்பட வேண்டும் என்பதற்காகவே, அதே அவசரத்தில், கொஞ்சமும் நினைந்து பாராமல் உணர்ச்சி ததும்பும் 2000 அடி கொண்ட ஒரு நாடகத்தை எனது பதின்மூன்றும் வயதில் எழுதினேன். இவ்வேளையில் எனது உடல் நிலை சிதைந்தது. எனது முறையான படிப்பு நிறுத்தப்பட்டது. பெரும் வெறியுடன் நான் படித்தேன். என் படிப்பின் பெரும் பகுதியை எனது பதினுன்கு முதல் பதினுறு வயதிற்குள் முடித்தேன், எனக் கருதுகிறேன். ஒரு புதினம் எழுதினேன்; கட்டுக் கட்டாகக் குறிப்புகள் பல எழுதி வந்தேன். அந்நாள்களில் என்னை நான் முழு உணர்ச்சியுடன் ஈடுபடுத்திக் கொண்டேன்.''[1]

அகோரநாத், சரோஜினி இளம் பருவத்தில் கொண்டிருந்த பேரறிவுத் திறனை உணர்ந்தார். அவர் பள்ளியிறுதித் தேர்வில் வெல்ல வேண்டுமென்று முடிவெடுத்தார். பெண்கள் படிக்கத் தகுந்த பள்ளி ஐதராபாத்தில் இல்லாமற் போகவே அவர் சென்னைக்கு அனுப்பப்பட்டார். அங்கு அந்த நாள்களில் தெற்குத்

[1] The Golden Threshold, பக்கம் 11-12

தீபகற்பத்தை உள்ளடக்கிய சென்னைப் பல்கலைக் கழகத்தில், பள்ளியிறுதித் தேர்வில் முதல் வகுப்பில் முதல்வராகப் பன்னிரெண்டாம் வயதிலேயே தேர்ச்சி பெற்றார். 1891-இல் எந்தத் தேர்வும் எளிதாக இருக்காது. மகளிர் உயர் வகுப்பில் படிப்பதும் எதிர்பார்க்கப்படுவதில்லை. அவரது வெற்றி இந்தியா முழுவதும் வியப்பையும், புகழையும் ஏற்படுத்தியது. ஆனால் அவர் விளம்பரத்தை விரும்பவில்லை, 'உண்மையில், நான் மகிழ்ச்சி அடையவில்லை; அது எனக்கு நிகழவே இல்லை' என்று ஆர்தர் சைமனிடம் ஒப்புக் கொண்டார்.

சரோஜினி அதன்பின் வேறு எதிலும் தேர்ச்சி பெறவில்லை. அல்லது கல்லூரித் தேர்வுகளைப் பிறகு எழுத முயலவும் இல்லை. இது அவர் வாழ்க்கையின் ஒரு புதிராக உள்ளது. கதை பொதி பாடல்களையும், புதினங்களையும் பத்திரிகைகளுக்கு எழுதுவதை அவர் விலக்கியதைப் போலவே தேர்வுகளையும் விலக்கினார். இசைப் பாடல் எழுதுவதில் தம் வாழ்க்கையைத் திருப்பினார். பிறகு அவரே பாடல் எழுதுவதையும் நீக்கிவிட்டு அரசியல் நடவடிக்கையில் மட்டும் தம் கவனத்தை ஆழச் செலுத்தினார். கேம்பிரிட்ஜ், கிர்ட்டன், லண்டன் அரசர்க் கல்லூரிகளில் அவர் பிறகு கற்றாலும் 18-ஆம் வயதில் ஒரு பட்டமும் பெறாமல் இந்தியா திரும்பினார். ஆனால் அவரது ஆங்கில இலக்கியப் படிப்பும் லண்டனில் பெற்ற இலக்கிய உலகத் தொடர்பும் சாதாரணப் பட்டங்களால் பெறும் சிறப்புக்களை விட மிகுந்த மதிப்புடையன. பின்னர் அவர் ராயல் இலக்கியக் கழகத்தின் அங்கத்தினர் ஆனார். பல்கலைக் கழகங்கள் பல அவருக்கு 'டாக்டர்' பட்டம் அளித்தன.

பள்ளியிறுதித் தேர்வில் தேர்ச்சி பெற்ற பிறகு சரோஜினி ஐதராபாத்துக்குத் திரும்பினார். பெற்றோர் வீட்டில் 1892 முதல் 1895 வரை தங்கினார். சரோஜினியின் வாழ்வில் மகிழ்ச்சியான ஒரு சில ஆண்டுகள் இவை. இவர் பரந்த படிப்பில் ஈடுபட்டார். இவரது பெற்றோரும், பலதிறப்பட்ட கொள்கைகள், இனங்கள், வகுப்புகள் கொண்ட நண்பரது பெரிய கூட்டமும் அளித்த இன்பகரமான வீட்டு வாழ்வில் பேருவகை கொண்டார்.

சரோஜினி தம் 11-ஆம் வயதில் 'ஏரியின் அழகிய திருமதி' என்பதை முன்னரே எழுதியிருந்தாலும் இப்போது முதலில் பாடல்களையே எழுதத் துணிந்தார். பிறகு வெளி வந்த அவரது பாடல்கள் சிறியவை; இசைப் பாங்குடையவை; கதை பொதி பாடல்களை எழுதவோ பாடல் வடிவத்தை வேறுபடுத்திப் பதினலடிக் கட்டளைப் பாடல் (Sonnet)களாக்கவோ அவர் எப்போதும் துணியவில்லை.

13 முதல் 15 வயது வரை அவர் பல கவிதைகள் எழுதினார். அவை அவரது தந்தையால் தனியாக வெளியிடப்பட்டன.[1] வயதுக்கு மிஞ்சிய அறிவுக் கூர்மையையும், முதிர்ந்த அறிவையும் அவை புலப்படுத்துகின்றன. ஆனாலும் அவை மிக மென்மையானவை; துள்ளித் ததும்பும் இயல்புடையவை.

1896-இல் சரோஜினி இங்கிலாந்திற்கு அனுப்பப்பட்டார். அவர் மீது கொண்ட காதலை டாக்டர் நாயுடு அறிவித்ததும் அவரை மணக்க முறைப்படி வேண்டியதும் இதற்கு முக்கிய காரணமாம். டாக்டர் நாயுடுவை மணக்க, சரோஜினியின் பெற்றோர் அனுமதி அளிக்காததற்கு இரண்டு காரணங்கள் சஞ்சலம் கொடுத்தன. அவர்கள் மிக இளையவர்கள்—சரோஜினி பதினாறே வயது நிரம்பியவர். அகோரநாத் பால்யத் திருமணத்துக்கு எதிரானவர். மற்றும் டாக்டர் நாயுடு தம் மனைவியை முன்னரே இழந்தவர். மேலும் சரோஜினியைவிடப் பத்து வயது மூத்தவர். மற்றும், டாக்டர் நாயுடு தாழ்ந்த குலத்தைச் சார்ந்தவர் என்பது மற்றொரு காரணம். அகோரநாத் மூன்று ஆண்டுகளுக்கு முன் மறுத்த அவரையே, 1898-இல் இங்கிலாந்திலிருந்து அவர் திரும்பியவுடன் மணக்க அனுமதி அளிக்கப்பட்ட காரணத்தால் இந்த இரண்டாவது காரணம் அவ்வளவு முக்கியமாகத் தோன்றவில்லை. கலப்புத் திருமணங்களை அகோரநாத் எதிர்த்தார் என்று கூறுபவர்கள் அவர் ஆர்வமுள்ள சீர்திருத்தவாதி என்பதையும், சாதிகளை அழிக்க முயன்றார் என்பதையும் நினைவில் கொள்ளுதல் வேண்டும். நிசாம், சரோஜினிக்கு மனமுவந்து உதவித்தொகை அளித்தார். 1895 செப்டம்பரில் சரோஜினி மேல் படிப்புக்காக வெளிநாட்டிற்குக் கப்பலில் பயணமானார்.

[1] 'Poems' by Miss Chattopadhyay, 3rd Oct. 1896, published by Aghornath Chattopadhyay, 1892-96 இடையில் எழுதப் பெற்ற கவிதைகளின் தொகுப்பு.

## 3. ஆங்கில அரங்கு

1895-இல் பதினாறு வயதுகூட நிரம்பாத ஓர் இந்தியப் பெண் ஆங்கில அரங்கில் திடீரென நுழைந்து விக்டோரியா காலத்து வரவேற்பறைகளைப் பரபரப்பில் ஆழ்த்தினார். அவர் வளராத குறுகிய மனப்பான்மை கொண்ட மக்களை மட்டுமல்லாமல், கவிதைகளை வறண்ட மரபுப்படி திறனாய்வோரையும், தட்டி எழுப்பினார், இந்தியத் துணைக்கண்டத்தின் இயல்பான அறிவுத் திறனாலும் அழகுணர்ச்சித் திறனாலும்.

சரோஜினி தம்மிடம் அறிமுகமானபோது எட்மண்டு கோஸ் அவரைப்பற்றி எழுதுகிறார்: ''அவர் ஒரு பதினாறு வயதுக் குழந்தை. பள்ளத்தாக்கில் மலர்ந்த அல்லி மலர்களைப் போலத் தாமரையோ கள்ளியோ இருப்பதில்லை. அதைப் போலத் தன்னையொத்த வயதுடைய ஆங்கிலப் பெண்போல அவர் இருக்கவில்லை. அவர் ஏற்கெனவே மிகச் சிறப்பான அறிவு முதிர்ச்சியைப் பெற்றிருந்தார்; கண்டோர் வியப்படையும் வண்ணம் நன்றாகப் படித்திருந்தார். உலகத் தொடர்பு கொள்வதில் மேலைநாட்டுக் குழந்தையை விட மிக உயர்ந்திருந்தார்.''[1]

ஆர்தர் சைமன்ஸ் என்பவர் சம காலத்தில் வாழ்ந்த மற்றோர் ஆங்கில அறிஞர், சரோஜினியை ஊக்கியவர். 1896-இல் சரோஜினி தம்முடைய முதற் கவிதைகளைத் தம்முன் படித்ததைக் குறிப்பிடுகிறார். ''அவர் எங்கள் மத்தியில் அமர்ந்தார்; எங்களை அளவிட்டார். அவருடைய சொற்றொடரிலேயே கூறினால் 'ஆன்ம ஒளி' போன்ற ஒன்று அவர் முகத்தின் பின்னணியில் சென்றதைச் சிலர் உணர்ந்தனர். அவரது கண்கள் ஆழமான பொய்கைகளைப் போல் இருந்தன. அவற்றின் ஆழத்தில், மிக ஆழத்தில் விழுவதைப் போல நீங்கள் தோற்றமளிக்கிறீர்கள்.''[2]

எட்மண்டு கோஸ் மேலும் எழுதுகிறார்: ''லண்டனுக்கு வந்த சில நாள்களுக்குள் சரோஜினி, ஏதோ எதிர்பாரா நிகழ்ச்சியில் (எந்த நிகழ்ச்சி என்பது இப்போது எனக்கு மறந்துபோய்விட்டது, —ஆனால் அந்த நிகழ்ச்சி எங்களுக்கு மிக அதிர்ஷ்டவசமானது) எங்கள் வீட்டில் அறிமுகம் செய்யப்பட்டார். அவர் விரைவில் மிக வரவேற்கத்தக்க நெருங்கிய விருந்தினரானார். பல கவிதைகளை, ஆங்கிலக் கவிதைகளை எழுதுவதை மிகத் தீவிரமான, மிகக் கருணை

[1] 'The Bird of Time' பக். 3 & 4

[2] 'The Golden Threshold', பக். 23

மிக்க அவர் விருந்தினரிடம் பல நாள் மறைக்க முடியாதது இயற்கையே.''

ஆங்கில உலகில் புகழ்மிக்க ஒருவரைச் சரோஜினி சந்திப்பதற்கு ஒரு வாய்ப்பாக, அவருடன் பயின்ற ஒருவர் அந்த இளைய இந்தியக் கவிஞரை எட்மண்டு கோஸிடம் அறிமுகப்படுத்தினர். அது முதல் தாம் பெற்ற ஊக்கத்தால் சரோஜினி தம் வாழ்க்கையின் தொடர்ந்த இருபது ஆண்டுகளைக் கவிதைகள் எழுத அர்ப்பணித்தார். மேலும் ஆங்கில மொழியில் எழுதி எழுதியே இந்திய நாட்டைப்பற்றி ஆங்கிலேயருக்கு அறிமுகப்படுத்தினர். இது அவருடைய அசைக்கமுடியாத குறிக்கோளாகத் தோன்றுகிறது.

சரோஜினி தம் படிப்பினை முதலில் லண்டனில் அரசர் கல்லூரியில் தொடங்கினர். பிறகு அவர் கிர்ட்டன், கேம்பிரிட்ஜ் ஆகிய கல்விக் கூடங்களுக்குச் சென்றார். ஆனல் அவர் ஒரு பட்டதாரிப் படிப்பினைப் பெறுவதற்குரிய ஆர்வத்தை இழந்துவிட்டதாகத் தெரிகிறது. கேம்பிரிட்ஜில் விரிவுரை அறையை அவர் ஒதுக்கிவிட்டு அண்மையில் இருந்த வனங்களில் கனவுநிலையில் காலங் கடத்துவார். இங்கு ஆங்கிலப் புறநகர்களைப்பற்றியும், அந்த அழகு நகரின் மலர்கள், பறவைகளைப்பற்றியும் எழுதத் தொடங்கினர். இதற்காக எட்மண்டு கோஸ் இவரை இரக்கமின்றிக் கண்டித்தார்.

தேசீய உணர்வு கலவாத, செயற்கையான—வெறுக்கத்தக்க—வடிவம் எதுவும் இல்லாத, அவர் முன்னர் எழுதிய கவிதைகளின் நடையைக் குறித்துச் சிலர் வருந்துவர். ஆனல் அவை அவரது விமரிசகரால் நிலையாகப் படம் பிடிக்கப்பட்டன. விமரிசகர் இந்தியப் பொருள்களைப் பாடும்படி அவரை வேண்டினர். அது அவரது உணர்வை முன்பே தடை செய்தது. இப்போது அவர் அகவுணர்ச்சி உடையவர்; இந்தியக் கவிதைகளைப் பாடத் தொடங்கியது முதல் புறவுணர்ச்சி கொண்டவரானர். 1896-ஆம் ஆண்டிற்கு முன்பே சரோஜினி தம்மைத் தாமே கவிதைக்காக அர்ப்பணித்துக்கொண்டார்.

ஆர்தர் சைமன்ஸ் கூறியபடி தாம் ஒரு பெருங் கவிஞரில்லை என்று கூறி மறுத்தாலும், 'கவிஞனின் காதற் கவி' (The poet's love song) என்று அப்பாடலை அழைக்குமளவு கவனமாக நடந்துகொண்டார். அவர் அசையாத ஆர்வம் கொண்டிருந்தார். அவரது ஆன்மப் பறவை கவிதைச் சிறகுகளால் பறந்துகொண்டிருக்கவும், அவர் உடல்நலம் சீர்குலையத் தொடங்கியது. காற்று, அலைகளின் விரைவோடு அவர் 'இறந்த அருமைக் கனவு'களை எரித்தார். கேம்பிரிட்ஜின் நிழல் படிந்த வனங்களில் 'உலகப் போராட்டங்களிலிருந்தும், மக்கள் கூட்டத்தின் சச்சரவு'களிலிருந்

தும் தம்மை விடுவித்துக்கொள்ள முயன்றார். அப்போது அவர் கவிதையின் அவலத்தால் வாழ்க்கையின் அவலத்தை வெல்ல முடி வெடுத்தார். ஒளிவிடும் அவரது கவிதை இன்பத்தில், மாயையில் வல்ல ஒருவரைப் போலத் தம்முடைய பிரிவையும், நோயையும் மறக்க அவரால் முடிந்தது.

சரோஜினி இங்கிலாந்தில் 'இறுக்கமான பட்டாடை'களை அணிவது வழக்கம். அவர் சிறிய தோற்றமுடையவர். தம் முதுகில் கூந்தல் நேராக விழுந்திருக்கும்படி நெகிழவிட்டிருப்பார். அவரை ஒரு குழந்தையாகவே கொள்ளலாம் என்று சைமன் கூறுகிறார். அவர் மெல்லிசை போன்ற மென்மையான குரலில் சிறிதே பேசினார். அவரைக் காணும்போதெல்லாம் தனிமையிலே இருப் பார். மிகுந்த உணர்ச்சிமிக்க அவரது குணத்தால் பெருமுயற்சி களை மேற்கொண்டு அவர் இடர்ப்பட்டுத் தோன்றியபோது, அவர் நரம்புத் தளர்ச்சியால் பாதிக்கப்படலாம் என்றும் கருதப்பட்டது.

அவர் சுவிட்சர்லாந்திற்கும், அங்கிருந்து இத்தாலிக்கும் அனுப்பப்பட்டார். இந்நகரம் அவரைக் கவர்ந்தது. 'இது மனிதர்களின் நகரமா? அல்லது கடவுள்களின் நகரமா? இது மண்ணுலகமா? அல்லது விண்ணுலகமா?' என்று கேட்டார். அவரது எழில் மிகுந்த, கவர்ச்சியான, மந்திர சக்தியுடைய உரை நடை தன் முழுத்தன்மையுடன் மீண்டும் தொடர்கிறது. 'விடியற் காலையில், பகற்காலப் பொன்னல், விண்மீன்களின் பொன்னல், மந்திரசக்தி வாய்ந்த மே மாதத்தின் மணம் மிக்க இரவினில் புதுமையான மகிழ்ச்சி தரும் தாளத்துக்குத் தக நடம் பயிலும் மின் மினிப் பூச்சிகளின் பொன்னல்—இப்படிப் பொன் தொகுதியில் இந்த இத்தாலி ஆக்கப்பட்டுள்ளது. அவற்றின் கற்பனை நடனத்தி லுள்ள இனிய இசையைக் கவர்ந்து, மின்னல் வெட்டெனத் திடீர் திடீரெனத் திரும்பும் அவற்றின் திருப்பத்திலுள்ள ஒலிநயத்தோடு கவிதை புனைய மிக விரும்பினேன். அது வியப்புடையதாக இருக் காதா? ஒரு நாள் இரவில் இருட்டு வலையில் சிக்குண்டு குதித்துத் துடிக்கும் விண்மீன்களைப் போல் எனது கூந்தலில் மின்மினிப் பூச்சி கள் மொய்க்க ஒரு தோட்டத்தினிடையில் நின்றேன். நான் மனிதப் பிறவி இல்லை, ஒரு தேவதை என்ற புதிய உணர்வு எனக்கு வந்தது.' சொல்லுக்குச் சொல் எந்த அளவு அவர் பேருவகை கொள்கிறார்! பழச்சாற்றைப் போல இத்தாலியின் அழகைப் பருகு கிறார். 'கடவுளே! இது எவ்வளவு அழகாக இருக்கிறது! இன்று உயிரோடு இருக்க நான் எவ்வளவு மகிழ்ச்சியடைகிறேன்' என் கிறார்.

இப்படி இந்தப் 'பதினேழு வயது குழந்தை' ஐரோப்பாவில் வாழ்ந்து 'அறிவு செறிந்த காலத்தின் பரவசத் துளி'களை வாய்

நிறையப் பருகியது. பிறருடைய துன்பங்களை அமைதியாகக் கேட்டபோது, அற்புதமான, கவர்ச்சியான, அவருக்கே மனத்தில் தோன்றிய உணர்ச்சிகளால்—மேலும் துன்பம் ஏற்பட்டதாகத் தோன்றுகிறது. அது மிகத் துன்புறுத்தவே அவர் உடல்நலம் குன்றியது. 'ஆனால் அவர் உணர்ச்சி ததும்பும் அமைதியான மன நிலையைப் பெற்றிருந்தார். அதன்முன் இழிவான, சாதாரண நிலையற்றனவெல்லாம் எரிந்து சாம்பலாயின.' சைமன்ஸ் கூறுகிறார்: ''வயது முதிர்ச்சியின் பக்குவத்தோடும் பரம்பரைக்குரிய பருவ முதிர்ச்சியோடும் பொருந்திய விவேகத்துடனும் ஒருங்கிணைந்த உணர்ச்சியின் வேதனை என்று இதனைக் கூறுவதன்றி வேறு ஒன்றும் தோன்றவில்லை.''

துன்பமோ, இன்பமோ அவரை உணர்ச்சியான மற்றோர் உலகத்தில் மிதக்கச் செய்தன. ஒரு நண்பரின் சாதாரண முகந் திரிந்த நோக்கமும் அவரைத் துன்புறுத்தக்கூடும். உண்மையில் இது மாயக் கற்பனை வல்ல குழந்தை. இது தூர நாடுகளில் ஒரு பரபரப்பை உண்டாக்கியது. அதுமட்டுமல்ல, கிழக்கின் மந்திர சக்தியுடன் கீழைநாட்டுப் புகழையும் கூட்டி என்றும் ஒளிபரப்பி நிலைத்த ஒரு குழந்தையின் விரும்பத்தக்க அழகோவியத்தை நிலைக்கச் செய்தது. அவரது கவிதைகளில், எப்போதும் அருவியென வந்து குவியும் அழகான தொடர்களில் காணப்படும் சொல் விளையாட்டுகளால், இம்மந்திர சக்தி ஆக்கப்பட்டுள்ளது. அது அவரது சொந்த நேர்த்தியான அழகினையும் விருப்பம் கொள்வதற்குரிய இரகசியத்தையும் உலகிற்கு அளித்ததுடன் ஆங்கில உலகில் ஒரு மோகனக் கவர்ச்சியையும் வீசித் திகழ்ந்தது. அது அவரை ஆங்கில எழுத்துலக வரலாற்றில் மிக விரைந்த புகழுக்கு அழைத்துச் சென்றது.

## 4. தாயகம் திரும்புதல்

இங்கிலாந்து, சரோஜினியிடம் ஓர் ஆழமான முத்திரையைப் பதித்து, அவர் கவிதை எழுதுவதற்குத் தகுந்த மொழி ஆங்கிலமே என்பதை நிலைநிறுத்தியது. அவர் காலத்து விமரிசகரும் எழுத்துலக மேதைகளும் அவருக்கு ஊக்கம் அளித்தனர். இந்தியாவை மேலை நாட்டவருக்கு உணர்த்த வேண்டும் என்று அவர்கள் அவர் உணர்வைத் தூண்டினர். இதுவே அவரது நிலைத்த குறிக்கோளாகிவிட்டது. அவர் எழுதுவது பிழைபட்ட ஆங்கிலமாக இருக்கக்கூடாது என்று எட்மண்டு கோஸ் அறிவுறுத்தியது வீணாகவில்லை. அவர் ஆங்கில மொழியிலும் மேலை நாட்டு யாப்பியலிலும் வல்லுநர் ஆனாலும் அவரது இந்தியக் கண்களுக்கு இங்கிலாந்தும், அதன் நகர்ப்புறங்களும் வெளிநாடுகளாக அமைந்தன. இனிமேல் அவற்றைப் பற்றி அவர் எழுத முடியவில்லை. ''சரோஜினி என்னிடம் ஒப்படைத்த கவிதைகள் வடிவத்தில் நேர்த்தியானவை. கருத்தில் குறைகூற முடியாதவை. ஆனால் முழுத் தன்மை இல்லாத குறைபாடு அவற்றிற்கு உண்டு. உணர்ச்சியிலும் கற்பனையிலும் அவை மேலை நாட்டுச் சாயலுடையவை. டென்னிசன், ஷெல்லியின் பழைய நினைவுகளின்மீது அவை நிறுத்தப்பட்டுள்ளன. கிறித்துவச் சகிப்புத் தன்மை அவற்றில் அறவே இல்லை என்று நான் உறுதியாகக் கூறமுடியாது. அவற்றை நம்பிக்கையில்லாமல் வைத்தேன்; வஞ்சம் தீர்க்கும் நினைப்போடு இருக்கும் ஒரு கேலிப் பறவையின் பாடல் இது.''[1]

அவர் பிறகு தம் புகழ்பெற்ற முடிவினைத் தம் மாணவிக்குத் தெரிவித்தார். ஆங்கில நாட்டின் பாடும் பறவைகள், வானம்பாடிகளைப் பற்றி அவர் எழுதுவதைத் தடுத்தார். ''ஆங்கில சாக்சன் சூழலில் ஆங்கில சாக்சன் கருத்துகள் மீண்டும் புதுப்பித்து எழுதப் படுவதை விலக்கினார். மற்றும் இந்தியாவின் இதயத்தைச் சிறிது எடுத்துக்காட்டவும், பழைய மதங்களின் கொள்கைகளில் காணப் படும் இயல்பான உணர்வுகளைப்பற்றிய உண்மையான ஆழமான விளக்கங்களைச் சிறிது எடுத்துக்காட்டவும், மேலை நாடு தனக்கு ஓர் ஆன்மா இருக்கிறது என்று அறிவதற்கு முன்னரே ஓர் இந்தியர் இங்கிலாந்தைப் பற்றி எழுதுவதற்கு எதிராகக் கோரஸ் குரல் எழுப்புவது ஏன்? எட்வின் ஆர்னல்டு மெடோஸ் டேய்லர் போன்ற அவர்நாட்டைச் சார்ந்த பலர் இந்தியாவைப் பற்றி எழுத

---

[1] The Bird of Time, பக் 4.

வில்லையா? ஒரு கவிஞர் முழுத் தேசியப்பற்றுடன் வேறெதுவும் இல்லாமல் இருக்கமுடியாது. உலக எண்ணங்களும் செயல்களும் அடிக்கருத்துகளுக்குப் பகுதியாக அமையவேண்டும். இதனுல்தான் போலும் சரோஜினியின் கவிதைகள் சாதாரணமாக உள்ளன. ஏனெனில் அவரது கவிதைத்தரம் இந்தியாவைப் பற்றியதாக மட்டுமில்லை, நாடோடி இசையில் வரம்பிட்ட பெண்ணுலகமும், புத்தர், கோகலே, காந்தி போன்ற சான்றோர் பற்றிய கவிதைகளும் உள்ளன.

நாடு திரும்பியவுடன் இந்தியாவை — குறிப்பாக, வேறு எப் பொருளும் இல்லாமல் அவர்தம் ஐதராபாத்தின் முஸ்லீம் இந்து உலகை மட்டும் மேலை நாட்டவர்க்கு விளக்க ஈடுபட்டார். அவர் உண்மை வாழ்வில், காந்தியின் விடுதலை இயக்கத்தின் அவலங்களி லும், துன்பங்களிலும் மூழ்கியிருந்தாலும் பிற்காலத்தில் அவர் எழுதிய நாட்டுப்பற்றுடைய பாடல்களும் சாதாரணமானவை. மகளிர் எழுச்சிக்கு அழைத்துப் பாடிய பாடல்களும் நாட்டுப்பற் றுடைய சில பாடல்களும் இனிய சொற்களைக் கொண்டிருக்கின்றன. ஆழமாகவும் இல்லை; பதியும்படியும் இல்லை. 'கவிதையின் அவலத் தால் வாழ்க்கையின் அவலத்தை வெல்ல வேண்டும்' என்ற தத்துவம் உண்மையில் நிறைவேறவில்லை. ஏனெனில் மீராபாய், ஆண்டாள் பெற்ற ஆழ்ந்த பக்திநிலையை அவர் அடையவில்லை. ஒரு வண்ணத்துப் பூச்சியைப் போல மலருக்கு மலர் முறையில்லா மல் தாவித் தேன் நுகர்ந்தார். அதே போன்ற உலகைத்தான் அவர் கவிதைகளில் மேலை நாட்டினருக்கு வெளிப்படுத்தினர். அவர்களோ அதைக் 'கவர்ச்சியான கீழை நாட்டுக் கற்பனை உலகம்' என்று நினைத்துக் கொண்டனர்.

1898 செப்டம்பரில் சரோஜினி வீடு திரும்பியபோது, யாரை மணக்க அவர் விரும்பினுரோ, யாருக்காக, கடந்த மூன்று ஆண்டு களை நீட்டித்தாரோ அவரை மணப்பதைத் தம் முதல் செயலாகக் கொண்டார். அவரது திருமணம் இந்தியாவில் பல சீர்திருத்தங் களுக்கு அடிப்படை. ஏனெனில் அது ஒரு கலப்புத் திருமணம். மாநிலப் பிரிவுகளைக் கடந்தது; மேலும் அது இந்தத் துணைக் கண்டத்தில் இதுவரையில், விடுதலை வாழ்க்கையைக் கட்டுப்படுத்தி யிருந்த பழைய தடைகளை நெகிழ வைத்தது. அப்போது சிறப்புத் திருமணச் சட்டம் (1872-இன் சட்டம் III) செயல்முறைக்கு வந்தது. இருசாராரும், தாம் இந்து, சீக்கியர், கிறித்தவர், முஸ்லீம் ஜைனர் போன்ற மதங்களைச் சார்ந்தவர் என்பதை மறுத்தல் வேண்டும். அத்திருமணம் 1898 டிசம்பர் 2-ஆம் நாள் சென்னையில் நடைபெற்றது. கவனத்தைக் கவரும் கீழ்வரும் அறிக்கை ஓர் இந்தியப் பத்திரிகையில் வெளியானது. ''பண்பாடும் நற்பண்பும் கொண்ட ஒரு பிரம்ம சபைப் பெண்மணி திருமதி ராம்

மோகன்ராய் தோழிப் பெண்ணுக இருந்து மணமகிழ்ச்சியின் தூய தன்மைக்கு அழகையும் அருளையும் சேர்த்தார். திரு எஸ். சோமசுந்தரம், பி.ஏ. பாடிய கடவுள் வணக்கத்துடன் விழா தொடங்கியது. தொடர்ந்து குறித்த சடங்குகள் நடைபெறுகின்றபோது, அத்தூய நிகழ்ச்சிகளுக்கு ராவ்பகதூர் வீரேசலிங்க நாயுடுகாரு தலைமை தாங்கினர். வாழ்வின் பொறுப்புகளைப் பற்றித் தலைமை தாங்கியவர் மணமக்களுக்கு தெளிவுறுத்திய பிறகு டாக்டர் அகோரநாத் மணமகளை உவந்து அளித்து, தூய திருமணத்தில் மணமக்களை இணைத்தார். சென்னை நகரத்தின் திருமணப் பதிவாளர் திரு. எஃப்டி பேர்டு முன்னிலையில் இத்திருமணம் நிகழ்ந்தது''. தென்னிந்தியாவின் அந்நாளைய சிறந்த சீர்திருத்த வாதியான பண்டித வீரேசலிங்க பந்துலுகாரு மணமக்களை வாழ்த்தினர்.

சரோஜினி ஓர் இளைய கவர்ச்சியான மணப்பெண்ணுக மகிழ்ச்சியுடன் ஐதராபாத்தில் தங்கினர். 1901-இல் அவருக்கு ஜயசூரியன் முதற்பிள்ளையாகப் பிறந்தான். அடுத்த மூன்றுண்டுகளில் பத்மாஜா, இரணதீரன், லீலாமணி என்ற குழந்தைகள் பிறந்தன. உலகின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்த நண்பர்களை உயர்ந்த முறையில் விருந்தோம்புவதில் சரோஜினியின் வீடு புகழ் பெற்றது. இங்கு அவர்தம் வாழ்வைச் செம்மையாக்கிய குழந்தைகளின் சிரிப்பொலிகளுடனும், பிணைந்த அன்புடனும், தம் மண வாழ்க்கையின் முதற் சில ஆண்டுகளைக் கடந்தார். வீடு, குழந்தை, தாம் விரும்பிய நகரமான ஐதராபாத் — இவைபற்றி அவர் பாடும் போதெல்லாம் முதலில் அவர் இயற்றிய கவிதைகள் வாழ்வின் இந்தப் பகுதியையே விவரிக்கின்றன. அவர் ஆர்தர் சைமன்ஸுக்கு எழுதியது;—

''சர்வ சாதாரணமாக இருப்பதையும், மற்றவர்களைப் போல மேற்போக்காக இருப்பதையும், நானே கற்றுக்கொண்டேன். நான் மிக இனிமையானவள்; மிக மகிழ்ச்சியானவள்; மிகத் தைரியமானவள் என்று ஒவ்வொருவரும் நினைக்கின்றனர். எல்லாச் சாதாரணப் பொருள்களும் ஆறுதல் அளிப்பவையாக உள்ளன. நான் ஓர் அமைதியான குழந்தை என்ற அளவு என்னை என் தாய் அறிவார் ... நொடிக்கு நொடி வாழ்கின்ற நுண்ணிய தத்துவத்தை நானும் அறிந்தேன். ஆமாம், 'உண்ணுங்கள்; குடியுங்கள்; மகிழ்ச்சியாக இருங்கள். ஏனெனில் நாம் நாளை இறந்துபடுவோம்.' இது உலகாயத மதத்தாரின் எண்ணமாகத் தோன்றினும், இது ஒரு நுண்ணிய தத்துவமே என்று அவர் ஆர்தர் சைமன்ஸுக்கு எழுதினர். நோய்வாய்ப்பட்ட நிலையாலும், வலியாலும் அவர்

சிறிது நலங்குன்றி நலிவடைந்திருந்தார். இது அவரைக் கீழ் வருமாறு குறிக்கத் தூண்டியது:

''நான் இறப்புடன் போராடும்போது பல கடந்தநாள்களைக் கழித்தேன். அத்தொடர்பு அளித்த உண்மையறிவை முழுமை யாக அறிந்தேன். என்னைப் பொறுத்தவரை அது அலங்காரத் துடன் கூறப்பட்டது அன்று; ஆனால் நேர்மையான உண்மை. நாளை நான் இறக்கக்கூடும். நான் கல்லறையிலிருந்து திரும்பி இரு மாதங்கள் கூட ஆகவில்லை; ஒளி தரும் களிப்புடன் இருப்பதைக் காட்டிலும் வேறு எதுவும் பயன் தரக் கூடியதாக இருக்குமா? வாழ்க்கை அல்லது என் உணர்வுகள் கொடுத்திருக்கும் பொருள் களில் நகைச்சுவைப் பரிசையே விலை மதிப்பற்றது என்று மதிக் கிறேன்.''

அவர் இல்வாழ்க்கையுடன் திருப்தி அடைந்ததாகத் தெரிய வில்லை. ஏனெனில் பல கவிதைகள் அடுத்தடுத்து விரைவாக எழுதப் பட்டன; அவை அவர் காலத்து நண்பர் கமலா சத்யநாதன் 1901-இல் தொடங்கிய 'இந்திய மகளிர் இதழ்' (The Indian Ladies Magazine) என்ற புகழ் பெற்ற இதழில் வெளியிடப்பட்டன. புகழ்பெற்ற இச்சிறிய இதழின் பக்கங்களின் மூலம், இந்தியாவில் மட்டுமில்லாமல் ஆங்கிலம் வழங்கும் நாடுகளிலெல்லாம் பாராட்டப்படுகின்ற கவிதைகளின் அழகினால் சரோஜினி புகழ் மிக்க புலவரானார். அப்புகழைப் பிறகு வெளியான 'தங்கத் தலைவாயில்' என்ற அவரது முதற் கவிதைநூல் நிலைநாட்டியது.

# 5. சொற்கள்

சரோஜினியின் கவர்ச்சியான இதழ்களிலிருந்து சொற்கள் மலர் மாரி போல உதிர்ந்தன. அவற்றின் மந்திர சக்தியால் அவர் வாழ்ந்தார். அவரது கவிதைகளைக் கேட்டவர் அல்லது கற்றவர் அவற்றின் இனிய ஓசையில் மயிர்க்கூச்செறிந்தனர். இச்சொற்கள் அனைத்தும் ஆங்கிலத்தில் உள்ளன. குழந்தைப் பருவத்தில் அவர் வீட்டில் வழங்கிய இந்திய மொழிகள் மூன்றிலும் அவை அமைய வில்லை.

'சரோஜினி ஆங்கிலத்தைத் தேர்ந்தெடுத்தது ஏன்?' என்றும் 'சரோஜினி, பாடல்களை ஏன் எழுதவேண்டும்?' என்றும், 'அழகிய சொற்களால், அவர் தம் பிரச்சாரங்களை அணி செய்து கூறியது ஏன்?' என்றும் எவரேனும் வினவலாம். அவர் அழகுச் சொற்களை ஆளுந் திறத்தால், கற்பவரைத் திகைப்பில் ஆழ்த்தினர். அவர், தாமே கூறியவாறு, கவிதைகளை இயற்றவே தாம் அர்ப்பணிக்கப் பட்டவர் என்பதை உணர்ந்தார். இதுவே அவர் குறிக்கோள். அவர் பாடினர்:

''குருக்களுக்கும் ஞானியர்க்கும்
குதூகலம் தம்மதங்களிலே;
கோக்களுக்கும் தேவியர்க்கும்
கொற்றமிகு செயல்களிலே;
வலியிழந்தோர்க்கு நல்லமைதி
வல்லோர்க்கு நம்பிக்கை,
என்றனுக்கோ என்தலைவா
இன்கவிதைப் பரவசமே.''[1]

சரோஜினிக்குரிய இக்களிப்பே ஆங்கிலத்தில் வெளிப்படுத்தப் பட்டுள்ளது.

ஒருவர் தம் தாய்மொழியிலேயே எழுதல் வேண்டும் என்பதன் பயன்களை எப்போதும் மதிப்பிடும் இந்தியப் பண்டிதர்கள் மற்றும் வெளிநாட்டு இலக்கிய ஆதரவாளரது குறுகிய கொள்கை செயற்கையாகவும், வீண் காலக்கழிவாகவும் தோன்றுகிறது. இந்தக் குற்றச்சாட்டில் இந்திய விமரிசகர் நிச்சயமாகக் குற்ற முடையவரே. ஏனெனில் நல்லதாக அல்லது தீயதாகப் படைக்கப் பட்டதை மதிப்பிடுவதற்குத் தகுந்த மற்றக் கருப்பொருட்கள்

[1] The Bird of Time, பக். 103.

அவர்களிடம் குறைவாக இருந்தமை இதற்குக் காரணமாக அமையலாம். இக்கால இந்தியப் புலவர்களில் ஒருவரும், எழுது வதற்கு ஆங்கிலத்தைத் தேர்ந்தெடுத்தவருமான கமலாதாஸ் ஆங்கிலத்தில் எழுதும் இந்தியரைத் தடுத்துக் கூறுவோரை எதிர்த்து அறைகூவினர்: 'ஒக் இந்தோ ஆங்கில எழுத்தாளர்' என்று நன்கு அறிமுகமான அப்புதிய 'முத்திரையை' அவருக்குப் பொருத்திக் கூற நான் மறுக்கிறேன். இதைப் பற்றிப் பிறகு நிறையக் கூறவேண்டியிருக்கிறது:

''மும்மொழியில் பேசுகிறேன்; இருமொழியில் எழுதுகிறேன்;
ஒருமொழியில் கனவுலகில் உலவுகிறேன்
மலபாரிலே பிறந்த மாநிறத்து இந்தியப்பெண்
'ஆங்கிலம் நின் தாய்மொழியன்று;
ஆகையினுல் அம்மொழியில் எழுதாதே' என்றுரைத்துக்
குறைகாண்பீர்! நண்பர்களே! உறவினரே!
எல்லோரும் விலகி நின்றே எனைத் தனியே விடுவீரே!
நான் விரும்பும் ஒருமொழியில் நான்பேசத் தடைஏனோ?''

ஆமாம். திறனாய்வாளர் சரோஜினியைக்கூடத் தனியாக விடாதது ஏன்? பெண் கவிஞர் தொருதத்போல அவரும் சோதனைக் காலத்தில் வாழ்ந்தார்; ஒரு சிறந்த எழுத்தாளருக்குத் தகுந்த அறிகுறி இது. 'டைலன் தாமஸ்' வெல்ஷ் மொழியில் எழுதாதது ஏன்? அல்லது ஜேம்ஸ் ஜாய்ஸ் அவருடைய சொந்த ஐரிஷ் மொழி யில் எழுதாதது ஏன்? என்று ஒருவர் நன்ருக வினவலாம். மேற்கிந் தியர் நைபாலும், இரஷ்யர் நொபொகோவும், போலர், கோன்ராடும், சீனர் லின் யு டாங்கும், அங்கேரியர் கோயிஸ்லரும் மற்றும் ஆங்கிலத்தை விரும்பிய பலரும் தம் கருத்துக்களை வெளியிட இந்தப் பொது மொழியையே தேர்ந்தெடுத்தது ஏன்? உண்மையில் ஓர் எழுத்தாளன் தனக்கு மிகப் பழக்கப்பட்ட மொழி யிலேயே பேசமுடியும். தம் தாய்மொழியில் எழுதாமல் ஆங்கிலத் தில் எழுதிய இந்தியர்களை ஒரு திறனாய்வாளர் குற்றம் கண்டார். அனுமானத்தால் உருவாக்கிய அவரது உறுதியான கணிப்பைத் தாழ்த்திப் பேசிய ஸ்ரீஅரவிந்தரின் கருத்துக்கு ஒருவர் உடன்பட்டே ஆதல் வேண்டும். ''அவரது அனுமானம் மிக அவசியமா? அவரைப் போன்ற மேலை நாட்டவர், கீழை நாட்டவருக்குரிய ஆன்மீகம் அல்லது யோகம் போன்றவற்றைத் தமது மக்கள் மன்றம், தொழிற்சாலைகளை விட்டு விட்டுப் பழக முற்படுவது ஏன்? என்று நன்ருக நியாயமான முறையில் அவரை நானும் வினவ லாமே?''

சரோஜினி தம் உணர்வுகளை ஆங்கில மொழி வழியாக உணர்த்திஞலும், அவரது கற்பனை முழுவதும் இந்திய நாட்டுக்

குரியது. ஆங்கில மலர்களைப் பற்றியும் பறவைகளைப் பற்றியும் எழுதிவிட்டு ஆங்கிலக் கற்பனையைப் பயன்படுத்தினார் என்றோ அல்லது ஷெல்லி, கீட்ஸைப் பின்பற்ற முயல்கிறார் என்றோ குற்றம் கூறும்படி இனி எழுதக்கூடாது என முடிவெடுத்தார். மிகப் பெரிய பழைய பண்பாடும், பழக்க வழக்கங்களும், வாழ்க்கை நெறி களும் கொண்ட அவரது செல்வச் செழிப்புள்ள நாடு இதோ உள்ளது; அதன் இரகசியக் கதவுகள் திறக்கப்பட வேண்டும்; அதன் பொக்கிஷங்கள் ஆராயப்பட வேண்டும். பரம்பரை ஞானமும் கீழைநாட்டு வழக்கங்களும் கொண்ட சொர்க்கம் தவிர வேறு எது சரோஜினிக்குத் தேவைப்படுகிறது? ஆகவே இந்தியத் தொடர் புடைய கற்பனையை எழுதத் தொடங்கினார் அவர். இந்தியக் காட்சிகளிலும் அதன் பரம்பரைப் பொலிவிலும் அவர் மகிழ்ந் தார். பெர்ஷியன், இஸ்லாமிய மொழிகளிலிருந்து அவர் உருவங் களையும் உவமைகளையும் தருவித்து எழுதினாலும் அவரது கருத்துக் கள் அனைத்தும் இந்தியாவுக்கு உரியவை. அவரது அடிக்கருத்துக் கள் தம்மகத்துக் கிராமீயச் சார்புடையவை. படகோட்டிகள், உழவர்கள், நெசவாளர்களிடம் கேட்ட நாடோடிப் பாடல்களின் அடிப்படையில் அவர் தமது பாடல்களில் ஒலிநயத்தை அமைத் தார். இந்தப் பாடல்களின் சந்தம் அவரைக் களிப்பில் ஆழ்த்தியது; இதை ஒரே எடுத்துக்காட்டிலிருந்து காணலாம்.

நாடோடிப் பாணர்கள்

(அவர்களது இராகமொன்றில் எழுதப்பட்டது)

காற்றழைக்கும் குரல் கேட்டுக் கால்போன வழிநடப்போம்;
எதிரொலிக்கும் வனங்களெலாம் எதிரொலிக்கும் வீதியெலாம்
கையில் குழலேந்திக் கானத்துடன் திரிவோம்;
அனைவோரும் எம்முறவோர்; அகிலமே எம்முடைமை. [2]

சரோஜினி அவர்தம் குழந்தைப் பருவத்தில் வாழ்ந்த தந்த கோபுரத்தின் சாளரத்தினூடே சாய்ந்தவாறு கீழே நடக்கும் பாணர்களின் பாடல்களைக் கேட்டுக்கொண்டிருப்பதை அல்லது தம் வண்டியை நிறுத்திவிட்டு அந்த எளிய மக்களுடன் பேசிக் கொண்டிருப்பதை ஒருவர் கற்பனை செய்யலாம். எல்லா மதங் களின் கோயில் மணியோசை, பள்ளிவாசல்களின் அழைப்பு, பூசாரிகளின்—குருக்களின் வழிபாடு அவரைப் பரவசத்தில் ஆழ்த்தி எப்போதும் ஓர் ஒற்றுமை நோக்கை அவருக்குத் தந்தன—அதை அவர் ஆர்வத்துடன் வேண்டினார்.

மத வேறுபாடு ஏன் இருக்கவேண்டும்? எல்லா வழிபாட்டு முறைகளுக்கும் மதிப்பளித்து ஆழ்ந்த கண்ணியத்துடன் மனித

[2] The Golden Threshold, பக். 28.

இனமனைத்தும் ஏன் ஒன்றுபடக்கூடாது? இந்த அடிக்கருத்தை மீண்டும் மீண்டும் கேட்கிறோம்:

**மாலைத் தொழுகைக்கு அழைப்பு**

"அல்லாஹு அக்பர்! அல்லாஹு அக்பர்!
மசூதியில் தர்க்காவில் மவுல்வியார் அழைக்கின்றார்;
இஸ்லாத்தின் ஏந்தலே! இசைக்கின்றாய் உம்புகழை
விரைந்தங்கே நிழல் சாய்ந்து விழுகின்றான் மேல் கதிரோன்

அல்லாஹு அக்பர்! அல்லாஹு அக்பர்!
அன்னை மரியாளே! அன்னை மரியாளே!
பாதிரியார் பக்தியுடன் பலிபீடத்து இசைக்கின்றார்
கன்னியின் திருமகனைக் கனிவோடு வணங்கிடுவீர்!
மணியோசை ஒலிக்கிறது; மனச்சுமையை இறக்குங்கள்
அன்னை மரியாளே! அன்னை மரியாளே!
அஹுரா மஸ்தா! அஹுரா மஸ்தா!

அவஸ்தா இசைக்கும் அழகிசை கேண்மின்!
சுடரினை ஒளியினைத் தொழுதெழும் அன்பர்காள்!
அணையாத் தீபத்தின் அவிரொளி கண்டால்
அங்கெல்லாம் பணிந்தெழும் அடியார் இசைப்பீர்!
அஹுரா மஸ்தா! அஹுரா மஸ்தா!

நாராயண நம! நாராயண நம!
யுகமெலாம் கடந்திசைக்கும் யோகியிசை கேளுங்கள்;
கைகூப்பித் தொழுதிடுவீர்! கடவுளின் குழந்தைகளே!
உமைமறந்த தியானத்தில் உம்குரலை உயர்த்துங்கள்;
நாராயண நம! நாராயண நம!"[1]

சரோஜினி ஐதராபாத்தின் வருணனைகள், அதன் இந்து—முஸ்லீம் உறவுகளின் பலதிறப்பட்ட வாழ்க்கையுடன் அவரது பாடலைத் தொடங்கினார். இதோ ஒரு கவர்ச்சியான நகரம்,

"கார்செறி வானின் கவினொளி காண்மினோ
பொன்மணி மின்னும் புறாக் கழுத்தைப்போல்
வனப்புமிகு நகர வாயிற்புறத்தே
வளைந்த தந்தம்போல் நெளிந்து பாய்ந்திடும்
வெள்ளியாற்றின் விரிகதிர் காண்மின்![2]

சரோஜினி அவரது கம்பீரமான நகரத்தையும் வீட்டையும் பாராட்டினார். இந்து—முஸ்லீம் கலையின், கீழை நாட்டு அழகுக்கு இடையில் ஓர் இரத்தினமாக—'தங்கத் தலைவாயில்' பதிப்பிக்கப் பட்டது. இஸ்லாமியப் பாடல்களிலும் பண்பாட்டிலும் அவர்

[1] The Bird of Time, பக். 45, 46.
[2] The Golden Threshold.

தாமே ஆழ்ந்தார். ''குஸ்ருவின் அமிர் ஒலித்த முதல் அசைகளைக் கேட்டேன் நான். எனது நகரத்தின் முஸ்லீம் ஆண்கள், முஸ்லீம் பெண்களுடன் எனது முதல் தொடர்புகள் அமைந்தன. எனது முதல் விளையாட்டு நண்பர்கள் முஸ்லீம் குழந்தைகள்.''

ரூமியின் அழியாத கவிதையைத் தவிர வேறு எதுவும் அவருக்கு மிக அழகுடையதாக இல்லை. அவர் முன்னோடி தொருதத் போல இந்துஸ்தானிக் கதை பொதி பாடல்களை எழுதி அநுபவிக்காவிட்டாலும் தமது இந்தியப் பண்பாட்டையும், பழைய புராணக் கதைகளையும் கூட அவர் விரும்பினார். இறைவர்—இறைவிகளைப் பற்றிய அவர் அறிவு அவரை மிகத் தூண்டியது. அனைத்துச் செல்வ இரகசியங்கள், புதையல்கள், விரும்பத்தக்க பெண்கள், பணிவான மணப்பெண்கள், வயது முதிர்ந்த சுமங்கலிப் பெண்கள், இரத்தினங்கள், மணப்பெட்டிகள், வாசனைத் தைல வகைகள், முகத்திரைகள், சாடின்—ஆடைகள், பட்டுகள்—இவற்றைக் கொண்ட முகத்திரை மூடிய மோகன உவகையை அவர் மிகவும் விரும்பினார்.

மிக விரைந்த நாட்களிலேயே அவர் களத்தில் இறங்கத் தலைப்படுகிறார்; இந்தியாவின் எல்லாப் பகுதிகளைப் பற்றியும் எழுதுகிறார். நாட்டுப் பற்றுடைய ஆர்வத்துடன் அவர் பேச்சுகள் விரைந்து உதிர்கின்றன. தங்கக் குரல் வாய்ந்த தனிப் பேச்சாளர் என்று சீனிவாச சாஸ்திரி அழைக்கப்பட்டால், சரோஜினி நிச்சயமாக, 'இந்தியாவின் கோகுலந்'தான் அல்லது சிலர் கேலியாகக் குறித்தபடி 'கட்டுக்கடங்காத சூறுவளி'[1] (Naughty Gale)தான். இந்த நகைச்சுவையை அவர் முழுமனத்துடன் அநுபவித்தார். ஏனெனில், பிறரால் கூறப்பட்டதோ அல்லது தாமே எழுதியதோ, தம்மை பற்றிய ஒரு நகைச்சுவையைத் தவிர அவர் வேறு எதையும் பாராட்டவில்லை.

---

[1] Nightingale என்றால் கோகிலம்; Naughty gale என்றால் பொல்லாத புயல்.

# 6. தங்கத் தலைவாயில்[1]

"அழகை விரும்பிய அவரது விருப்பம் அவரைக் கவிஞராக்கியது; அழகுடன் தொடர்பு கொள்ளும்போதெல்லாம் அவரது 'களிப்பு நரம்புகள்' எப்போதும் துடித்துக்கொண்டிருந்தன. இங்கிலாந்தில் அவரை அறிந்தவர்களுக்கு அச்சிறு உருவத்தின் அனைத்து வாழ்க்கையும் தானாகவே கண்களில் செறிந்துள்ளதைப்போலத் தோன்றியது; சூரியகாந்தி சூரியனை நோக்கித் திரும்பியதைப் போல விரிய விரிய அவர் கண்களைத் தவிர வேறு எதையும் ஒருவர் காணமுடியாதபடி அவர் திரும்பினார்" என்று ஆர்தர் சைமன்ஸ் கூறினார். ஆமாம், அழகு, சரோஜினியை உறுதியாக மயக்கியது. பொருள்களைப் பற்றிய அவரது காட்சிகளில் மரபுப்படி அணுகுமுறை அழகாக உள்ளது. இது அவர் கவிதையை நல்ல நடையுடையதாக அமைக்கத் துணை செய்தது; இயற்கைக்கு இது உண்மையான தன்று. தடை செய்யமுடியாத அவரது உணர்ச்சிகள் ஆர்வம் நிறைந்தனவாக இருந்தன; அவைகள் மிகைப்படுத்தப்பட்டன. சரோஜினி தம் கவிதைகளில் வாழ்க்கையின் அவலட்சணமான, நியாயமற்ற, கீழ்த்தரமான குறிக்கோள்களை உணர்த்தியதாகத் தோன்றவில்லை; ஏனெனில் இது தற்காலக் கவிஞர்களுக்குரிய சிறப்பியல்பு. அவர் காட்டும் கீழைநாட்டின் அணி செய்யப்பட்ட அழகில் சிலர் சிறிது திணறுவதைப் போல உணர்வீர். இதோ 'இந்திய நெசவாளிகளில்' ஒருவர் நமது திகைப்பூட்டும் கண்களுக்கு முன்னால் அசையும் வண்ணக் காட்சியைத் தருகிறார். வாழ்க்கையில் போராட்டங்களும் துன்பங்களும் இல்லாத அந்தக் காட்சி இதோ உள்ளது. ஆனாலும் பிறப்பு இறப்பால் விளையும் துன்பம் தெளிவாகப் படம் பிடிக்கப்பட்டுள்ளது.

*நெசவு நெய்பவரே!*
*கங்குல் விடியலில் கருத்துடன் நெய்வதேன்?*
*களிப்புடன் இந்தக் கவினுடை நெய்வதேன்?*
*மென்பூங்காற்றின் மென்மைபோல் கருத்துடன்*
*நெய்யும் இந்த நீல மென்துகில்*
*இன்று பிறந்ததோர் இளங்குழந்தைக்கு*
*நாங்கள் மகிழ்வுடன் நயமாய் நெய்வது!*

*நெய்யும் தோழரே!*
*இரவுசாயும் இந்த நேரத்தில்*

[1] The Golden Threshold.

ஒளியில் மின்னும் இவ்வுயர்ந்த ஆடையை
நெய்வதும் ஏனோ?
மயிலின் தோகைபோல் மஞ்சளும் பச்சையும்
மின்னும் இந்த மெல்லிய ஆடை
கன்னியோர் அரசிக்குக் கல்யாணச்சீருடை.

நெசவுக்கலைஞரே! நெய்வதும் எதுவோ!
நிலவிடைக் குளிரில் நெய்வதும் ஏனோ?
ஆழ்ந்த அமைதியில் ஆகும் இவ்வாடை
யாருக்கு நெய்வது?
வெளுத்த சிறகுபோல் வெண்மேகம்போல்
இறந்த ஓர் மனிதனின் இறுதி யாத்திரைக்கு
போர்த்த ஓர்ஆடை புனைகிறோம் விரைந்தே.

இதில், சரோஜினி வினவ விரும்பிய தொடர்ச்சியான வினாக்களும், அவரே தெளிந்த விடைகளும் உள்ளன. ஆனால் இந்தக் காட்சி செயற்கையானது. அது ஒரு வெறுங் கற்பனைக் காட்சி. நிலவொளியில் அல்லது விடியற்காலையில் நெசவாளிகள் நெய்ய மாட்டார்கள். சரோஜினி தம் தகுதியான 'கவிதை உரிமையால்' நெசவாளிகள் நெய்யும் பலவண்ண ஆடைகளையும், பகல் காலை, மாலை நிலவொளியின் வண்ணங்களையும் ஒருங்கிணைத்து இசைக்கிறார்; மற்றொரு வடிவில் காலத்தை இணைத்து, அக்காலத்துடன் வாழ்வு கடப்பதையும், பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள வாழ்க்கைப் பயணத்தையும் பொருத்துகிறார். இவ்விடத்தில் உருவகத்தின் சாயல் படிந்திருக்கிறது.

இலக்கியத்தில் உருவகப் போக்கு உயர்ந்திருந்த காலத்தில் சரோஜினி வாழ்ந்தார் என்பதை மனத்தில் கொள்ளவேண்டும். ஆர்தர் சைமன்ஸ், ஜெரார்டு டி நெர்வல் அவரை உருவகத்தின் முன்னோடி என்கிறார்கள். அவர் ஒரு நடையை உண்டாக்கினார். ''அதில் கண்ணுக்குப் புலனாகும் உலகம் இயற்கையாக இருக்காது; காணாத உலகம் கற்பனையாக இருக்காது.''[1]

1905-இல் வில்லியம் ஈன்மான் பதிப்பித்த 'தங்கத் தலைவாயில்' இங்கிலாந்தில் ஒரு புரட்சியை உண்டுபண்ணியது. அத்தகைய கவிதைகள் இப்போது எழுதப்பட்டிருந்தால் அவை ஒருவேளை கவனிக்கப்பட்டிருக்கமாட்டா. ஏனெனில் எழுபதுகளின் கவிதை உலகில் அவற்றிற்கு இடமில்லை. ஆனால் இந்நூற்றாண்டின் முதல் பத்தாண்டுகளில், இங்கிலாந்து இன்னும் விக்டோரிய சகாப்தத்தின் உணர்வுகளிலேயே ஆழ்ந்து கிடந்தது; இந்த இளைய, 'கிளர்ச்சிமிக்க' மாய இந்தியப் பெண்ணின் நூல் சிறந்த ஆரவாரத்துடன்

[1] Symbolist Movement in Literature by Arthur Symons, பக். 4.

வரவேற்கப்பட்டது. அக்கால உயர்ந்த திறனாய்வாளர்களால் வரம்பில்லாமல் பாராட்டப்பட்ட கவிதை, தன் கண் மிகப் பெரிய கலை வளத்தைக் கட்டாயமாகப் பெற்றிருக்கவேண்டும். அலங்கார மான, அமைதியான ஓட்டத்தைக் கொண்ட கவிதைகளுடன் தம் கவிதை வாழ்க்கையை இன்று அவர் தொடங்கமுடியாமல் இருக்க லாம். ஆனால் 1905-இல் அவர் மிகப் பாராட்டப்பட்டார் என்பது உண்மை. அவர் முழுமனத்துடன் பாராட்டப்பட்ட காரணத்தி னால் இனி அவர் இறக்கமாட்டார். டென்னிசன் அல்லது ஷெல்லி கூட இன்று மிகுந்த ஆரவாரத்துடன் பாராட்டப்படுகிறார்களா? ஆனால் அவர்கள் தமது கவிதைப் பகுதியை நிலைநாட்டினார்கள்; அவை இக்காலக் கவிதைகளுக்கு அடிக்கற்களாகும். அதைப் போல, சரோஜினியும் தம் கவிதைகளின்மூலம் தமது சிறிய இயற்கையான பாங்கினை நிறைவுற அமைத்தார். அவற்றை இந்தியக் காதற் பாடல்களுடனும், அவர் காலத்து, பிற்காலத்துக் கிழை நாட்டுப் பாடல்களுடனும் வகைப்படுத்த முடியும். பல்லாண்டுக் காலம் மக்கள் பகுதியினரில் சிலர் அவற்றைப் பாடியும் ஓதியும் பாராட்டு வார்கள்.

1905-இன் திறனாய்வாளர்களின் எல்லையற்ற புகழ்ச்சியை அன்றைய இதழ்களில் வெளியான சில பகுதிகள் எடுத்துக் காட்டும்:

லண்டன் டைம்ஸ் என்ற இதழ் சில ஆண்டுகளுக்குமுன் திரு. ஆர்தர் சைமன்ஸ், இந்த இந்தியப் பெண்ணுடன் அறிமுகம் கொண்டதைக் குறித்து—அவரது அறிவு, உணர்வு, மதிப்பைப் பற்றி—அன்னார் எழுதிய முன்னுரைப் பகுதியை மேற்கோள் காட்டிற்று: ''அவரது தேசியப்பற்றை மனத்தில் கருதி அவருடைய கவிதைகள் அனைத்திலும் ஒலியின் அழகிலுள்ள உணர்ச்சி ததும்பும் களிப்பு, அவர்தம் மொழியின் சொன்னடை, யாப்பமைதியின் சந்தம் என்பன சிறப்பாகக் குறிக்கத்தக்கன என்று நாம் கண்டறி கிறோம். கவிதை ஊசலில் அவர் மிக்க களிப்போடு ஆடுகிறார் . . . அவருடைய கவிதைகளில் விரைந்த எண்ணங்களும், வலிய உணர்ச்சிகளும் தாமே துள்ளுவதைப்போல,அவர் பாடல் தன்னைத் தானே பாடுவதைப் போலத் தோன்றுகிறது. அவரது ஆழ்ந்தகன்ற நுண்கல்வித் திறம் துள்ளிக் குதிக்கும்; 'தாமரையில் வீற்றிருக்கும் புத்தர் பெருமானுக்கு'—போன்ற பாடல்களில் கால இட நிகழ் வின் கூட்டமைதியைப் பாடும் அகத்தூண்டுதலால் இயல்பாய் இயங்கும் தன்மையும் உள்ளது. இதற்கும் அவரின் கருத்தோட்டக் காட்சியினைக் கவின்மிகு இசையாக்கி வைத்து விரித்துரைக்கும் பாடலுக்கும் இடையில் நெடுந்தொலைவு உண்டு. அங்ஙனமே அவரின் நான்கு குழந்தைகட்குத் தீட்டிய, சிறிய ஈர்க்கின்ற பழமை

நலங்கனிந்த பாடல்களும், இவ்விடத்து மேற்கிந்தியப் பண்பாடும் கிழக்கிந்தியப் பண்பாடும் இரண்டறக் கலக்கும் முறையில் இனிய விளைவளிக்காமல் இல்லை. அது பழைமைகளைப் புதுக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் திறனைக் கவிஞனுக்குக் கொடுத்துள்ளது. அதன் விளைவாக வரும் தன்னேரில்லாத தன்மையை நாம் தயக்கமேதுமின்றிக் கவிதை என்றழைக்கலாம்.[1]

''சரோஜினி பாடிய 'தங்கத் தலைவாயில்' என்னும் கவிதையில் காணப்படுவதைப் போன்ற சிறப்பியல்புடைய கவிதை சிலவற்றைப் படிக்க நேர்வது மிகுந்த களிப்புடையது. அதன் எளிமை கவிஞர் பிளேக்கை நினைவுபடுத்துகிறது. அது எப்போதும் இனிமையானது; அதன் கீழைநாட்டு வண்ணம் பசுமையானது; அதன் வலிவான உணர்த்தும் திறன் விரைவுமிக்கது; நேர்த்தியானது'' என்று பாராட்டிக் களிப்பில் ஆழ்ந்தது, மான்செஸ்டர் கார்டியன் என்னும் இதழ்.[2]

1905 அக்டோபர் வெளியீடான 'தி ரிவ்யூ ஆப் ரிவ்யூஸ்' எழுதியது: ''சென்ற மாதம் களஞ்சியத்தில் சேர்க்கப்பட்டதைப் போல,செழிப்புள்ள கவிதை அறுவடை பல மாதங்களாகக் கிடைக்கவில்லை. சரோஜினி நாயுடு இயற்றிய கீழைநாட்டுத் தன்னுணர்ச்சிப் பாடல்கள் கவிதைகளின் கவர்ச்சியான இனிய தொகுதியை நான் முன்னணியில் வைக்கவேண்டும். பெண்கள் கவிபுனைய முடியாது என்று அறைகூவிய கேலிப் பேச்சாளரின் வாயடங்கும்படியாக இச்சிறு தொகுதி உள்ளது. குறிப்பிடத்தக்க இவ்வழகிய கவிதைகளை எழுதியவரின் வயது இருபத்தாறுதான் என்பது குறிப்பிடத்தக்கதாகத் தோன்றுகிறது. இந்த இந்தியப் பெண்ணின் பாடல்களைப் படித்த பிறகு செல்வி இ. டி. ஃபௌலர் இயற்றிய 'வைஸ் அண்டு அதர்வைஸ்' கவிதைகளைப் படிப்பது மிக வேறுபாட்டைத் தருகிறது. ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அந்த ஆங்கிலப் புலவருக்கு அழகற்ற முறையில், அக்கவிதைகள் வெண்மையாகத் தோன்றுகின்றன. அது நெடுவேனிலின் வனப்புமிக்க கண்ணைக் கவரும் வண்ணப் பெரும் பரப்பிலிருந்து, ஒரு புறநகரின் சின்னஞ்சிறிய பொலிவற்ற தோட்டத்தில் நுழைவதைப் போன்றது.''[3]

டி. பி. எஸ். வீக்லி என்னும் வார ஏடு, ''உண்மையான அழகும் தனிச் சிறப்புமுடைய கவிதைகளைக் கொண்ட நூல் . . . சரோஜினி நாயுடுவின் பணி குறிக்கத்தக்கது; அப்பணி மேலைநாட்டவர், கீழைநாட்டவரை இயன்றவரைக் காணத் தகுந்த ஒரு சாளரத்தைத் திறந்தது'' என்று கூறிற்று.

[1] Quoted in 'Men and Women of India,' May 1906.
[2] Quoted in 'Men and Women of India,' 1906 மேற்கோள்.
[3] The Men and Women of India, May 1906 மேற்கோள்.

'தி மார்னிங் போஸ்ட்' இவ்வாறு எழுதியது: ''கீழை நாட்டவரின் அன்றாட வாழ்க்கையை வருணிக்கும் சில சிறிய பாடல்கள் உள்ளன. அவற்றில் வியக்கத்தக்க தெளிவு இருக்கிறது. கவிதைக்கு ஆற்றலைத் தரும் ஒரு தனிக் கலை இது. அந்த ஆற்றல் எது? சாதாரணமாகக் கண்கள் கண்டவற்றைத் துல்லியமாக உரைப்பது அது... இந்நூல் ஒரு சாதனை மட்டுமில்லை; அழகுக் கவிதையும்கூட ... அது மனக்கிளர்ச்சியை வெளிப்படுத்துவது.''[1]

'தி அகடமி', அழகு நிறைந்த நூல் என்று 'தங்கத் தலைவாயி'லைப் போற்றியது: ''தனித் தன்மையில் களிப்பினையும் வியப்பினையும் தருவது வேறு எது? தானே முழு நிறைவு உடையது; அது ஒவ்வொருவருக்கும் சிறிது கடமைப்பட்டிருக்கிறது. உறுதிப்பாடும் உண்மைப் பயனும் நிறைந்த கவிதைத் தொகுதியை நீண்ட காலமாக நாம் காணவில்லை.''[2]

லைசா லேமன், சரோஜினியின் பதினைந்து பாடல்களுக்கு இசை அமைத்தார். அவர் இலண்டனில் இப்பாடல்களின் 'இசை நாடகத்தை' வெளியிட எண்ணியிருந்தார். இது வெளியிடப் பட்டதா இல்லையா என்பதை நிரூபிப்பது அருமை; ஆனால் சரோஜினியின் பழகிய அறிவாற்றல் நிறைந்த ரசிகர் கூட்டம், உயிர்த் துடிப்புள்ள கண்களைக் கொண்டு இந்த இந்தியப் பெண்ணை உவந்து பார்த்து உறுதியாகப் போற்றியது.

சரோஜினியின் பாடல்களை உண்மையாக மிகப் பாராட்டிய ஆங்கிலத் திறனாய்வாளர் இருவர்; ஆர்தர் சைமன்ஸ், எட்மண்டு கோஸ் என்ற அவர்கள், அக்காலத்தில் புகழ்பெற்ற எழுத்தாளர்களாக விளங்கினர். இவர்களில் ஆர்தர் சைமன்ஸ் (1865—1945), 'ஓர் உருவக நெறியாளர்' (ஸிம்பாலிஸ்ட்); கேம்பிரிட்ஜ் ஆங்கில இலக்கிய வரலாற்றைப் பொருத்தவரை, ஒரு கவர்ச்சியான 'முருகியல் நெறியாளர்' (ஈஸ்தெடிக்); இலக்கியத்தில் உருவக நெறியாளர்போக்கு என்ற அவரது நூல் ஒரு முன்னோடிப் படைப்பு. இவருடைய மொழிபெயர்ப்புகளே ஆங்கிலக் கவிஞர் ஈட்ஸ் கவிதைகளை உணர்வூட்டித் தூண்டின எனப்படுகிறது. உருவகமும் மாயையும் காற்றிலே உள்ளன; வெளிநாட்டவர் ஆங்கிலத்தில் எழுதுவதைத் தடை கூறாத தாராளமான மனப்பான்மை கொண்ட இந்த ஆங்கிலேயரது கற்பனையை, இந்தியாவின் ஒரு மாயக்குழந்தை தன் கற்பனைக் கண்களால் பற்றியது. தம் உணர்ச்சித் தூண்டுதல்களுக்குக் கோஸ் அவர்களுக்குத் தாம் கடமைப்பட்டதாகச் சரோஜினி உணர்ந்தார்; 'தங்கத் தலைவாயி'லின் உரிமை உரையில் எட்மண்டு கோஸ் 'தங்கத் தலைவாயி'லைப் புனைய எனக்கு முதல்

---

[1] Men and Women of India, May 1906 மேற்கோள்.

[2] Men and Women of India, May 1906 மேற்கோள்.

முதல் வழிகாட்டியவர்' என்று எழுதினார். ஆனாலும் இந்த நூலுக்கு முன்னுரை எழுதிய ஆர்தர் சைமன்ஸுக்கும் அவர் பெரிதும் கடமைப்பட்டவர்.

சரோஜினி தம் பாடல்களை நூல் வடிவில் வெளியிடவேண்டுமென்று எழுதி வேண்டினார் சைமன்ஸ். இதுவரை அவை பத்திரிகைகளிலும் இதழ்களிலும் மட்டுமே வெளி வந்தன. இப்போது அவர் உலகுக்கு அவற்றை ஒரு தொகுதியாகத் தொகுத்து அளிக்க விரும்பினார். சரோஜினி உணர்ச்சியால் உந்தப்பட்டு எழுதினார்: ''உங்கள் கடிதம் என்னை மிகப் பெருமைப் படைத்தவளாகவும், மிக வருத்தமுடையவளாகவும் உயர்த்தும் நிலையில் அமைந்துவிட்டது. 'அழகால் செறிந்த' கவிதைகளை நான் எழுதினேன் என்பது முடியுமா? அவற்றை உலகுக்குத் தரும் அளவிற்கு அவை தகுதியுடையன என்று நீங்கள் உண்மையாகவே நினைப்பது என்பது முடியுமா? எனது கருத்துகளை எவ்வளவு உயர்ந்தது என்று நீங்கள் அறிவீர்கள்; எனக்கோ எனது எளிய சாதாரண சிறிய கவிதைகள் அழகு குறைந்தனவாகத் தோன்றுகின்றன. அழகு எனும்போது நான் விரும்பும் அந்த இறுதியான நிலையான அழகைக் கருதுகிறேன்.

''நான் உண்மையாகவே ஒரு கவிஞர் இல்லை. எனக்குக் கற்பனைத் தோற்றமும் விருப்பமும் உண்டு; ஆனால் குரல் இல்லை. அழகு நிறைந்த, பெருந்தன்மையின் உட்கருத்தை ஒரே பாடலில் நான் பாடமுடியுமானால் வெற்றிக் களிப்பில் எப்போதும் மௌனமாக இருப்பேன். ஆனால், பறவைகள் சாதாரணமாகப் பாடுவதைப் போல நான் பாடுகிறேன்; தோன்றி மறைவனபோல உள்ளன எனது பாடல்கள்'' என்று மீண்டும் பணிவுடன் ஒப்புக்கொள்கிறார். பாடல்களின் பறவை போன்ற இப்பண்பே அவர்.

'பாடலுக்குச் சிறப்புத் தந்தது என்று சைமன்ஸ் உணர்கிறார். மேலை நாட்டுச் செல்வாக்கின் ஒரு பகுதியின்மூலம், ஒரு மேலை நாட்டு மொழியின் வாயிலாக உணர்ச்சிகளைக் கண்டறியும் கீழை நாட்டுப் பெண்ணின் உணர்ச்சியை ஒரு மென்மையான நழுவிச் செல்லும்போக்கில் உருவான ஒரு கவியுணர்வை அவை தொனிக்கின்றன. அவை அந்த உணர்ச்சியை முழுவதும் வெளிப்படுத்துவதில்லை; அதன் சாரத்தை அவை வெளிப்படுத்துகின்றன என்று நான் நினைக்கிறேன்; அவற்றில் ஒரு கீழைத் திசைக்குரிய மந்திரத் தன்மை உள்ளது.'[8]

[8] The Golden Threshold, பக். 10.

சரோஜினியின் இரண்டாம் நூலான 'காலப்பறவை'க்கு முன்னுரையைப் பின்னர் எழுதியவர் எட்மண்டு கோஸ். சரோஜினி இங்கிலாந்தில் இவரை 1895—1898 இடைப்பட்ட காலங்களில் அறிந்தபோது, இவர் தம் இளம் மாணவியை இந்தியப் பொருள் களைப்பற்றி எழுதும்படி வற்புறுத்தியதை முன்னர்க் கண்டோம்.

'தங்கத் தலைவாயில்' நூல் இங்கிலாந்தில் மனப்பூர்வமாக வரவேற்கப்பட்டது; அதுமட்டுமல்லாமல் இந்தியா திடீரெனத் தோன்றிய தன் கவிமகளிரில் ஒருத்தியைக் கண்டுணர்ந்து முழு மனத்திருப்தியுடன் மகிழ்ந்தது. அப்போது முதல் அவர் 'இந்தியா வின் கோகிலம்' ஆகிவிட்டார்.

# 7. பாரத கோகிலம்

சரோஜினிக்குரிய இரண்டு பெயர்கள் என்றும் நிலைத்து வாழும். அவை 'இந்தியாவின் கோகிலம்', மகாத்மா காந்தி அழைத்தவாறு 'பாரத கோகிலம்' என்பன. அந்த அழியாப் பறவையுடன் சரோஜினி ஒப்பிடப்படுவதற்குரிய காரணம் அவரது பாடல் மட்டு மில்லை; அவரது கவர்ச்சியான உரைநடையும் ஆகும். அவர் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்து, அவரது அழகிய சொற்களால் கள்ளுண்டதைப் போலக் களித்து வீட்டிற்கு மீண்டதை நான் நினைவு கூர்கிறேன். அவரது மொழி, சொற்ளுேகுதி, பேச்சாற்றல் அனைத்தும் தூய்மையாக இருந்தன. அவரது சொற்பொழிவு களைக் குறித்துப் பல முக்கியமான கருத்துக்களை உள்ளடக்கவில்லை என்ற திறனாய்வுகள் இருப்பது உண்மை. சரோஜினியின் சில சொற்பொழிவுகள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. அவற்றைப் படிக்கும் போது, எண்ணற்ற பல கருத்துக்களையும், தம் காலத்து இருந்த பல பொருள்களையும் அவர் தமது பேச்சின் பொருளாக்கியுள்ளார் என்பதை நான் எப்படியும் உணர்கிறேன். அவரது அனைத்துச் சொற்பொழிவுகளும் தொகுக்கப்பட்டு, ஒரு மிகப் பெரிய தொகுதி யாக வராதது நமது இலக்கிய வெளியீடுகளில் ஒரு பெரிய குறைபாடே. சென்னையைச் சேர்ந்த ஜி. ஏ. நடேசன் அவற்றைத் தொகுக்க மிக உழைத்தார்; ஆனால் அச்சொற்பொழிவுகள் பெரும் பாலும் அவரது முற்பருவத்தில் உருவானவை. அந்நூல்களும் இப்போது பதிப்பில் இல்லை.

ஒரு கவிஞராகப் பெரு வெற்றிப் பெற்றிருப்பதைத் தவிர மற்றொரு திறனும் சரோஜினி கொண்டிருந்ததை விரைவில் அவர் உணர்ந்தார். அவர் தம் வீட்டிலிருந்து புறப்பட்டு அரசியல், சமூக வியல், சமயங்களைப் பற்றிய பொருள்களைப் பேசியவாறு விரைந்து இந்தியாவின் பல பகுதிகளுக்குச் சென்றார். கேட்பவர் கட்டுப்பட்டு இருப்பதற்குரிய அவர் சொற்களின் மந்திர சக்தி எது? கேட்பவர் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக ஒரு கருத்தை அவர் அளித் தார் என்பது உண்மை. அவர் பேசுவதை நாம் கேட்கும்போது, அவர் தம் செழிப்புள்ள பெயரடைகள், சொற்களையும், மரபுத் தொடர்களையும் பன்முறை அடுக்கிக் கூறும் பாங்கு, அவரது கணீ ரென்ற குரல், கவிதையழகுடன் எடுத்துக் கூறும் திறன் இவை அனைத்தும் சேர்ந்து சற்றே மதிமயங்கும் பரவசநிலைக்கு நம்மைக் கொண்டு செல்கின்றன. நம்மில் ஒவ்வொருவருடனும் அவர்

பேசினார். சமுதாயத்தில் புகழ் பெற்றவர் இதோ நம்முன் நின்றார்; சற்றே பேசினார்; பின்பற்றத் தகுந்த நேர்மையான கொள்கையை நமக்கு அளித்தார். ''ஆன்ம வாழ்க்கை என்பது நாம் அடையக் கூடிய ஒரு பொருளில்லை. வாழ்க்கை என்ற ஆடையில் பொன் னிழையைப் போல அது பின்னப்பட்டுள்ளது. தெய்வத்தன்மை அடையும் நிலை இருந்தாலும்கூட, அதை அடைய முடியும்; இல்லையேல் அதை அடைவது தேவை; அதன் உச்சநிலை வரை நாம் அதை முழுவதுமாக வளர்த்துக்கொள்ள வேண்டும். எனது நண்பர்களே நினைத்துப் பார்க்க வேண்டுகிறேன்.''[1]

மக்களின் மனத்தில் அவர் கொண்ட அழியாத ஈடுபாடு மிகத் திகைக்க வைப்பது. சிறப்பாக அவர் இந்திய வாலிபர்மீதும், பெண்கள்விடுதலை மீதும் கவனம் செலுத்தினார்; 1903-ஆம் ஆண்டிற்குமுன் இந்தியாவின் தீய வகையான ஒற்றுமையின்மை யைப் பற்றி உணர்ந்தார்; தாய் நாட்டிற்காக உழைக்கவும் ஒன்று படவும் இளையோரை வற்புறுத்தினார்; சென்னையில் இளையோர் கூட்டத்தின் முன் அவர் முழங்கினார்: ''நீங்கள் ஒரு மாகாணத் தைச் சார்ந்தவர் என்பது உங்களுக்குத் தெரியும். நீங்கள் அதை விடக் குறுகிய ஓர் எல்லைக்கு உட்பட்டு இருக்கிறீர்கள். ஏனெனில் உங்கள் நகரத்தின் அளவுக்கு, உங்கள் சொந்தத் துணைச் சாதியின் அளவுக்கு, உங்கள் அளவுக்கு (மகிழ்ச்சி ஆரவாரம்) உங்களது எல்லை கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. நான் சரியாகப் பேசுகிறேன் என்பதை நான் அறிவேன். ஏனெனில் நானும் என்னுடைய இளமைக் காலத்தில் இத்தகைய குறுகிய நோக்கத்தைக் கொண் டிருந்தேன். பிரயாணங்கள் செய்த பிறகு, திட்டமிட்ட பிறகு, முயன்ற பிறகு, எனது அன்பை விரிவாக்கிய பிறகு, எனது கருணையைப் பரப்பிய பிறகு, பலதிறப்பட்ட இனங்கள், பலதிறப் பட்ட சாதிகள், பலதிறப்பட்ட மதங்கள், பலதிறப்பட்ட நாகரிகங் கள், நண்பர்களோடு தொடர்பு கொண்ட பிறகு எனது பார்வை தெளிவாயிற்று.''[2]

பெண்கள் விடுதலையில் சரோஜினி ஆற்றிய பணியை யாவரும் நிச்சயமாக அறிவர். அதை மீண்டும் கூறுவது மிகை. அமைதியாக வந்து விழும் அவரது சொற்கள், பெண்களை 'எழுக', 'விழிக்க' எனத் தூண்டும் அவரது கவிதைகள்; அவர்களுடைய தவறுகளைத் திருத்திக் கொள்ளும்படி அவர் கூறிய—வற்புறுத்திக் கூறிய மொழி கள், அவர்களது முகத்திரைகளை விலக்கிவிட்டு, வெளிப்புறத்திற்கு வந்து, தம் நாட்டிற்கும், தமக்கும் பணியாற்ற வேண்டும் என்ற எண்ணத்தையும், குறிக்கோளையும் தேக்கிய அவர் உரைகள்,

---

[1] *Ibid*, பக். 11.
[2] *Ibid*, பக். 6.

1917-இல் லார்டு மாண்டேகுவைக் காணச் சென்ற பிரதிநிதிகளின் குழுவுக்கு அவரைத் தலைவராக்கின. மற்றும் 1926-இல் அனைத் திந்திய மாதர் மாநாட்டிற்கு நிறுவனராகவும் ஆக்கின. பெண் களின் நிலையை உயர்த்துவதற்காகத் தோன்றிய எல்லாப் போராட்டங்களுக்கும், வலிமை வாய்ந்த முயற்சிகளுக்கும் அவரே தக்க பின்பலமாக விளங்கினர்.

இந்து முஸ்லீம் ஒற்றுமைக்காகச் சரோஜினி தம் வாழ்க்கை முழுவதும் போராடினர். இரு சமுதாயங்களையும் அவர் ஆர்வத் துடன் விரும்பினர். ஆன்மிக உணர்வுகொண்ட விளக்கத்தின்மூலம் அவை இரண்டையும் ஒருங்கு இணைத்தார். ''நூறுண்டுகளுக்கு முன் இஸ்லாமியப் படை இந்தியாவுக்கு வந்தபோது, கங்கைக் கரை களில் தம் பயணத்திற்குரிய ஒட்டகங்களைத் தயார் செய்தார்கள். அதன் புனித நீரில் தம் வாள்களுக்கு வைரமேற்றிக் குளிர வைத் தார்கள். இஸ்லாமிய வீரர்களுக்குக் கங்கைப் புனித நீராட்டே முதல் வரவேற்பளித்தது. அவர்கள் காலப்போக்கில் இந்தியாவின் குழந்தைகள் ஆனுர்கள்.'' [3]

அவரது சொற்பொழிவுகளில் காணப்படும் கருத்துக்கள் மட்டும் கவனமாகக் கற்பதற்கு ஏற்றன;—அவை அத்துணைச் சிறந்த தனித்தன்மை வாய்ந்தவை. விரைவில் சரோஜினி இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் புகழ்மிக்கவரானர். தென்னுப்பிரிக்காவில் மகாத்மா காந்தி தம் பெயரை நிலைநாட்டுவதற்கு முன்னலேயே, இவர் விடுதலைப் போராட்ட வீரர்களில் முதல்வர் ஆனர். 1905இல் தொடங்கிய சுதேசி இயக்கத்தில் முழுவதும் பங்கேற்றர்.

சரோஜினியின் ஆற்றல் கட்டற்றது. என்றும் வாழும் கருத்துக்களைச் சொற்பொழிவுகள் ஆற்றி நாடெங்கும் பயணம் செய்தபோதும், அவர் பல கவிதைகளை இயற்றி வந்தார். அவரது 'காலப் பறவை'யின் இரண்டாம் தொகுதி 1912-இல் வில்லியம் ஈன்மனல் மீண்டும் பதிப்பிக்கப்பட்டது. இந்த அழகிய கவிதை நூலை 'வாழ்வு முழுவதும் அமைந்த வழிபாடாக்கி அன்புக்கு அடையாளமாக'த் தம் தாய் தந்தையருக்கு உரிமை ஆக்கினர். அதன் முன்னுரையை எட்மண்டுகோஸ் எழுதினர். அவரைப் பொருத்தவரை சரோஜினி, ''அவரது பழைய கவிதைகளில் காணப் பட்டதுபோல் நெடுங்காலம் கவிதைகளில் சிறு பெண் தன்மை யைக் காட்டிக்கொள்ளவில்லை. அந்தக் கட்டம் கடந்துவிட்டது; துன்பத்தின் நெருக்கமான தொடர்புடன் புகழ் பெற்ற வாழ்வின் மற்ெருரு பக்கம்' தோன்றிவிட்டது. மகிழ்ச்சியையும் ஆறுதலினல் உண்டாகும் உள்ளச் சோர்வையும்கூட நன்கு உணர்ந்தவர்.

[3] ''Speeches and Writings of Sarojini Naidu, pp., xvi, xxvii.

அவரது 'முல்லை மாலைகளை' மெலியச் செய்ததையும், வாழ்க்கையெனும் வானப் பொலிவினையும் இருளச் செய்ததை அவர் கண்ட கூடுதலான துன்பங்களே போலும். அவருடைய தனிப் பட்ட உடல் நலத்திற்குப் பெரிய ஊறு விளைவிக்காமல், அவர் தம் பொது நலத்தொண்டுகள் அவரை விட்டுவைக்கவில்லை என்பதை உலகு அறியும். ஆனால், அவை பாடல்களைப் பாடவல்ல சரோஜினி யின் ஆற்றலைத் தளர்த்தவில்லை. மாறாக, அவை ஆற்றலை வலுப் படுத்தின. ஓர் உண்மைக் கவிஞனுக்கு இருக்கவேண்டிய பண்பைப் போல ஓர் உயர்ந்த குறிக்கோள் அவருக்குத் துணை செய்தது. குழந்தைப் பருவத்தில் அவர் உயர்ந்த கனவுகளைக் கண்டார்; இந்தியாவின் ஒரு சுதேயாக அல்லது ஒரு கீட்ஸாக இருக்க அவர் விரும்பினார்; மற்றப் பலவற்றைப் போலவே இந்த விருப்பமும் அவர் மனத்திற்கு அளவுக்கு மிஞ்சிய சோர்வுச் சுமையாக முடிந் திருக்கக்கூடும். ஆனால் அழகு, புகழ் இவற்றுக்காகக் கொண்ட விருப்பமும் சிறந்த உணர்ச்சிகளும் இந்த எரியும் ஆன்மாவில் இப்போதும் ஆற்றலுடன் விளங்கின.' [4] அந்தப் பெயர்—'காலப் பறவை' என்பது உமர்கயாம் பாடலிலிருந்து எடுக்கப்பட்டது.

'காலப்பறவை வீதிவழி கடுகச் சிறிதேயானாலும்
காலப்பறவை அந்தோகாண் கவினார் சிறகை விரித்ததுவே.'

அவரது முந்திய தொகுதிக்கு இருந்த இயற்கையான, ஆரவாரமான பாராட்டளவுக்கு இந்த இரண்டாம் நூல் பாராட்டுப் பெறாவிட்டாலும் இந்நூலும் மகிழ்ச்சியாகவே வர வேற்கப்பட்டது. இதன் காரணம், 'அவர் சிறிது முதிர்ச்சி வாய்ந்த வடிவத்தை அடைந்தார்' என்று கோஸ் அறிவித்த போதிலும் 'தங்கத் தலைவாயி'லில் உள்ளபடி கவிதை வடிவத்தில் தம் சொந்த வேதனைகளையே வடித்துள்ளார். உண்மையில் இதிலிருந்து அவர் மீண்டு வரவில்லை. மேலும் அவர் முன்னர் அறிமுகப்படுத்திய, பழக்கமான இந்தியப் பாங்கும் சிறிதளவு தளர்ந்துவிட்டது. ஆனால் 'யார்க்ஷைர் போஸ்ட்' கூறியது: ''திருமதி நாயுடு தம் மொழியைச் செழிப்படையச் செய்தார். அது மட்டுமல்லாமல், கீழைத்திசையின் ஆன்மா, உணர்ச்சிகள், தியானம், கவர்ச்சி—இவற்றுடன் நாம் நெருக்கமான உறவுகொண்டு வளர் வதற்கு நமக்குத் துணை செய்தார்'' என்று அவ்விமரிசனம் கூறியது. அவர் நூல் நன்றாக விற்பனையாயிற்று. இந்தியா அவரை ஒரு தெய்விகத் தலைவியாகப் போற்றியது.

[4] The Bird of Time, பக். 6,7.

# 8. கோபாலகிருஷ்ண கோகலேயும் சரோஜினி நாயுடுவும்

ஆழமான அன்புமிக்க நட்புக்கொள்ளும் சரோஜினி நாயுடுவின் ஆற்றல் வரம்பில்லாதது. அவர் மகாத்மா காந்தியைத் தமது தலைவராக ஏற்பதற்கு முன்னால், அவர் முதல் நண்பர், முதல் முதல் ஏற்ற 'குரு' மிதவாதிகளின் தேசபக்திப் பரம்பரையில் சிறப்பாகத் தோன்றியவரான கோபாலகிருஷ்ண கோகலே அவர்களே. 'வீர இதயம்' என்று சரோஜினி நாயுடு அழைத்த இவர் தம் 49-ஆம் வயதில் 1915-ஆம் ஆண்டு, பிப்ரவரி 19-ஆம் நாள் மறைந்தார். பிரிந்த அன்பான அவ்விருவரின் வயது வேறுபாடு பதின்மூன்றே ஆண்டுகள், என்றாலும் கோகலே, தென்னாப்பிரிக்காவின் பிரச்சினைகளுக்கு முன்னரே ஒரு தலைவரானார். மகாத்மா காந்தியின் போக்கினையும் அடக்கும் ஆற்றலுடைய ஆலோசகர் ஆனார். இது உண்மைதான்; கோகலே இந்திய வீரர்கள் பலர் உருவாக உதவினார். சரோஜினி நாயுடு அவரை ஒரு மதிப்புக்குரிய ஆசிரியராக நோக்கினார். உண்மையில், சரோஜினி தாய் நாட்டிற்குப் பணியாற்றுவதற்காகத் தம் வாழ்க்கையை அர்ப்பணிக்கும்படி 1902-இல் முதலில் தூண்டியவர் கோகலேதாம்.

கோகலே 'சித்பவன பிராமணர்' என்ற பெரிய குலத்தைச் சார்ந்தவர். அவருடன் ரானடே, திலகர் 'பரஞ்ச்பே'வுடன் சேர்ந்து ஒரு கூட்டுச் சிந்தனையையும், தலைமையையும் அமைத்தனர். இவையே இந்திய விடுதலைக்கு அடிக்கற்கள் ஆகும். தன்னலமற்ற தொண்டர் கூட்டத்தைக் கொண்டு அவர் 'இந்தியத் தொண்டர் கழகம்' ஒன்றைத் தொடங்கினார். அவர்கள் நாட்டுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதற்காக வறுமையிலும், தம்மையே தருவதிலும் தம் வாழ்க்கையை அர்ப்பணித்தனர்.

1912-ஆம் ஆண்டில் லக்னோவில், ஒரு நாள், முஸ்லிம் லீகின் 'புது வரலாற்றுத் தொடர் கூட்டத்தில்' சரோஜினி நாயுடு சொற்பொழிவாற்றினார். பிறகு பூனாவுக்குச் சென்றார். பெர்குஸன் கல்லூரியிலிருந்து இந்தியத் தொண்டர் கழகம் வரை திரு பரஞ்ச்பேவுடன் நடந்தார். அப்போது, கோகலே தளர்ந்து, நீரிழிவு நோயால் துன்புற்றுக்கொண்டிருந்தார். ஆனால், பணியில் ஈடுபடாமல் இல்லை; முஸ்லீம் லீகின் புதுக்

கொள்கைகளைப் படித்துக் கொண்டிருந்தார். நண்பர் சரோஜினியைப் பார்த்தபோது அவர், ''ஆ! உங்கள் நோக்கு உண்மையானது என்று என்னிடம் கூறத்தான் நீங்கள் வந்தீர்களா?'' என்றார். அப்போது முதல் கோகலேயும், சரோஜினி நாயுடும் இன ஒருமைப்பாட்டுக்குப் போராடுபவர் ஆயினர்.

கோகலே சரோஜினியைப் போற்றினார், சரோஜினி அவரைப் போற்றியதைப் போல. 1906-இல், கல்கத்தாவில், பெண் கல்வி பற்றிச் சரோஜினி சொற்பொழிவாற்றியதைக் கோகலே கேட்டு, அதன் இனிமையில் மிக மகிழ்ந்து, ''அவருடைய சொற்பொழிவைக் கேட்பது என்பது ஓர் உயர்ந்த பேறாகும்; அது மிக உயர்ந்த அறிவு விருந்தைவிட மேலானது'' என்று குறிப்பிட்டார்.

''தயவெனும் இனிய இராகத்தின்மீது தொடங்கிய பழக்கமானது வளர்ந்து முடிவில் நெருக்கமான—விருப்பமான நட்புரிமையாகக் கனிந்தது. அதை எனது வாழ்க்கையின் வெற்றிகரமான காலங்களுக்கிடையில் விளைந்த பேறாக எண்ணினேன்'' என்று கூறினார் சரோஜினி. கோகலேயை மகாத்மா காந்தி கங்கை ஆற்றுடன் ஒப்பிட்டார். ''அத்தூய ஆற்றில் புத்துணர்ச்சி தரும் நீராட்டை ஒருவர் பெறலாம். அதன்மீது ஒரு படகு, துடுப்போடு தவழ்வதும் களிப்பைத் தரும்.''

1980-இல், இந்திய தேசியக் காங்கிரஸில் உப்பு வரியைக் குறைப்பதைப் பற்றிக் கோகலே பேசினார். அன்று முதல் இக் கம்பீரமான அமைப்புக்கு ஒரு நிலையான அங்கத்தினரானார். பல ஆண்டுகளுக்குப் பிறகு சரோஜினி அவரை 'இந்தியத் தேசியக் காங்கிரஸின் உலகப் புகழ்பெற்ற தலைவர்' என்று அழைத்தது உயர்வு நவிற்சி ஆகாது. கோகலே வங்காளப் பிரிவையும் ஒப்பந்தக் கூலிமுறையினையும் முழு மூச்சுடன் எதிர்த்துப் போராடினார்' இத்தீமையை அழிப்பதற்குச் சரோஜினி நாயுடும் ஓர் ஆர்வமுள்ள ஆதரவாளர் ஆனார்.

சரோஜினி கோகலேயுடன் கொண்ட நட்பு 1907—1911-ஆம் ஆண்டுகளில் முற்றியது. ஒவ்வொரு சந்திப்பும் கூட்டமும் ஏதேனும் ஆர்வமுள்ள, கவர்ச்சி தரும் கலந்துரையாடல் மூலம் உற்சாகம் தரக்கூடிய பசுமையான நினைவுகளை அளித்து, இந்தியாவுக்குத் தொண்டாற்ற அவரது வாழ்க்கையை உருவாக்கியது. சுறுசுறுப்பான சொந்த வாழ்க்கையாக இருந்தாலும் அதிலும் ஊக்கம் தந்து ஆர்வத்தைத் தூண்டும் ஒரு சொல்லையோ அல்லது இசைவான செய்தியையோ கோகலே அக்கவிஞருக்கு அடிக்கடி அனுப்பினார். 1912-ஆம் ஆண்டின் முற்பகுதியில், சரோஜினி தம் தந்தையுடன் அந்த ஆண்டின் பெரும் பகுதியைக் கழித்தபோது, உண்மை

யான, நெருக்கமான நட்பு வேர் கொள்ளத் தொடங்கியது. கோகலே, ''இதுவரை நான் எப்போதும் உங்களைச் 'சிறகால்' பற்றியிருந்தேன். இப்போது, நான் உங்கள் உண்மையான ஆன்மாவை உணர, நீண்ட நாள் உங்களைக் 'கூண்டில்' அடைப்பேன்'' என்றார். பல திறமைகளைக் கொண்ட, ஆற்றல் மிகுந்த மனிதரின் உண்மையான பெருந்தன்மையைச் சரோஜினி உணர்ந்தார். அவர் மதிப்புரையில் கோகலே அவர்கள், ''வளமான, புரிந்துகொள்ள முடியாத இயல்புடன் கூடிய அநுபவமுள்ளவர்; விடாமுயற்சியுள்ள தொண்டர்'' 'ஒழுக்கம் நிறைந்த பிராமணப் பரம்பரை உருவாக்கிய கனவுகளைக் காணும் மாயக் கற்பனையாளர்.'

இரண்டாவதாகப் பதிக்கப்பட்ட கவிதை நூலான 'காலப் பறவை'யைத் தம் குருவுக்கு, அன்பளிப்பாகச் சரோஜினி தந்தபோது கோகலே அவரை நோக்கி, ''விளக்கு இப்போதும் பிரகாசமாக எரிகிறதா?'' என்று வினவினார். அதற்குச் சரோஜினி, ''முன்னைவிடப் பிரகாசமாக'' என்று ஆர்வமாக விடையிறுத்தார். அதற்குக் கோகலே, ''நீண்ட நாட்களாக வீசி வரும் அந்தச் சூறாவளி வரம்பு கடந்த இச்சகப் பேச்சுகளும், வெற்றிகளும் மூட்டிய எதிர்ப்பில் எப்படித் தாக்குப் பிடித்துக்கொண்டிருந்தது என்று வியப்படைகிறேன்'' என்று கூவினார்.

இரண்டு வீர இதயங்களும் கற்பனை மிக்கவை. இருவரும் ஒரு மாடியில் இருந்தபோது கோகலே சரோஜினியை நோக்கிக் கூறினார்: ''இந்த விண்மீன்களும், குன்றுகளும் சாட்சியாக, என்னுடன் இங்கே நில்லுங்கள். அவற்றிற்கு முன்னால் உங்கள் வாழ்க்கை, உங்கள் திறமை, உங்கள் பாடல், உங்கள் பேச்சு, உங்கள் எண்ணம், உங்கள் கனவு அனைத்தையும் தாய்நாட்டிற்காக அர்ப்பணம் செய்யுங்கள். புலவரே! குன்றின் உச்சியிலிருந்து காட்சிகளைக் காணுங்கள். பள்ளத்தாக்கிலுள்ள பாட்டாளிகளுக்கு நம்பிக்கைச் செய்தியைப் பரப்புங்கள்.''

1912 மே மாதத்தில், இங்கிலாந்தில் சரோஜினி கோகலேயைச் சந்தித்தார். மேலைநாட்டு உடையணிந்து புதிய சூழலில் இருந்த கோகலேயைக் கண்டு சரோஜினி மிக வியப்படைந்தார். சரோஜினி கூறியபடி அவர் விருந்துகளில் கலந்துகொண்டார். 'பிரிட்ஜ்' விளையாடினார்; ''நேஷனல் லிபரல் கிளப்'' மேல்மாடியில் நடைபெற்ற விருந்துக்குப் பெண்களை வரவேற்றார்.

இலண்டனில் கோகலே ஒரு நோயாளியாக இருந்தார். சரோஜினியுடன் அவர், 'கென்சிங்டன் கார்டனுக்கு' அடிக்கடி சென்றார். ஒருமுறை கோகலே 'உங்கள் மூளையின் ஒரு மூலையை

என்னிடம் கொடுங்கள். அதை நான் என்னுடையதாகக் கூற முடியும்' என்றார் சரோஜினியிடம். பதிலுக்குச் சரோஜினி, ''அவருடைய அந்தச் சிறப்பான மூலையில்தான், நான் மறவாத பல நன்மொழிகளைச் சேர்த்து வைத்திருக்கிறேன்'' என்றார். இறுதி ஆண்டுகளில், கோகலே, இலண்டனில் சரோஜினியின் நட்பினை மேலும் மிகச் செழிப்படையச் செய்தார்.

சரோஜினி அவரைக்காண வந்தபோது, கோகலே, ''எனது அனைத்து மருந்துகளிலும் மிகச் சிறந்தது'' எனச் சிறப்பித்து அழைத்தார். இறுதியில் 1914 அக்டோபர் மாதத்தில் பிரிவு வந்தது. இலைகள் உதிரும், இலையுதிர் காலத்து வருத்தமும், செறிந்த மூடுபனியும் அவரது மனநிலையில் படிந்திருக்கவேண்டும். அல்லது இறப்பின் சாயலை அவர் உணர்ந்திருக்கவேண்டும். அது எதுவோ? சரோஜினியை வழியனுப்பி வைத்துக் கூறினார்: ''நாம் மீண்டும் சந்திப்போம் என்று தோன்றவில்லை. நீங்கள் வாழ்ந்தால், உங்கள் வாழ்க்கை நாட்டுக்கு உழைக்க அர்ப்பணிக்கப்பட்டது என்பதை மறக்கவேண்டாம். எனது பணி முடிந்துவிட்டது.''

# 9. மகாத்மாவுடன் முதல் சந்திப்பும் தொடக்கப் பணியும்

எதிர்முனைகள் தமக்குள் ஈர்க்கும் நிலையுடையன என்பது ஒரு பொதுவான எண்ணம். மகாத்மா காந்தி, சரோஜினி நாயுடுவைப் பொருத்தவரை, வேறுபட்ட சக்திகளைக் கொண்ட இருவரை ஏதோ ஒரு புதிய பிணைப்பு உறுதியாக இணைத்தது. காந்திஜி ஒரு நெறி தவறாத துறவி; அகிம்சையின் தூதர். சரோஜினி நாயுடு ஒரு மகிழ்ச்சியான கவிஞர்; களிப்புடையவர்; நகைகளை, வண்ணப் புடைவைகளை, நல்ல வாழ்க்கையை விரும்புகிறவர்; நல்லுணவு உண்ண ஆசைப்படுபவர். நோயுற்றிருந்தாலும் வாழ்க்கைச் செல்வத்தை அவர் முழுவதும் அநுபவித்தார். ஆனாலும் அந்தத் துறவியும் புலவரும் பல சிறப்பியல்புகளைப் பொதுவாகப் பெற்றிருந்தனர். அவர்களது ஆசைகளும், கொள்கைகளும் இணைந்தன. அமைதிக்கும், ஒற்றுமைக்கும் அவர்கள் இருவரும் தூதர்; தேசீய ஒருமைப்பாடு என்ற ஒன்றினுக்காகத் தம் வாழ்க்கையைத் தியாகம் செய்ய விரும்பி இருந்தனர். மற்றும் சரோஜினி மகாத்மாவைப் போலப் புலாலுணவு உண்ணாதவர் இல்லை; இருந்தாலும் அகிம்சையை ஆர்வத்துடன், உண்மையுடன் பின்பற்றுபவர். மேலும் சரோஜினி, காந்திஜி இருவரும் நகைச்சுவையாகப் பேசுந் திறனைக் கைவரப்பெற்றவர். அது, அவர்கள் சந்திக்க பல நெறிகளை—துன்பங்களைக் கடக்க உதவியது; குழப்பங்கள், ஏமாற்றங்களுக்கிடையிலும் அவர்களைச் சிரித்து மகிழச் செய்தது; மேலும் ஒருவருக்கொருவர் நகைச்சுவைகளை வெடிக்க வைத்தது. 'பாபு மட்டும் வறுமையில் செம்மையாக வாழும் முறையை அறிந்தார்' என்று சரோஜினி குறிப்பிட்டார். அவரால் இதைவிட உண்மை நிறைந்த தொடர் வேறு எதுவும் கூற முடியவில்லை. மகாத்மா காந்தி பழக்கப்படுத்திய, அறிவுறுத்திய வறுமையைச் சரோஜினியால் புரிந்துகொள்ள முடிந்தது. அப்புதிய வாழ்க்கை முறை, ஏழை, பணக்காரர்களுக்கு இடையிலுள்ள பிளவை இணைக்கத் தேவைப்படுவது.

சரோஜினி வண்ணங்களை விரும்புகின்றார். மகாத்மாவின் உலகமோ, சுற்றிலும் வெள்ளிய பழுப்பு நிறங்களால் எளிய அமைப்பில் பெரும்பாலும் கட்டப்பட்டுள்ளது. ஆனாலும் கவியரசியின், வானவில்லின் வண்ணங்களுடன் கலந்து ஒளி வீசினார் மகாத்மா காந்தி. அவரது எளிய சூழலுக்கிடையில், அறிவுக்

கூர்மையுள்ள பாடும் பறவையை மட்டற்ற மகிழ்ச்சியுடன் வர வேற்கிறார். ஏனெனில் சரோஜினி நகைச்சுவையையும் மகிழ்ச்சியையும் சிறந்த முறையில் வெளிப்படுத்தினார்: வாழ்க்கையின் உயிர்ப் பகுதிகளான இவற்றை, 'தேவைகள்' என்று கருதினார் மகாத்மா காந்தி.

மகாத்மா காந்தியைவிடச் சரோஜினி நாயுடு பத்து ஆண்டுகள் இளையவர். 1914-ஆம் ஆண்டு, தமக்கு முப்பத்தைந்து வயதிருக்கும் போது, லண்டனில் சரோஜினி அவரை முதல் முதல் சந்தித்தார். இந்த முதற் சந்திப்பைப் பற்றி வாழ்க்கை வரலாற்று ஆசிரியரிடம் அவர் பின்னர்க் குறிப்பிட்டது: ''நான் அவரை 1914-ஆம் ஆண்டில் சந்தித்தேன். அதற்கு முன்பே அவர் மகாத்மாவாக இருந்தார்.'' முதல் உலகப் போர் தொடங்கிய இரு நாள்களுக்குப் பிறகு, 1914-ஆம் ஆண்டு ஆகஸ்டு 6-ஆம் தேதி, காந்திஜி தென்னுப்பிரிக்காவிலிருந்து இங்கிலாந்துக்கு வந்தார். கோகலே அவரை இலண்டனுக்கு வரும்படி அழைத்தார்; ஆனால் அவரே பாரிஸில் தங்கிவிடும் நிலைமை ஏற்பட்டுவிடவே தம் இளம் மாணுக்கரைச் சந்திக்க முடியவில்லை. ஆகவே, அப் பெரிய தலைநகரில் காந்திஜி ஒரு தளர்ந்த முடிவுடன் இருந்தார். ஏனென்றால் தம் குரு வருகின்றவரை அவரால் எதுவும் செய்ய முடியாது. இங்கிலாந்தில் வாழும் இந்தியர்கள் தாம் முன்னரே அடிமைகளாக இருக்கின்ற காரணத்தால், தம் நாடு போர் முயற்சிகளுக்கு உதவக் கூடாது என்று கருதினர். ஆனால் காந்திஜி அடிமைகள் அளவுக்கு நாம் தாழ்த்தப்படவில்லை என்பதைப் பின்வருமாறு வற்புறுத்தினார்: ''துன்பமான காலத்தில் இங்கிலாந்து இருக்கும்போது, இந்தியா அதனிடம் விடுதலையைக் கேட்டுக் கலவரப்படுத்தக் கூடாது. இங்கிலாந்தின் தேவை நமக்குத் தகுந்த வாய்ப்பாக மாறி விடக்கூடாது என்று நான் நினைத்தேன். போர் நீடித்தபோது, நமது தேவைகளைக் கேட்காமல் இருப்பது பொருத்தமானது, முன்யோசனையுடையது என்று நான் நினைத்தேன்.''

ஆகவே போயர்—சூலு போர்களில், தென்னுப்பிரிக்காவில் நோயாளிகளுக்கும் புண்பட்டவர்களுக்கும் தாம் உதவியதைப் போலவே, அவர், இந்திய ஆம்புலன்ஸ் தொண்டர் படையைத் தொடங்கினார். தமது உதவியைத் தெரிவித்து, மகாத்மா காந்தி, சரோஜினி நாயுடு, மற்ற இந்தியர்கள் கையொப்பமிட்ட ஒரு கூட்டுக் கடிதம் பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு அனுப்பப்பட்டது.

சிறிது தயக்கத்திற்குப் பின்னர்ப் பிரிட்டிஷ் அரசு காந்திஜியின் உண்மை நிலையை உணர்ந்தது. பயிற்சி தொடங்கப்பட்டது. தொண்டர் படை அமைக்கப்பட்டது. ஆகவே, சரோஜினியும், காந்தியும் இந்த ஒரு காரணத்துக்காகவே உழைக்குமாறு ஈர்க்கப்

பட்டனர். புகழ் பெற்ற பெண்கள் குழு ஒன்று அமைந்தது; சரோஜினி அதன் ஓர் அங்கத்தினர். அங்கத்தினர்கள் இந்திய தொண்டர் படைக்குத் தேவையான உடைகளைத் தைக்கத் தொடங்கினர். கவிஞர் மகாத்மா காந்தியுடன் சந்தித்த முதல் சந்திப்பை நாடக முறையில் வருணித்தார். அவர் எழுதுகிறார்:

''1914-ஆம் ஆண்டு இலண்டனில் பெரிய ஐரோப்பியப் போரின் தொடர்பாக மகாத்மா காந்தியுடன் எனது முதல் சந்திப்பு ஆச்சரியமாக நிகழ்ந்தது. அப்போதுதான் அவர் அமைதிப் போராட்டத்தின் கொள்கைகளைத் தொடங்கி, தம் நாட்டு மக்களுக்கு வெற்றியும் பெற்று, அந்த வெற்றிப் புத்துணர்ச்சியோடு தென்னாப்பிரிக்காவிலிருந்து வந்திருந்தார். அவர்கள் பயங்கரமான ஜெனரல் ஸ்மட்ஸிடம் ஒப்பந்தக் கூலிப் பணியாளர்களாக அச்சமயம் இருந்தனர். அவர் வருகையின்போது வந்த கப்பலைச் சந்திக்க என்னால் இயலவில்லை. ஆனால், மறுநாள் பகற்பொழுதில், கென்சிங்டனில் ஒரு மறைவான பகுதியில் அவரது இருப்பிடங்களைச் சுற்றிலும் தேடித் திரிந்தேன். பழைய நாகரிகமற்ற வீட்டின் செங்குத்தான படிகளைக் கடந்து ஏறினேன். மொட்டைத் தலையையுடைய ஒரு சிறிய மனிதரின் உயிர்ப்படத்திற்குச் சட்டமாகத் தெரியும் சிறந்த கதவுகளைக் கண்டறிந்தேன். அவரோ தரையில் கறுப்பான ஒரு 'சிறைச்சாலைப் போர்வை'யின்மீது அமர்ந்தவாறு, மரத்திலான 'சிறைச்சாலைச் சட்டி'யில் தக்காளிச் சாறும் ஆலிவ் எண்ணெயும் கலந்து செய்த குழம்புணவு அருந்துவதைப் பார்த்தேன்.

''அந்தச் சுற்றுப்புறத்தில், வறுத்த வேர்க்கடலைகளும், உலர்ந்த மாவிலான சுவையற்ற பிஸ்கட்டுகளும் கொண்ட நசுங்கிய தகரப் பெட்டிகள் சில அடுக்கப்பட்டிருந்தன. அவர் பெயரோ நம் நாட்டில், வீட்டில் சாதாரணமாக வழங்கும் ஒரு மந்திரச் சொல்லாக ஏற்கெனவே அமைந்துவிட்டிருந்தது. அப்புகழ் பெற்ற தலைவரது அந்த வேடிக்கையான, எதிர்பாராத தோற்றத்தைக் கண்டதும் உடனே நான் வெடிச் சிரிப்புச் சிரித்தேன். அவர் என்னைப் பார்த்தார். 'ஆ! நீங்கள் திருமதி நாயுடுவாகத்தான் இருக்க முடியும். இந்த அளவு மதிக்காத துணிவு வேறு யாருக்கு இருக்கும்? உள்ளே வந்து என் உணவைப் பகிர்ந்துகொள்ளுங்கள்' என்று கூறியவாறு திரும்பச் சிரித்தார். 'நன்றி, வேண்டாம்!' என்ன வெறுக்கத்தக்க உணவு அது! வாசனையைப் பிடித்தபடி பதிலுரைத்தேன். இவ்வாறாக, அப்போது முதல் எங்கள் நட்புத் தொடங்கியது; உண்மைத் தோழமையாக மலர்ந்தது; நீண்ட அன்புடைய சீடர்க்குரிய அன்புத் தன்மையாகக் கனிந்தது. அப்பண்பு, இந்தியாவின் விடுதலைக்காகத் தொண்டு செய்த முப்பதுக்கு மேற்பட்ட ஆண்டுகளில் ஒரு மணி நேரம் கூடத் தடுமாறவில்லை.

இலண்டனுக்குச் சென்றிருந்தபோது, அந்த மெல்லிய இரட்டையரை வாழ்த்திய பெரிய கூட்டத்தையும் சரோஜினி நினைவு கூர்ந்தார். சில நாட்களுக்குப் பின்னர், இந்தியாவுக்கு அவர் திரும்பும் முன் அவர் 'மகாத்மா'வை எந்த அளவுக்கு நெருக்கமாகக் காணமுடியுமோ அந்த அளவுக்குக் கண்டார். கிழைத் திசை, மேலைத் திசையைச் சேர்ந்த எல்லா நாட்டைச் சார்ந்தவரும் அவர் வீட்டில் கூடியிருந்தனர். அக்காட்சி என்னைப் பரவசமடையச் செய்தது. உண்மை மகத்துவத்தை அகில உலகமும் ஒருபடித்தாக வியப்புடன் பேசுகிறது. இதுவே ஒரு நிருபணம்.

சரோஜினி நாயுடு திரும்பிய பின் தமது சொற்பொழிவுப் பயணங்களைப் புதுப்பித்தார். மகாத்மா காந்தி இலண்டனில் நோய்வாய்ப்பட்டார்; முழு ஓய்வில் இருக்கும்படி கட்டளையிடப் பட்டார்; 1915-இல் அவர் இந்தியாவுக்குத் திரும்பியபோது, கோகலே, எந்தப் பணியையும் தொடங்குவதற்கு முன்னால் ஓர் ஆண்டு அவரை ஓய்வெடுக்கக் கேட்டுக்கொண்டார். அப்படியே அவர் ஓய்வெடுத்தார். ஆகவே, சரோஜினி, மகாத்மாவுக்குச் சில ஆண்டுகளுக்கு முன் இந்தியாவில் நன்றி அறிமுகமான ஒருவராகத் திகழ்ந்தார். அத்துறவிக்காகச் சரோஜினி மேற்கொண்ட பிரிவு மிக்க விருப்பம் தென்னாப்பிரிக்காவில் அவரது நெறியைத் தாம் பின்பற்றியதால் மேலும் கிளர்ந்தது. சரோஜினி 'ஒடிந்த சிறகு' என்ற தம் நூலில், அவரை முன்னிலைப்படுத்தி ஒரு கவி பாடினார்.

1916-இல் மகாத்மா காந்தி காங்கிரஸ் கூட்டத்திற்குச் சென்றிருந்தார்; இந்திய அரசியலில் அவர் ஈர்க்கப்பட்டார். அப்போது அவர் சரோஜினி புகழடைந்த நிலையில் இருந்ததை அறிந்தார். அந்த ஆண்டுக்கு முன் இந்தியத் தேசியக் காங்கிரஸில் 'விழித்தெழுக' என்ற பாடலை இயற்றியதுடன், சரோஜினி பம்பாயில் ஒரு கிளர்ச்சியை உருவாக்கினார்.

1916 முதல் விடுதலை இயக்கம் ஒரு திட்டவட்டமான வடிவம் கொள்ளத் தொடங்கியது. சாம்பாரன் நிகழ்ச்சி மகாத்மாவையும் புகழ் நிலைக்குக் கொண்டு வந்தது. அவர், தம் கவனத்தைத் தென் ஆப்ரிக்காவிலிருந்து, தம் சொந்த நாட்டின்மீது திருப்பத் தொடங்கினார். சுய ஆட்சி, ஒப்பந்தக் கூலிப்பணி, இந்து முஸ்லீம் ஒற்றுமை போன்ற மற்ற முக்கியப் பிரச்சினைகள், மகாத்மாவும் சரோஜினியும் நாட்டில் மிகத் துன்பப்படுபவர்களை அரவணைக்கும் அன்புப் பணியினிடையே ஒருவருக்கொருவர் உடனிருந்து உழைக்கும்படி அவர்களை ஊக்கின. ரௌலத் அல்லது கறுப்புச் சட்ட முறை 1919-இல் அனுமதிக்கப்பட்டது, நாட்டிற்குப் பெரும்

அதிருப்தியைக் கொடுத்தது; பெரிய கிளர்ச்சிகள் தோன்றின. அவை அனுமதிக்கப்படும் முன், அது நடைபெறுமல் தடுக்கவும், தீர்வு காணவும் பெரிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

1919 மார்ச்சு மாதத்தில் மகாத்மா காந்தி சாபர்மதி ஆசிரமத்தில் ஒரு மாநாட்டைக் கூட்டினுர். பன்னிரண்டு பேர்களே அழைக்கப்பட்டிருந்தனர்; அவர்களில் ஒருவர் சரோஜினி நாயுடு. சத்தியாக்கிரகக் கொள்கைகள் வரையறுக்கப்பட்டன; கையெழுத்திட்டவர்களில் சரோஜினியும் இருந்தார். ஏப்ரலில் நடந்த மறியல் போராட்டத்திற்கு முன்னுல் சரோஜினி நாட்டின் பல பகுதிகளில் பேசினுர். பேச்சில் அவர் கொண்டிருந்த தனித் திறமை, வியப்பான முறையில் மக்களை எழுச்சி அடையச் செய்தது. 1919 மார்ச்சு மாதத்தில் சென்னையில் நடைபெற்ற ஒரு பெரிய கூட்டத்தில் பேசிய அவர், காந்திஜி மீதும், சத்தியாக்கிரகத்தின் மீதும் கொண்ட பற்றினை விளக்கினுர்: ''சத்தியாக்கிரக இயக்கம் என்பது ஒரு முழுமையான வாழ்க்கையின் கொள்கை. அது ஒரு தேவைக்காக வளர்ந்து பெரிதாகவேண்டும். ஏனெனில், அது வாழ்க்கையின் அழிவற்ற கடமைகளைத் தன்கண் அடக்கிக்கொண்டிருக்கிறது. ஆகவே மகாத்மா காந்தி ஓர் உயர்ந்த துறவியாக அல்லது குருவாக இருந்த கோயிலில் அல்லது ஆசிரமத்தில் அந்தச் சத்தியாக்கிரக இயக்கம் அதன் தீயைத் தூண்டியது. உண்மை பேசுவது நல்லது; ஆனுல் உண்மையோடு வாழ்வது மேலும் நல்லது'' என்று அவர் பேசினுர்.

1919 ஏப்ரல் 6-ஆம் தேதி அனைத்திந்திய அளவில் ஒரு முழு மறியல் கிளர்ச்சி நடைபெற்றது. இந்த இயக்கம் பம்பாயில் முழுமையாக வெற்றி பெற்றது. முஸ்லீம்களும், இந்துக்களும் ஒரே குழுவாக இருந்து தொண்டு செய்தனர். ஒரு பள்ளி வாசலுக்கு மகாத்மா காந்தியும், சரோஜினியும் அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கு இருவரும் சொற்பொழிவாற்றினர். மறுநாள் அமிர்தசரஸ் போகும் வழியில் காந்திஜி கைதாஞர். அடுத்து 'ஜாலியன் வாலாபாக்' கொடுமைகள் நிகழ்ந்தன. ஜாலியன் வாலாபாக்கில் நிகழ்ந்த பேரச்சம் தரும் திடீர் மாறுதல் ஒரு பெரிய பயங்கர உணர்ச்சியைத் தருவதாக இருந்ததால், அதற்கு எதிர்ப்புக் காட்டும் முறையில் தமது 'சர்' பட்டத்தை இரவிந்திரநாத் தாகூரும், பிறகு 'கெய்சர்—இந்து' தங்கப் பதக்கத்தைக் காந்திஜியும் திரும்பக் கொடுத்துவிட்டனர். இப்போது விடுதலை இயக்கம் தன் வழியில் சிறப்பாகச் சென்றது. அஹிம்சை சத்தியாக்கிரகப் படையில் இருந்தவர் எண்ணிக்கையும் விரைவில் உயர்ந்தது. மாண்ட்போர்டு சீர்திருத்தங்கள், வேல்ஸ் இளவரசர் அவர்களின் வருகை, பெரிய போரில் பிரிட்டிஷாருக்காக மிகுந்த

இரத்தத்தை இந்தியா சொரிந்த பிறகு அது காரணமாக நடத்தப் பெற்ற முறைமை போன்ற இவை அனைத்தும் வெறுப்புணர்ச்சி யுடன் கூடிய இனத்தைச் சீராக உருவாக்கின. முஸ்லீம்கள் பெருங் குழப்பத்திற்கு இடையில் இருந்தனர். சிறப்பாக 'கிலாஃபத் இந்திய இயக்கம்', கீழ்த்திசை நாடுகளில் வாழ்ந்த முஸ்லீம்களுக்காக இந்துக்கள் கொண்ட கருணை எந்த அளவுடையது என்பதை எடுத்துக்காட்டியது.

வேல்ஸ் இளவரசர் அவர்களின் வருகையின்போது, ஏற்பட்ட எதிர்ப்புகளும், சௌரி சௌரா குழப்பங்களும் காந்திஜியை, 'சுயராஜ்யம், தமது மூக்கில் மணம் வீசுகிறது' என்று உண்மை யாகவே குறிக்க வைத்தன. அவர் அமைதியை வேண்டினார். ஆனால் மக்கள் அறிவுத்தராதரம் அனைத்தையும் இழந்துவிட்ட தாகத் தோன்றியது. குழப்பம் மிகுந்த பகுதிகளில் பணிபுரிந்து கொண்டிருந்த சரோஜினி ஒரு செய்தியைத் தெரிவித்தார். "உடனே ஒரு மருத்துவரை அனுப்புங்கள். ஆண்கள் இறந்து விட்டார்கள்; இறந்துகொண்டிருக்கிறார்கள், அடிபட்டவர்கள் தெருவில் விழுந்து கிடக்கிறார்கள்."

காந்திஜி, மக்களது பாவங்களுக்காக உண்ணாவிரதம் இருந் தார். அவரைப் பின்பற்றுகின்றவர்கள் அமைதியை நிலைநாட்ட இரவும் பகலும் உழைத்தனர். ஓர் எழுத்தாளர் குறிப்பிடுகிறார்: "திருமதி சரோஜினி நாயுடுவின் துணிவை நான் என்னவென்று கூறுவேன்? நேரத்திற்கு நேரம் அவர் வெளியில் சென்று, குழப்பம் நடைபெறும் பல பகுதிகளில், குழப்பம் விளைவிப்பவரின் இடையில் புகுந்து மீளும்போதெல்லாம், சரோஜினி தம் வீர நிகழ்ச்சிகளை மகாத்மாவிடம் கூறுவார். அதுகாலை வேறு சிலர் ஒருவேளை குற்றம் கூறப்படுவதற்குரிய கோழைத்தனமான செயல்களைச் செய் திருந்தாலும் அதனையும் நாடகக் காட்சிபோல மகாத்மாவிடம் கூறி, மறவாமல் தம்முடைய தனிப்பட்ட துணிவுமிக்க செயல்களை யும் அவரிடம் வருணிப்பார். இவ்வாறாக, அவர்கள் அனைவரிலும் சிறப்புமிக்கவராகச் சரோஜினி அமைந்தார். மகாத்மா, துன்பம், ஆவல் இவற்றின் இடையில் போராட்டத்தில் இருந்த காலத்தி லும், எப்போதாவது அவரது இதழில் ஒரு புன்னகையைத் தவழச் செய்யச் சரோஜினியால்தான் முடிந்தது."

## 10. 'ஒடிந்த சிறகு'

அவ்வப்போது இயற்றப்படும் பாடல்களைத் தவிர, 1917-ஆம் ஆண்டில் 'ஒடிந்த சிறகு' என்ற கவிதையை வெளியிட்டதுடன் சரோஜினி கவிதைகளை இயற்றுவது முடிவுக்கு வந்தது. கவிதை எழுதுவதைத் திடீரென்று விடுவதற்குப் பல காரணங்கள் தோன்று கின்றன. தற்காலச் சூழ்நிலையோடு சரோஜினி பொருந்த முடியாமை மிகத் தகுந்த ஒரு காரணமாகலாம். 20-ஆம் நூற்றாண்டின் 'இருபதுகளின்' தொடக்க முதலே 'ஜார்ஜ் காலத்திய பாடல்கள்' ஏற்கெனவே புகழடைந்திருந்தன. புதிய சுயமான எழுத்தாளர்களைப் போலத் தாம் ஒன்றும் எழுதாததைச் சரோஜினி நன்கு உணர்ந்தார். இப்போது அவர் தம் கவிதைப் பிரிவு பழைய போக்குடையதாக மாற, புதுப் பிரிவு தொடங்கியது. முதல் உலகப் போருக்குப் பின்னர், அது நம்பிக்கையற்ற, தெளி வில்லாத அழகில் மூழ்கியது. தன்னுணர்ச்சிப் பாடல்களுக்குரிய இலக்கணம், ஒழுங்குமுறைகள், கவிதை வடிவத்தைச் சார்ந்திருத் தல் என்ற இவற்றைக் கைக்கொண்டிருக்கும் அவர், பின்பற்று வதற்கு அது ஒரு தனித்தன்மையுடன் திகழவில்லை.

சரோஜினி 'ஒடிந்த சிறகு' என்ற கவிதை எழுதும்போது, உண்மையான தத்துவக் கவிதைகளை எழுத முயன்றதைப் போல, இப்போது எழுதத் தவறியதை அவர் உள்ளம் உணர்ந்ததும் மற்றொரு காரணமாக இருக்கலாம். 1615-இல் அவர் தம் அடுத்த நூலின் பெயரை, கோகலேயிடம் கூறியபோது, கோகலே 'உங்களைப் போன்ற ஒரு பாடும் பறவை எதற்காக ஒடிந்த சிறகைக் கொண் டிருக்கவேண்டும்?' என்று கேட்டார். அவரது தன்னுணர்ச்சிப் பாடல்களுக்குரிய கவிதைப் பொருள்கள் முடிவுற்றன. மேலும் புதுமையாகச் சேர்க்கவேண்டியது தற்சமயம் அவரிடம் சிறிதளவே இருக்கிறது என்பதை அவர் உணர்ந்திருக்கவேண்டும். உலகம் மேலும், மேலும் துன்பமுடையதாகவும், கடுமையானதாக வும் மாறிக்கொண்டிருந்தது; அவர் ஒரு பாடும் பறவை. உலகப் போரின் குழப்பங்கள் நிறைந்த காலத்தில் பறவைகள் எவ்விடத் தில் பொருந்தி யிருக்க முடியும்? எப்படியும் கோகலே கேட்ட வினவுக்குரிய விடை, தயக்கத்துடன் தரப்படவில்லை; அது அவரது முழுத் தன்னம்பிக்கையைக் காட்டவேண்டியதாக அமைந்துள்ளது.

''எழுகின்ற வசந்தத்தை எதிர்கொள்ள எழுகின்றேன்!
பாருங்கள் விண்மீன் பரப்பும் அளந்திடவே
ஒடிந்திட்ட சிறகடித்தே உயரப் பறக்கின்றேன்.''

கதிரவனின் கதிர்கள் கருடனின் சிறகுகளை எரித்தன. அப்படி இருந்தாலும் அது இராமருக்கு உதவியது. அதைப் போல அவர் அடிபட்டாலும், புண்பட்டாலும் துன்பங்களுக்கு மேலும், பிரச்சினைகளுக்கு மேலும் உயர்ந்து 'விண்மீன்களை அளக்க' வேண்டும். இந்த அடிக்கருத்து, 1947-ஆம் ஆண்டு ஆசிய மகா நாட்டில் அவர் ஆற்றிய, நினைவுகூரத் தகுந்த சொற்பொழிவில் மீண்டும் வற்புறுத்தப்பட்டது.

'ஒடிந்த சிறகுக்காகச் சரோஜினி தம்மைத் தாமே ஈடுபடுத்திக் கொண்ட செயல் துரதிர்ஷ்டவசமானது. தத்துவத்தில் மட்டு மன்றி அக்கவிஞர் இந்திய மகளிரோடும், தேசியத் தொண்டோடும் புதுமையான முறையில் ஈடுபடவேண்டியதாயிற்று. பலதிறப்பட்ட பொருள்கள் ஒவ்வொன்றும் முழுமையாகக் கலக்கவில்லை. பாடல் கள் தனித்தனியாக உள்ளன. அவை: பிறப்பு இறப்புப்பற்றிய பாடல்கள், நினைவு கூர்ந்துரைக்கும் சிந்தனைப் பாடல்கள், இசைப் பாடல்கள், இறுதியாக மூன்று பகுதிகளாக உள்ள 'ஆலயம்' 'காதலின் புனிதப் பயணம்' தனித்தனியான தன்னுணர்ச்சிப் பாடல்கள் ஆகியன, அவர் தம் பழைய பாடல்களைப் போலவே அழகுடையன. காதலனிடம் தன்னை ஒப்படைத்திருக்கிறாள் ஒரு பெண்—பரமாத்மாவை அழைக்கும் மனித ஆன்மாவைப்பற்றி உரைக்கவே சரோஜினி இதை ஓர் உருவகமாக அமைத்தார் என்பது தெரிகிறது. அந்தப் பெண்ணின் இதயத்தை அறிமுகப் படுத்திப் பாடும் பொருளில் அவரது தொடர் நாடகம் வீழ்ச்சி யடைந்தது எனலாம்.

'உரிமை உரை' முதல் காணத் தொடங்கலாம். பிரசார நோக்கத்தோடோ அல்லது இயல்பாகத் தோன்றாத சில கருத்து களை வேண்டுமென்றே மிக வற்புறுத்தும் முனைப்போடோ எழுதும் எந்தப் புலவரும் வெற்றி பெறுவதில்லை என்பதை ஒருவர் உணர்வர். உரிமை உரை முழுவதையும் மேற்கோள் காட்டினால், 1916-இல் எழுதப்பட்ட 'ஒடிந்த சிறகு'—'இன்றைய கனவுக்கும், நாளைய நம்பிக்கைக்கும்' உரிமையாக்கப்பட்டது. இந்தச் சொற்கள் சரோஜினியின் பாடல் நடையின் இயல்பையே பெரும்பாலும் கொண்டிருக்கின்றன. ஒரு நிலைபேறற்ற சாமான்யக் கவிஞனை ஒரு முன்னுரை வாயிலாக வரையறை செய்ய முயல்வது வாசகரின் அறியும் சக்திக்கு அகப்படாதது. ஏனெனில் கலையை ஒரு குறிப் பிட்ட வரையறைக்குள் அடக்கிவிடமுடியாது.[1]

முன்னுரையைப் படிப்பதைத் தவிர, நூலைப் படிக்காமல் எறிந்துவிட ஒருவர் நினைப்பர். ஆனால் முன்னரே சரோஜினியின்

[1] Key to Modern Poetry by Lawrence Durnell.

கவிதைகள் பலவற்றை அனுபவித்தோம். அந்தப் பக்கங்களில் நாம் துணிந்து ஈடுபட்டு, அவர் எவற்றைக் கூறுகிறார் என்பதைக் காண்போம்.

பிறப்புப் பற்றிய பாடல்கள், மற்றச் சில சந்தர்ப்பங்களில் தோன்றிய கவிதைகள் நீங்கலாக, 'ஒடிந்த சிற'கின் இறுதிப் பகுதி மூன்று பகுதிகளைக் கொண்ட தொடர் நாடகம். 'கோயில்', 'காதலின் புனிதப்பயணம்'ஆகும். ஒவ்வொரு பகுதியிலும் எட்டாக, மொத்தம் இருபத்து நான்கு பாடல்களை அது கொண்டுள்ளது. அதன் மூன்று துணைத் தலைப்புகள் வருமாறு: 'மகிழ்ச்சியின் வாயில்'. இது காதல் நிறைவேறுவதைப் பற்றிக் கூறுகிறது. பெண்ணின் வாழ்க்கை, அவளது காதலனுக்காக அர்ப்பணிக்கப் பட்டது. ஆசையின் பீடத்தில் அனைத்தும் கொடுக்கப்பட்டன. 'கண்ணீர்ப் பாதை' இது சிற்றின்பத்தை விரும்பும் பெண்ணின் எண்ணமானது மெதுவாக விரக்தியடைவது. 'புனிதப் புகலிடம்' என்ற பாடல் காதல் அவல நாடகத்தின் உச்சநிலை.

வருத்தும் காதலுக்கும், ஆதரவற்ற நிலைக்கும் உரிய உணர்ச்சியே அவரது படைப்பில் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. அப்படி இருக்குமானால் சரோஜினியின் சொந்த உணர்ச்சிக் கொந்தளிப்புடன் அது தொடர்பு கொண்டிருக்கவேண்டும். எனக்கு மட்டுமாவது தோன்றத்தான் செய்கிறது. காதலில் ஏதோ ஒரு பெருந் தோல்வி ஏற்பட்டிருக்கவேண்டும்; அதற்காக அவர் அனைத்தையும் தியாகம் செய்தார். இப்போது அவர் காதலின் சிற்றின்ப விருப்பம் ஒவ்வொன்றையும் கைவிட்டு, ஒரு புது வாழ்க்கையைப் பேசத் தொடங்குகிறார். மனிதக் காதலனுக்காகக் கொண்ட காதல், தெய்விகக் காதலுக்கு ஓர் உருவகம். சரோஜினி இயல்பு கடந்த உயரத்தை அடைய முயல்கிறார். ஆனால் சிறிது துன்பத்துடன் தோல்வியடைகிறார். காரணம், அவர் பாடல்கள், அவர் தம் பழைய பாடல்களைப் போலச் சிறப்பாக இல்லை. தாமாகவே ஊற்றெடுத்து வந்த 'ஆன்மாநுபவப் பாடல்கள்' சிலவற்றை முன்னரே அவர் எழுதினார். அவற்றில் மூன்று 1917-இல் ஆன்மாநுபவ ஆங்கிலப் பாடல்கள் அடங்கிய ஆக்ஸ்போர்டு தொகுப்பில் 'தி ஆக்ஸ்போர்டு புக் ஆப் இங்கிலீஷ் மிஸ்டிகல் வெர்ஸ்' என்ற நூலில் இடம் பெறும் அளவிற்குச் சிறப்புடையன. 'காதலின் புனிதப் பயணம்'' (The Pilgrimage of Love) என்பது கூடக் 'கோயிலின் வாயில்', தெய்வ வடிவத்திடம் அழைத்துச் செல்லும் வழி, தானே ஒரு புகலிடம் என்னும் வரிசையில் கோயில் கட்டடத்திற்கு உருவகத் தோற்றமாக உள்ளது.[2] 'கோயில்'

[2] The Two-fold voice by D.Y.K. Raghavacharyalu, Essay of Sarojini Naidu by R.

என்பது ஒரு காதலனின் வாழிடம்; உயர்வு நவிற்சியாகக் கூறினால், அது படைக்கப்பட்ட ஓர் உலகம்; 'புனிதப் பயணம்' என்பது ஓர் அவதாரம் என்று ஒரு திறனாய்வாளர் கூறினார். இறுதியாக, அப்பாடல்கள் வைஷ்ணவ சமயத்தையும், இராதா கிருஷ்ண வழிபாட்டு முறையையும் பின்பற்றுகின்றன. மற்றும் அவை "சுகன்யா, சாவித்திரி, அநசுயா போன்ற சிறந்த பதிவிரதைகளின் புராணக் கதைகளையும் குறிப்பாகக் காட்டுகின்றன."[3] சிறப்பாக இருபத்து நான்கு மெல்லிய சுவைக் கவிதைகளில் இந்தக் கருத்துக்கள் அனைத்தையும் சுருக்கமாக விவரிப்பது எவ்வளவு சிக்கலானது! அவை தமக்குரிய சிறப்பில், காப்பியம் எனத்தக்கவை.

'காதலின் புனிதப் பயண'த்தில், சிறப்பாக அதன் இறுதிப் பாடல்களில், சரோஜினி தன்னிரக்கமுள்ளவராகக் காண்கிறார். இந்தக் குறைபாட்டில் முதற் பகுதியும் விலக்கானதல்ல. இதைச் சரோஜினி தம் கவிதை வெளிப்பாடு முழுவதிலும் காட்டியிருக்கிறார். 'வாழ்வின் அச்சம்' இரண்டாம் பகுதியில், சினத்தையும், ஏமாற்றத்தையும் புலப்படுத்துகிறார்:

"கொந்தளிக்கும் உம்நெஞ்சக் குழப்பமே கொல்லும் உமை;
கண்ணுறக்கம் காணாக் கடுவேட்கைக் கனவுகளால்
உயிர்நாடித் துடிப்பிடையே உறக்கடிக்கும் சிறுபசியால்
தணியாத் தழல் நாக்கல் தாவுகின்ற தாபத்தால்
வாலிபமும் உன்றன் வசந்தத்தின் உணர்வுகளும்
கைவிட்டே உன்னைக் கவலையினில் வீழ்த்திவிடும்;
எள்ளிச் சிரித்திட உன் இளஞ்செருக்கும் சாய்கையிலே
ஓடிந்தென்றன் காலடியில் ஓய்ந்து கிடப்பாய் நீ;
அழிப்பேனோ, அன்றியுன்னை அணைத்தெழுந்து காப்பேனோ?
காதலே! அந்நிலைமை கடவுளே நன்கறிவார்."

'கடிக்கும்' போன்ற சொற்களைப் பயன்படுத்துவதும், 'நாய்களின் பற்களை' உவமை கூறுவதும் நிச்சயமாகக் கண்ணியமாக அமையவில்லை. தற்காலப் புலவர்கள் பயன்படுத்தும் சாதாரணச் சொற்களைச் சரோஜினி தாமும் பயன்படுத்த முயன்றும் தாம் திட்டமிட்டு இயற்றிய 'விக்டோரிய சகாப்தப் பாடல்'களில் (Victorian Poetry) அவற்றைச் சரியாகப் பொருத்தத் தவறிவிட்டாரோ?

'காதலின் புனிதப் பயண'த்தில் பரிகசிக்கப்பட்டுக் 'காதலின் பரிசு!' என்ற கவிதையில் ஓலமிடுகிறார்:

இழந்த பரவசத்தை ஈட்டுதலை யான்வேண்டேன்
காதல் துணிவுகளைக் கனவுகளை மறுத்தாலும்

---

[3] *Ibid.*

உருவிழந்த இலட்சியத்தை ஓடிந்திட்ட பெருமிதத்தை
மீண்டும் பெறல் வேண்டேன்;

ஒற்றை மணிநேரம் ஒரு சிறிதே அருள் வழங்கு;
அடிபட்ட ஆன்மாவில் ஆருயிரைக் காத்தற்காம்
கண்ணீர்த் துளிகளே காதல் பரிசாகும்;
உன்ஆசை அதுவானால் உன்வேட்கை நாய்களுக்கென்
இறைச்சி பறித்திட்டு இனிய உணவாக்கு;
உன் விருப்பம் அதுவானால் என் உதிர நீர்பாய்ச்சி
உன் தோட்ட மரங்களுக்கு ஒளியேற்று;
என் இதய தாபத்தை—இன்பக் கனவுகளை
எரித்திட்டு நீறுக்கு; ஈடழித்து மண்ணாக்கு;
காதலனே! நானுன்றன் காதல் உடைமையன்றோ!
அருளுவதோ அழிப்பதோ அஃதுன்றன் உரிமையன்றோ.
என்னுயிரைப் பிழிந்தளித்து எரிதழலில் வீசிடுவாய்
எதிர்ப்பு சிறு தயக்கம் ஏதுமே இங்கில்லை.
என் காதல் மெய்க்காதல்! என்னுயிரே! உன்னுடைமை;
உன் இதயக் கோயிலிலே ஒளிமலராய்க் கிடப்பேனோ?
உன் தணலில் உனக்காக உலர் சருகாய் எரிவேனோ?
உன் விருப்பம் இங்கெதுவோ! உள்ளபடி நடக்கட்டும்
உயிர்க்குயிராம் என் தலைவா!

'ஆலயம்' கவிதைகள் 'மிகச் சிறந்த சீரான வெற்றிப் படைப்புகள்' என்ற கருத்துடைய ஒரு விமர்சகருடன் நான் வேறுபடுகிறேன். போர்ச்சுகீஸ் கவிதையில் திருமதி பிரவுனிங் இசைத்த 'சானட்' கவிதைகளுக்குப் பின் அவற்றைத் தவிர, ஒரு பெண் ஓர் ஆணுக்கு எடுத்துரைக்கும் அத்தகைய உணர்ச்சி வாய்ந்த கவிதைப் பின்னல் அமையவில்லை.[4] ஜேம்ஸ் எச். கஸின்ஸ் கூறும் கருத்து அதிகப் பொருத்தமாகத் தோன்றுகிறது: காதல் வெளிப்பாட்டில் காட்டும் முனைந்த முன்னீடுபாடு ஒரு வழி மட்டுமே உள்ள முட்டுச் சந்துபோல் தோன்றுகிறது. இந்தக் குறிப்பிட்ட கவிதையில் அவர் பின்பற்றும் கலையுத்தியில் சரோஜினி சிலவேளை ஆபத்தான வகையில் வஞ்சகத் தன்மை போன்றதொன்றையே அடைகின்றார். மேலும் அவருடைய கலையழகையே மாசுபடுத்தும் உணர்ச்சியின் அழகற்ற தோற்றத்தையே உருவாக்குகின்றார்'—நமது கவியரசி ஒரு மிகைப்படுத்தப்பட்ட உணர்ச்சி வேகத்தில் தம்மை இழந்து—கவிதை உள்ளுணர்ச்சியின் தெளிவான காட்சியைப் பெரிதும் மங்கச் செய்கிறார்; திட்டவட்டமான

[4] Indian writing in English by K.R. Srinivasa Iyengar, பக். 184.

அவலட்சணத்தில் முடிந்து அதற்குரிய அபராதத்தையும் நிறை வேற்றுகின்றார்.[5]

'ஆலயம்' (காதலின் புனிதப் பயணம்) என்னும் கவிதைப் பகுதியில் சேர்க்கப்படாத 'ஒடிந்த சிற'கின் முற் பகுதியிலுள்ள பாடல்கள் அவர் முன்னர் எழுதிய கவிதைகளைப் போலவே அழகுடையன.

அவர் தந்தைக்காக எழுதிய 'என் தந்தையின் ஆன்மா வுக்கு வணக்கம்' என்ற பாடலில், அவர் தனிப்பட்ட சொந்த வாழ்க்கைப் பார்வை அழகாகக் காட்டப்பட்டுள்ளது. அந்தப் பதினலடிக் கட்டளைப் பாடல் அவர் தந்தை இறந்தபோது 1915-ஆம் ஆண்டு ஜனவரி 28-ஆம் தேதி இயற்றப்பட்டது.

சில நாள்கள் இடைவெளியில் இறந்துவிட்ட தம் நண்பர் கோகலே, அன்பான தந்தை ஆகியோர்க்காகச் சரோஜினி மிகவும் வருத்தப்பட்டார். 1915-ஆம் ஆண்டு பிப்ரவரி 19-ஆம் தேதி கோபாலகிருஷ்ண கோகலே காலமானார். சரோஜினி கீழ்வரும் புகழ்மாலைக் குறிப்பைத் தம் பாடலடியில் எழுதினர்:

''கோபாலகிருஷ்ண கோகலே நம் தேசீய நேர்மைக்குத் துறவி, வீரர்; இந்திய ஒற்றுமைக்கு அவர் வாழ்க்கை ஒரு தூய 'ஞானஸ்நானம்'; இறப்பு ஒரு தியாக வேள்வி.''

அகோரநாத், கோகலே இறப்பதற்கு ஒரு மாதத்திற்குமுன் இறந்தார். பின்னவர் தமக்கு வரப்போகும் இறப்பினை உணரா மல், சரோஜினியின் தந்தையைப்பற்றி, அக்கவிஞருக்கு எழுதினர்: ''உங்களுக்கு அருகில் எங்கேனும் நான் இருந்திருந்தால், உங்களை நானே நேரில் வந்து காண்பதை விரும்பியிருப்பேன். உங்கள் அவலம் பாடல்களாக வெளிப்பட்டு, அவை நிலைத்து வாழும் என நான் நம்புகிறேன்.''

நுண்ணிய புத்தி கூர்மையும், ஆழ்ந்த உணர்ச்சிகளும் கொண்ட சரோஜினிக்கு 1915-ஆம் ஆண்டு ஓர் அவல ஆண்டு. அந்த ஆண்டின் இரக்கவுணர்ச்சிகள் மட்டுமல்லாமல், வெறுப்புணர்ச்சி களும், அவர் தம் நூலான 'ஒடிந்த சிற'கில் (The Broken Wing) பிரதிபலிக்கப்பட்டதில் வியப்பொன்றும் இல்லை. இந்த நூலில், 'பிரபஞ்சத் தியானத்தில்' தம்மையேகூட இழந்துவிடுகிருர் அவர். தாய்க் கடவுளுக்காக அவர் இயற்றிய பாடல், இந்திய ஒற்றுமைக் குரிய அவரது ஆர்வத்தையும், விருப்பத்தையும் இணைக்கின்றது.

[5] The Renaissance of India by James H. Cousins.

## தாய்—காளி

### பாடல்

**எல்லாக் குரல்களும்:**

*ஹே பயங்கர நளின பரம தெய்வதமே!*
*எல்லாப் பலிகளும் ஏற்றருள் அன்னையே!*
*திருக்கோயிலில் சேர்ந்துன் சிந்தூரப் பலிபீடம்*
*சிங்காரித்திடுவோம் தெய்விக துளசியில்*
*செந்நிறச் சோறும் சேர்ந்து படைப்போம்*
*வாழ்வும் சாவும் வகுத்த பரிசெலாம்*
*உனக்கே சமர்ப்பணம்! உமையே ஹைமவதியே!*

**கன்னியர்கள்:**

*கானில் கமழும் கனிவகை அரும்புகள்*
*உனக்கே கொணர்ந்தோம்! உலக மாதாவே!*

**மணப் பெண்கள்:**

*மணம் பெறும் பிரார்த்தனை மகிழ்வுப் பரவசம்*
*எல்லாம் உனக்கே! இதய காணிக்கை.*

**அன்னை:**

*தாய்மை எழில் பேற்றின் தனியின்பத் துயர் உனக்கே!*
*சமர்ப்பணம் தாயே!*

**கைம்பெண்கள்:**

*கடுந்துயர் விம்மும் கலங்கு கண் விழிப்பெலாம்*
*அர்ப்பணம் உனக்கே! அன்னையே!*

**எல்லாக் குரல்களும்:**

*களிப்பின் இன்பெலாம் கண்ணீர்த் துயரெல்லாம்*
*அம்பிகா! அர்ப்பணம் உனக்கே*

**கைத்தொழிலாளிகள்:**

*எங்கள் மண்ணின் பெரிய காணிக்கை*
*உனக்கே கொணர்ந்தோம்.*

**உழவர்கள்:**

*அண்மையில் பிறந்த ஆட்டுக்குட்டிகள்*
*கோதுமைஅரும்பிய கொத்துக் கதிர்கள்*
*கொணர்ந்தோம் நாங்களும்*

**வென்றவர்:**

*வீரவினைகளின் வெற்றிச் சின்னமாய்*
*வாகையைக் குவித்த வாட்படை கொணர்ந்தோம்.*

**தோற்றவர்:**

*தோல்வியின் வெட்கமும் துயரமும் சமர்ப்பணம்!*

**எல்லாக் குரல்களும்:**

*மகிழ்ச்சிகள் அனைத்தும் மனத்துயர் அனைத்தும்*
*அம்பிகா! பார்வதீ! அனைத்தும் நினக்கே!*

**அறிஞர்கள்:**

*எங்கள் கீழ்த்திசை இன்கலை ரகசியப் பொருளெலாம்*
*உன்பால் கொணர்ந்தோம்; உமையே தாயே!*

**மதகுருமார்:**

*பண்டைச் சமயப் பல்வளம் யாவும்*
*எங்கள் பொக்கிஷம் ஏற்றருள் தாயே!*

**கவிஞர்கள்:**

*எங்கள் இதயத்தின் இனிய கீதம்*
*உனக்கே படைத்தோம்; ஓம் மஹாகாளீ!*

**தேச பக்தர்கள்:**

*நாங்களும் சேர்ந்தோம்; நவபாரதியே!*
*கருமயோகத்தின் கண்ணயராத*
*வழிபாடுனக்கே.*

**அனைத்துக் குரல்களும்:**

*கட்டற்ற புகழெலாம்*
*கருணைப் பெருக்கெலாம்*
*காளி மஹேஸ்வரி காணிக்கை உனக்கே!*

*'ஒடிந்த சிறகு' என்ற தொகுதியில்: 'ஆலயம்' (காதலின் யாத்திரை) என்ற கவிதையின் மூன்றும் பகுதியில் 'கோயிலின் திருவிடம்' என்ற தலைப்பில் காதலின் மாயத்தைக் குறிப்பிடும் பகுதியே தமது சிறந்த கவிதை என்று சரோஜினி நாயுடு 1935 மே முதல் தேதி அமர்நாத் ஜாவிடம் கூறியுள்ளார்.*

*''ஆருயிர் அன்பே! நீ அனைவரும் சொல்வதுபோல்*
*களிமண் அகல் விளக்கில் கண்சிமிட்டும் கடைச்சுடரின்:*
*அணையும் ஒருபொறிதான்; அப்படியே இருந்தாலும்*
*நான் கவலைப்படவில்லை. நந்தாப் பகலொளியாய்*
*என்னிருட்டின் கூட்டமெலாம் நின் அன்பால் துரண்டுகிறுய்.*

மனிதரெலாம் கூறுதல் போல்
கடலோரம் அலைப்புண்டு காற்றால் கரையொதுங்கும்
மதிப்பற்ற ஒரு கிளிஞ்சல்
என்றுன்னைச் சொன்னாலும் என்னாருயிரனையாய்
நான் கவலைப்படவில்லை.
ஒழியாத நித்தியத்தின் உள்ளொலிக்கும் முணுமுணுப்பைப்
பருப்பொருளாய்க் கேட்குமொரு பாட்டாகப் பெருக்கிடுவாய்
சாகின்ற மனித இனச் சாதியிலே மதிப்பற்ற
சின்னஞ்சிறிய பொருள் என்றுன்னைச் செப்பிடினும்
மரணத்தால் சாகின்ற மாண்விதியால் மாய்கின்ற
நான் கவலைப்படவில்லை. நாளும் இதயத்தே
ஈசன் திருக்கோயில் எழிற்காட்சி அற்புதத்தைக்
கூட்டி வைத்தே என்னெஞ்சில் கொலுவீற்றாய் அன்பே நீ.''

# 11. விடுதலைப் போராட்டத்தின் பிறப்பு

சரோஜினி இப்போது பாடலை ஏறக்குறைய ஒரு பொழுது போக்காகவே கொண்டு விடுதலைப் போராட்டத்திலும், பெண் விடுதலை இயக்கத்திலும் தாமே ஈடுபட்டார். தாம் ஒரு கவிஞர் என்ற நினைவினை அவர் எப்போதும் துறந்ததில்லை; பல கவிதைகளை எழுதவேண்டும் என்ற எண்ணத்தை எப்போதும் வளர்த்துக் கொண்டதாகத் தெரிகிறது. 1982-இல் 'வைகறைச் சிறகுகள்' என்ற பெயருடைய ஒரு நூலைத் தாம் எழுத விரும்புவதாகத் தம் சிறந்த நண்பர் அமர்நாத ஜாவிடம் கூறினர். ''இந்தத் தொகுதியைப்பற்றி நாம் எதுவும் அறிய முடியவில்லை. அப் பாடல்கள் மறைந்துவிட்டனவாகவே எண்ணவேண்டி இருக்கிறது''[1] என்று திரு ஜா கூறினர். ஆனல் சரோஜினி எழுதி, வெளியிடப் படாத கவிதைகள் 'வைகறைச் சிறகுகள்' என்ற பெயருடைய நூலில், 1961-இல் வெளியிடப்பட்டுள்ளன, என்ற செய்தி நம் கவனத்தை ஈர்க்கிறது. ஐதராபாத் கவிதைக் கழகம் ஒரு சிறிய தொகுதியை வெளியிட்டுள்ளது; அதைப்பற்றி திரு. ஜா கூறுகிறர்:

''இது ஓர் அழகிய வீடு. அதன் மேலட்டைப் படம், அஜந்தா ஓவியங்களில் ஒன்றின் நிழற்பட நகல். அந்நூல் ஐதராபாத்தில் கைகளால் செய்யப்பட்ட தாள்களில் அச்சிடப்பட்டுள்ளது.''[2] சரோஜினி எழுதி அதுவரை வெளியாகாத இரு பாடல்களை அது கொண்டுள்ளது. பிறகு வெளியிடப்பட்ட அவரது, அனைத்துப் பாடல்களின் தொகுப்பான 'திருச்சின்னக் குழல்' என்ற நூலில் அவை காணப்படவில்லை. ஐதராபாத் கவிதை நூலில் உள்ள இரு பாடல்கள் 'குழல்பாணன்', ''சின்னக் கண்ணையன்'' என்பன இரண்டும் இறைவன் கிருஷ்ணனைப்பற்றின. அவர் அரசியலிலும், தம் நாட்டு விடுதலைப் பணிகளிலும் தற்சமயம் தாம் ஆழமூழ்கியிருப்பதை உணர்ந்தாலும், அதற்காகவே தம் கவிதை விளக்கு மேலும் சிறிது ஒளிவீசும்படி செய்தார். கவிதைச் சிந்தனைக்குரிய ஊக்கத்திற்குச் சிறைச்சாலைகள், ஊர்வலங்கள், பொதுமேடைகள், மறியல் போர்கள் உதவவில்லை. ஆனல் கவிதை புனையும் தம் இயற்கை ஆற்றலை விட்டுவிட வேண்டியிருப்பதற்கு அவர் மிகவும் வருத்தப்பட்டார். 'ஒடிந்த சிறகி'ல் அவர்எழுதினர்:

---

[1] Sarojini Naidu by Amarnath Jha, பக். 11.
[2] Ibid, பக். 21.

''அழுதே நான் வடிக்கின்ற கண்ணீர்த் துயரையெலாம்
அணைக்க நீ வல்லாயோ?
அல்லது நான் கண்விழித்துக் காவல்செய்யும்
கடுந்துயரைத் தணிப்பாயோ!
இதயத் தவிப்பிடையே எழுந்துடிப்பின் கருவத்தை
ஆழ்தியானச் சிந்தனையில் அமைத்திடும் அத்துணிவைக்
குருதிக் கறைபடிந்து குலைந்தாலும் உயர்கின்ற
வெற்றித் துவசத்தை வீறுடனே காண்பாயே
நெடுவேதனை கடந்த நீண்ட புகழ்க்காட்சியதை
நீ அளக்க வல்லாயோ!''

வங்காளப் பிரிவுக்காகக் காங்கிரஸ் போராடியபோது, சிறப்பாக 1905-இல் சுதேசி இயக்கம் வேகங்கொள்ளத் தொடங்கியது. 1915-இல் இத்தேசீயக் குழு மாற்றியமைக்கப்பட்டது. 1916-இல் இந்துக்களும் முஸ்லீம்களும் ஒருங்கிணைந்து சில புதுச் சீர்திருத்தங்களைச் செய்தனர்.

லோகமான்ய திலகர் சுயாட்சிப் பெருங்குழுவை 1916-இல் தொடங்கினார். அப்போது அன்னிபெசன்ட், நாடு முழு அரசியல் விடுதலை உணர்வு பெறத் தூண்டினார். அப்போது மகாத்மா காந்தியும் தமது குறுந்தடிகளை ஊன்றியெழுந்தார்; சரோஜினி போராட்டத்தில் மகிழ்ச்சியோடு கலந்துகொண்டார்.

1917-இல் ஒரு நகைச்சுவை நிகழ்ச்சியை அமர்நாத் ஜா நினைவு கூர்கிறார்: ''சரோஜினி ஒரு மாநாட்டில் பேசவேண்டும். அதைப் பற்றித் தம் நண்பரிடம் தெரிவித்தார்; 'காந்திஜி எந்த ஆங்கிலச் சொற்பொழிவையும் விரும்பமாட்டார். இந்துஸ்தானியில் நான் எப்படிப் பேசப்போகிறேன் என்பது எனக்குத் தெரியவில்லை. நான் என்ன செய்யவேண்டும் என்று கூறுகிறேன். நான் பேச எழுந்திருக்கும்போது, மாணவரை 'ஆங்கிலம்', 'ஆங்கிலம்' என்று கத்தச் சொல்லுங்கள். ஆனால் உண்மையாக, அவர் உயர்ந்த பாரசீகக் கலப்புடன் உருது மொழியில் பேசினார்.''[3] அவர் உண்மையில், உருதில் சரளமாகப் பேசக்கூடியவர். ஆனால் அவர் பல நிகழ்ச்சிகளில் பேச ஆங்கிலத்தையே தேர்ந்தெடுத்தார். இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் உள்ள கூட்டத்தினர் ஆங்கிலத்தைப் போலத் தரமான உருதினைப் புரிந்துகொள்ளவில்லை. பீகார் மாணவ மாநாட்டில் சரோஜினி தலைமை தாங்கியபோது உருது மொழியில் பேசினார். ஆனால் அவரது விமரிசகர், ''அவர் உருதுவில் தலைமை உரை ஆற்றினார்; அதைக் கூட்டத்தினர் எளிதில் புரிந்து கொள்ள முடியவில்லை'' என்று கூறுகிறார்.[4]

---

[3] Sarojini Naidu by Amarnath Jha, பக். 7.

[4] Ibid பக். 8.

சரோஜினி நாயுடு 1916-இல் லக்னோ காங்கிரஸ் கூட்டத்தில் ஜவாஹர்லால் நேருவை முதல் முதல் சந்தித்தார். ஜவாஹர் மகாத்மாகாந்தியைச் சந்தித்ததும் அப்போதுதான். அவர் கூறுவதாவது: ''சரோஜினி நாயுடு ஆற்றிய பல இனிய சொற்பொழிவுகளைக் கேட்டு நான் நெகிழ்ந்ததை நினைக்கிறேன். அது தேசியப் பற்று, தாய் நாட்டுப்பற்று அனைத்தும் உடையது. நான் ஒரு தூய தேசியப் பற்றுடையவன். கல்லூரி நாள்களில் நான் கொண்ட தெளிவற்ற எனது சோஷலிசக் கொள்கைகள் அந்தப் பின்னணியில் மூழ்கிவிட்டன.''[5]

தேசிய உணர்வுக்கு எழுச்சி தந்த இவ்வாண்டுகள் மார்கரெட் இ. கஸின்ஸ், அன்னிபெசன்ட், சரோஜினி நாயுடு, பெண் விடுதலைக்காக அமைந்த மற்ற முன்னோடிகள்—இவர்களைப் போன்ற சிறப்பான முயற்சியுடைய பெண்களுக்காகவும் குறிப்பிடத்தக்கன. 1917-இல் இந்திராகாந்தி பிறந்தது ஒரு குறிப்பிடத்தக்க அடுத்த நிகழ்ச்சியாகும். அவர் ஒரு பெண்; பொதுவாக எந்தப் பதவியிலும் இல்லாமல் கிடந்த இந்தியப் பெண் மிக உயர்ந்த உச்ச நிலைக்கு வர முடியும் என்பதை எடுத்துக்காட்டுவதைப் போல, ஐம்பது ஆண்டுகளில், இப்போது அவர் இந்தியாவின் பிரதம மந்திரியாக இருக்கிறார். 1917 நவம்பர் 19-ஆம் தேதி அவர் பிறந்தபோது ஜவாஹர்லால் நேருவுக்குச் சரோஜினி அவரது மகள் 'இந்தியாவின் ஒரு புது ஆன்மா'வாக விளங்குவார் என்று வருவதுணர்த்தி எழுதினார்.

சரோஜினி 1919-இல் மூன்றும் முறையாக இங்கிலாந்திற்குச் சென்றார். இப்போது அவர் இந்தியாவின் சுதந்தரத்திற்காக அமைதியாகப் போராடும் ஒரு நிலையான வீரர். இந்தியாவுக்கு அவர் 1920-இல் திரும்பித் தொடர்ச்சியான போராட்டங்கள், மறியல்கள், நியாய விசாரணைகளில் கலந்துகொண்டார்.

மகாத்மா காந்தியைப் பற்றிய பெரிய நியாய விசாரணை 1922-இல் நடைபெற்றது. சரோஜினி நீதிமன்ற நடவடிக்கைகளைக் கவனித்து 1922 மார்ச்சு பம்பாய் கிரானிக்கல்-என்ற இதழில் எழுதினார்: ''சட்டத்தின் கண்களுக்கு முன் ஒரு கைதி, ஒரு குற்றவாளி. அப்படியிருந்தாலும் ஒரு மெலிந்த, சாந்தமான உருவம், கரடுமுரடான, சற்றும் போதாத இடுப்புத் துணியுடன், வெல்ல முடியாத கம்பீரத்துடன் மகாத்மா காந்தி, தமது அன்பான சீடரும், தம்முடன் சிறையிலிருப்பவருமான சங்கர்லால் பாங்கருடன் நுழைந்தவுடன் நீதிமன்றம் முழுவதும் தன்னிச்சையாக மரியாதை தரும் செயலில் எழுந்து நின்றது. 'ஒருவேளை நான் தோல்வி யடைந்துவிட்டால், உங்கள் உதவியை எனக்குத்

[5] An Autobiography by Jawaharlal Nehru, பக். 38.

தருவதற்காகத்தான் என் பக்கத்திலேயே உட்கார்ந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டு மகாத்மா சிரித்தார். அவரது அந்த மகிழ்ச்சியான சிரிப்பு, உலகிற் சிறந்த மோகனக் குழந்தைத் தன்மையின் மந்தகாச ஒளியின் ஆழத்தைத் தேக்கிக்கொண்டு விளங்குவதாகத் தோன்றுகிறது. அங்கு வந்திருப்போர் அனைவரையும் அவர் சுற்றிப் பார்த்துக் கூறினார்:

'இது ஒரு குடும்பத்தின் கூட்டம் போல உள்ளது; சட்ட நீதி மன்றமாக இல்லை. நீதிபதி அமர்ந்தபோது அச்சத்தின் நடுக்கமும் பெருமிதமும், நம்பிக்கையும் அந்தக் கூட்டத்திடையில் காணப்பட்டன. அவர் ஒரு மேன்மையான நீதிபதி, தைரியத்துக்கும், உறுதியான கடமை உணர்வுக்கும், குற்றமற்ற உபசாரத்துக்கும் அவர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார். தனிப்பட்ட ஒரு நிகழ்ச்சியை நேர்மையுடன் நுணுகியறியும் அவர் திறனும், சிறந்த பண்பாளருக்கு அவர் தந்த இனிய புகழ் மாலையும் இன்னபிற அனைத்திலும் ஒருங்கே அவர் பாராட்டத் தக்கவராக இருந்தார். அதிசய வழக்கு நடைபெற்றது. என விருப்பமான தலைவரின் வாயிலிருந்து உதிர்ந்துகொண்டிருந்த, ஒரு தீர்க்கதரிசிக்குரிய ஆர்வம் பளிச்சிடும் அழியாத சொற்களைக் கேட்டேன். எனது சிந்தனை நூற்றுண்டுகளைக் கடந்து வேறு நாட்டிற்கு, வேறு காலத்திற்குச் சென்றது. அப்போது இதுபோன்றதொரு நாடகமே நடிக்கப்பட்டது. மற்றொரு தெய்வம், அமைதியான ஆசிரியர் அதே மாதிரியான தைரியத்துடன் அதே மாதிரியான வாக்குகளைப் பரப்பியதற்காகச் சிலுவையில் அறையப்பட்டார். நாசரத்தைச் சார்ந்த ஏசு ஒரு தொழுவத்தில் பிறந்தார். இந்திய விடுதலைக்குப் போராடும் வெல்ல முடியாத இத்தூதருக்கு நிகராக ஓர் இணையான வரலாற்றினை அமைத்தார் என்று நான் நினைத்தேன். இத்தூதர் அழிக்க முடியாத இரக்கத்துடன் இந்த மனித குலத்தை விரும்பினார். அவரது அழகிய சொற்றொடரைக் கொண்டே நாம் கூறினால் ''ஏழைகளின் மனத்தைக் கொண்டே ஏழைகளை அணுகினார்.''

மகாத்மா காந்திக்கு ஆறு ஆண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. காந்திஜி கைது செய்யப்பட்ட பிறகு, சரோஜினி அவரது பணியை மேற்கொண்டார். கதர் உடையணிந்து அவர் பயணம் செய்தார்.

1925 டிசம்பரில், கான்பூரில் நடந்த கூட்டத்தில் சரோஜினி நாயுடு காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அக்டோபரில் அவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவது அறிவிக்கப்பட்டபோது, பெல்காமில் தலைவராக இருந்த மகாத்மா காந்தி தமது இடத்தில் சரோஜினி வரப்போவதைத் தெரிவித்தார்.

ஒரு பெண் தலைவராவது ஒரு புதிய நிகழ்ச்சி. காந்திஜி தம் பொறுப்புகளை அவரிடம் ஒப்படைத்தார். சரோஜினி 'சில தேர்ந்த சொற்களை'ப் பேசித் தமக்கே உரிய ஒப்பற்ற முறையில் பொறுப்பேற்றார். அவர் தம் சொற்பொழிவுகளில் இத் தலைமையுரையே மிகச் சிறியதாக இருக்கலாம். அரசியல் கட்சிகளுக்கு இடையிலும், இந்தியர் தமக்குள் உருவாக வேண்டிய ஒற்றுமையை அவர் வற்புறுத்தினார். அச்சத்தைத் தவிர்க்கும்படி தம் நாட்டு மக்களை அவர் வேண்டினார்:

''விடுதலைப் போராட்டத்தில் அச்சம் என்பது ஒரு மன்னிக்க முடியாத துரோகம்; நம்பிக்கையின்மை ஒரு மன்னிக்க முடியாத பாவம்.''[6]

[6] The History of the Indian National Congress, பக். 294.

## 12. கடிதங்களும் நட்புறவுகளும்

சரோஜினி நாயுடு தனிப்பட்டவருடன் விருப்பம் நாளும் வளர, நிலையான நட்புகொள்ளும் நுட்பத்தை உணர்ந்தவர். இப்போதும் அவர்களில் பலர் அவரைப் பற்றி மரியாதையுடன் பேசுகிறார்கள். அதுமட்டுமல்லாமல், அவர்கள் சாதி, மத, இனங்களுக்கிடையில் நம்பிக்கையையும், உண்மையையும் நிலைபெறச் செய்வது அவர்தம் பெரும் பணியாக இருந்தது. மகாத்மா காந்தி, எல்லா நிகழ்ச்சிகளையும் நடுநிலைமையுடன் கவனிக்க, அமெரிக்காவுக்கு அரசாங்கச் சார்பில்லாத தூதராகச் செல்வதற்கு இவரையே தேர்ந்தெடுத்தார். இதை மேயோவின் 'இந்தியத் தாய்' உலகுக்குத் தெரிவித்தது. தம்மை உண்மையாகப் பின்பற்றுபவர்களுக்கு இடையில் அவர் செய்த மிக அறிவுக் கூர்மையுள்ள தேர்வு இதுவே. சரோஜினி அமெரிக்காவிலிருந்து எழுதிய கடிதங்கள் சிறந்த இலக்கியங்கள் ஆயின; அழகான, உயிரோட்டமுள்ள, ஆனாலும், இன்றியமையாத அரசியல் ஆவணங்களைச் சரோஜினி படைப்பதில் எத்துணை அளவு திறன் உள்ளவர் என்பதை அளக்க அவற்றை ஒருசார் நோக்குதல் வேண்டும். அவற்றைப் பாது காப்பதும், மீண்டும் பதிப்பிப்பதும் தேவை.

அவரது பயணம் ஒரு கிளர்ச்சியை உண்டாக்கியது. சரோஜினி பாராட்டப்பட்டார். தெய்வமாய்க் கொண்டாடப்பட்டார்: 'நியூயார்க் டைம்ஸ்' இந்தத் தலைப்புச் செய்தியை அளித்தது:

> ''இந்தியாவின் கவிஞர் அமெரிக்காவைப் பார்வையிடப் போகிறார். இந்தியப் பெண்களின் வாழ்வில் மிகப் பழைய பழக்கங்களுக்கு எதிராக நிகழப்போகும் மாற்றங்களைச் சரோஜினி நாயுடு கூறுவார்.''

ஒரு புதுக் கவிதை நூலை வெளியிடுவதைப் பற்றிய பேச்சு இருந்ததாகத் தெரிகிறது; சரோஜினி பல சொற்பொழிவுகளைத் தொடர்ச்சியாக நிகழ்த்தவேண்டியிருந்ததால் அத்தொகுதி நிறைவேறவில்லை.

அமெரிக்காவின் எல்லாப் பகுதிகளிலும், பாடப்பட்ட அவரது பாடல்கள் மிகப் பாராட்டப்பட்டன. எங்கும் அவரை நல் விருந்தினராக ஏற்றனர். அக்கவிஞர்-தூதர் தமக்குப் பெருமை தருவதற்காக நடைபெற்ற பெரு விருந்துகளில் கலந்துகொண்டார். அமெரிக்கர்களின் வீடுகளுக்கு ஒரு மதிப்புக்குரிய விருந்தினராகவும்

நண்பராகவும் சென்ருர். பன்மையில் ஒருமை கண்ட அந்தப் பெருமை மிக்க அவையோருக்கு விரிந்த சொற்பொழிவாற்றினுர். புதிய உலகம் அவரைக் கவர்ந்தது. அவர் மகாத்மாவுக்குக் கடிதங்கள் எழுதினுர். அவற்றில் பல காந்தியின் 'யங் இந்தியா' இதழில் வெளியிடப்பட்டுள்ளன. அவரது வளமான மொழியையும், ஆங்கிலப் புலமையையும் அவை காட்டுகின்றன. ஒரு சிறந்த நீக்ரோ நண்பர் வாழ்ந்த சின்சிஞத்தியிலிருந்து அவர் எழுதினுர்: ''மாயானுபூதிவல்ல நூற்பாளர் பற்றிய செய்திகளை ஒரு பெரிய சபையினர்க்கு (இவர்களது பெற்ருேர்களும், அவர்களுக்கு முன்னேரும் துன்பமூட்டும் கதையான 'அங்கிள் டாம்ஸ் கேபின்' என்ற நூலை (ஹேரீத் பீச்சர் எழுதிக் கொண்டிருந்த காலத்தில் அவரை அறிந்திருந்தனர்) விளக்கிவிட்டு இப்போது தான் திரும்பினேன்.'' ஓர் ஆன்மக் கிளர்ச்சி பெற்றவரைப் போலவே சரோஜினி சொற்பொழிவாற்றினுர். அவரது சொற்பொழிவைக் கேட்பவர்களும் கிளர்ச்சி பெறுமாறு செய்திகளைக் கூறினுர் என்று கருதப்படுகிறது. ஹேரீத் பீச்சர் ஸ்தோவ் போலக் கட்டிலிலிருந்து விடுதலை பெறுதல் என்பதே சரோஜினி கூறிய செய்தியுமாம். அந்த நாடோடிப் பாடகர் கூறியபடி 'மாயானுபூதிவல்ல நூற்பாள'ரின் வேதவாக்கு இதோ இருக்கிறது.''

''அவர் கலிபோர்னியாவின் 'பூக்கள் நிறைந்த' தெருக்களையும், 'நுரை தழுவும்' நிலங்களையும் விரும்பினுர். அங்கே தங்கியவர்கள் தம் நாட்டிற்குத் திரும்ப வேண்டும் என்று உண்மையாகவே எப்போதும் நினைத்தனர். உண்மையான அர்த்தத்தில் அமெரிக்கர்களுக்கு இணையாக மற்ற இடம் பெயர்ந்த இனங்களின் நடவடிக்கைகளைப்போல இன்றி ஒரு சமூக பாரம்பரியத்தையோ அல்லது கல்விச் சான்றுகளையோ நிலைநிறுத்துவதில் எப்போதுமே கஷ்டப்படாத அவர்கள் ஒரு புதிய உலகத்தின், ஒரு புதிய நாட்டில் அங்கீகரித்த ஒருங்கிணைந்த குழுவாக மிதந்தார்கள். உலகச் சுதந்தர நாடுகளில் இந்தியாவின் வாழ்வுத்தரம் ஓர் உறுதிநிலை அடையாத நிலையிலும் இந்தியாவிலிருந்து அங்குப் போய்த் தங்குபவரின் தரம் திருப்திகரமாக இருக்கிறது என்று ஆப்பிரிக்க, அமெரிக்காவின் அனைத்துப் பயணங்களும் முடிந்தபின் முடிவு செய்தேன்'' என்று அவர் தீர்மானமாய்த் தெரிவிக்கிருர்.

மகாத்மா காந்தி அமெரிக்காவிலும், கானடாவிலும் தம் தூதர் உருவாக்கிய விளைவுகளைக் குறித்துப் பெருமகிழ்ச்சி கொண்டார். சரோஜினி 1929 ஜூலையில் நாடு திரும்பியபோது அவர் எழுதினுர்: ''மேற்கில் பல வெற்றிகளைப் பெற்ற பிறகு அந்த 'நாடோடிப் பாடகர்' நாட்டிற்குத் திரும்பிவிட்டார். அவர் உருவாக்கிய உணர்வுகள் எந்த அளவு நிலைக்கும் என்பதைக் காலந்தான்

காட்ட முடியும். அமெரிக்காவில் வாழும் தனிப்பட்டவரிடமிருந்து வரும் அறிக்கைகள் உறுதியானவை என்றால் சரோஜினி தேவியின் பணி அமெரிக்கருக்கு ஓர் ஆழமான உணர்வை உண்டாக்கியிருக்கிறது. இவர் தமது வெற்றிப்பயணத்தை முடித்துத் திரும்பினார். நாட்டில் நம்மை எதிர்நோக்கி இருக்கின்ற சிக்கலான பிரச்னைகளைத் தீர்ப்பதற்குத் தமது பங்கை விரைந்து ஏற்றவர் இவரைத் தவிர வேறு யாரும் இல்லை. அமெரிக்கரை எப்போதும் வெற்றிகரமாகக் கவர்ந்த மந்திரத்தை நம்மேலும் வீசட்டும்; அது போதும்.''

மகாத்மாவுக்கு அவர் எழுதிய கடிதங்கள் எப்போதும் நீண்டன. அதற்கு அவரிடம் சரோஜினி மன்னிப்பு வேண்டினார். ஆனால் அவரோ, 'அன்புள்ள நீண்ட கடிதங்களையும்' கிறுக்கித் தெளிவில்லாமல் எழுதும் கடிதங்களையும் தாம் விரும்புவதாகப் பதிலிறுத்தார்.

'தங்கத் தலைவாயில்' என்ற இல்லத்தில் சில நாள் தங்கியிருந்த போது பண்டிட் நேருவுக்குத் தம் வீட்டு வாழ்க்கையை வருணித்துச் சரோஜினி ஒரு கடிதம் எழுதினார்: ''எனது அன்புள்ள ஜவாஹர், தங்கத் தலைவாயிலிருந்து எனது சொந்தமான, சிற்பம் செதுக்கிய கறுப்பு நிற மஞ்சத்தில் அமர்ந்தவாறு எழுதுகிறேன். என்னைச் சுற்றிலும் வீட்டின் 'நான்கு கால் அரசர்கள்' ராஸ் டஃப்பாரி, பாவோ நோர்மி, நிகோலோ பிஸ்ஸானே, டிக்டிக் மாஜங்—அழகாக நீட்டிப் படுத்துள்ளனர்; 'குல்முகர்ஸ் சிவப்பு ரோஜாக்களிடையில், தோட்டங்களில் பல பறவைகள் இசை இசைத்துக் கொண்டிருக்கின்றன[1] . . . ''பத்மஜா இப்போதுதான் பம்பாயிலிருந்து வந்த 'புதிய பியட்' குறித்து உற்சாகமாக இருக்கிறாள். பதவி உயர்வினைப் பெற்ற அந்த ஒருவர் தம் விடுமுறையினை, தாம் விரும்பும் பயணமுடிவில் மலைகளுக்கிடையிலும் நீர் நிலைகளுக்கிடையிலும் வீணாக்கத் துணியமாட்டார் என்று உள்ளுக்குள் சிந்தித்துப் பிரார்த்தனை செய்து கொண்டே கோவிந்த் தமது நேரங்கடந்த பகல் உணவை அருந்திக் கொண்டிருக்கிறார்.''[2]

இத்தகைய சுதந்தரமான வீட்டு வாழ்க்கையைச் சரோஜினி பெரிதும் விரும்பினார். அது அவருக்கு ஓர் ஊட்டமிக்க மருந்தாக இருந்தது. விடுமுறைகள் இப்படி அடிக்கடி இல்லாவிட்டால் அவர் அவர் என்ன செய்திருப்பார்? அவர் எழுதுவது: ''ஒரே சொல்லில் கூறினால், 1921 முதல், எனது முதல் விடுப்பில் வீட்டில் இருக்கிறேன். வெளிப்புறக் கவனிப்புகள், பொறுப்புகள், கடமைகள் என்ற சாக்குடன் தம் சொர்க்க போகத்திலிருந்து அவிழ்த்து

[1] A Bunch of old Letters, பக். 42.
[2] A Bunch of old Letters, பக். 42.

விடப்பட்ட ஒவ்வொரு நச்சுப் பாம்புடனும் சுமுகமாகப் பழகி என் உண்மை விடுமுறையினைக் கழித்துக் கொண்டிருக்கிறேன். முதலில் தைரியமாக எனது பதவியைச் சில வாரம் ஒதுக்கி வைத்தேன். ஏனெனில் எனது ஆன்மா ஓர் அழகிய சூழலை—தளிர்க்கும் மரங்கள், கூடு கட்டும் பறவைகள், தன்னுணர்ச்சிப் பாடற்புலவர், குழந்தைகள், நாய்கள், பழைய நண்பர்கள் கொண்ட சூழலையும், ஆக்கத் திட்டங்கள், அரசியல் என்ற பெயரால் அமையும் தற்கொலைத் திட்டங்களிலிருந்து விடுதலையையும் வேண்டி அறை கூவி அழைத்தது.''

பிரிவினைக் காலம் நெருங்கியபோது சரோஜினி அந்த அவலத்திற்கு மிகவும் வருந்தினர். அவர் எண்ணம், கிழக்கு வங்காளத்தில் கிராமந்தோறும் திரிந்த மகாத்மாவுடன் எப்போதும் ஒன்றியிருந்தது.

1946-இல் 'சாந்தி நிகேதனத்திலிருந்து மகாத்மா காந்திக்கு எழுதினர்.

''இது ஒரு கடிதம் இல்லை; விருப்பம்; உண்மையின் ஓர் உறுதி மொழி; முடிந்திருக்குமானல் ஒரு கணநேரம் உங்களை வந்து நான் சந்திக்க முயன்றிருப்பேன். நான் எந்த ஒரு முயற்சியும் மேற்கொள்ளாமல், வங்காளத்தை விட்டுச் செல்வதற்குத் தாங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்று நினைக்கிறேன். தங்களை நான் காணவோ, தங்களுடன் நான் பேசவோ தேவையில்லை. காரணம் தாங்கள் என் பார்வையில் உறைகிறீர்கள்; தங்கள் செய்திகள் என் இதயத்தின் வழியாகவே தாமே எப்போதுமே உலகுக்கு இசைக்கின்றன.

''அன்பான யாத்திரிகரே! 'கடவுளுடன் செல்க' என்ற அழகிய ஸ்பானிஷ் தொடர் கூறியபடி, தங்கள் ஆசையும் நம்பிக்கையும் கலந்த புனிதப் பயணத்தைத் தொடங்குகிறேன். நான் தங்களுக்கு அஞ்சவில்லை — தங்கள் குழுவை விரும்புகிறேன்.''

சரோஜினி[3]

அமர்நாத் ஜா இங்கிலாந்திற்குப் புறப்பட இருந்தபோது, பெர்னர்டு ஷா, வால்டர் டிலாமேர், ஹம்பர்ட் உல்ப், திருமதி மன்ரே, லாரன்ஸ் பின்யான் ஆகியோருக்கு அறிமுகக் கடிதங்களை அவர் கொடுத்தார் என்று சரோஜினி கூறுகிறர். 'ஒவ்வொரு கடிதமும் கவர்ச்சியான தொடர்களில் எழுதப்பட்டது.' அவர் லண்டனை அடைந்ததும், திருமதி நாயுடுவைப் பற்றிப் பெர்னர்டு ஷா அன்

[3] My Days with Gandhi, by Nirmal Kumar Bose, Asia Publishing House, 1953, பக். 139.

போடு விசாரித்தார் என்றும் அவர் இந்தியாவுக்கு வந்திருந்த போது, சரோஜினி சிறையில் இருந்ததால் அவரைச் சந்திக்காமல் போனதற்கு வருந்திஞர் என்றும் குறிப்பிடுகிருர். அமர்நாத் ஜா இந்தியாவுக்குத் திரும்பியதும் தாம் இங்கிலாந்தில் வால்டர் டி லா மேர், எச். ஜி. வெல்ஸ் பற்றிச் சரோஜினி விசாரித்தார்.

சரோஜினி மவுண்ட்பேட்டனுடன் மிக நட்பு கொண்டிருந் தார். ஒரு முறை, 1948-இல் காசி நகரில் அவர் மாணவர்களுக்கு ஓர் உரையாற்ற இருந்தபோது, சரோஜினி, அவர் தமது விரல்களை அம்மாணவரை நோக்கி அசைத்து, "குறும்புத்தனமான ஏ! போக்கிரிக் குழந்தைகளே" என்று கூறும்படி வேண்டிஞர். அதற்கு மவுண்ட்பேட்டன் அதைப் பின்பற்றக்கூடிய வகையில், "சரோஜினி போல நான் ஒரு பெண்ணுகவும் இல்லை; அவரைப் போன்ற பெருமையும் பெற்றிருக்கவில்லை" என்ருர்.

புகழ்பெற்ற சரோஜினி நாயுடு திருமதி மவுண்ட்பேட்டனுக்கு எழுதிய ஓர் அழகிய கடிதத்தை 1947-இல் 'ஆலன் காம்பெல் ஜோன்சன்' கண்டனர். சுதந்தரத்திற்குப் பிறகு உத்தரப் பிரதேச கவர்னர் பதவியை அவர் வருணித்து எழுதிஞர். "வெறும் கவர்னரிடமிருந்து, கவர்னர் ஜெனரலின் மனைவிக்கு' என்று தொடங்கி, இந்தியாவுக்குத் திருமதி மவுண்ட்பேட்டன் ஆற்றிய பணிகளைப் பாராட்டி விவரித்தார். அந்தக் கடிதம் இப்படி முடிந்தது; "நான் இந்த நாட்டுப் பகுதிகளில் எத்தனை நாள் தங்கி யிருப்பேன் என்பது எனக்குத் தெரியாது. முழு உரிமை பெற்றிருப் பதும், அதன் பயனை அநுபவிப்பதும் என் உண்மைப் பரிசு. எனது பரிசு இந்நட்புரிமை. பல ஆண்டுகளாக ஒருவருக்கொருவர் பேசாத ஆண்களும், பெண்களும், நிலைபேரில்லாத ஒரு சிறிது நேரத்திற்குப் பிறகு, எனது வீட்டில் அன்பான முறையில் சந்திக்கின்றனர். ஆமாம், எனது பசிய புல்தரையில், சிங்கங்களும், ஆடுகளும் ஒரே மகிழ்ச்சியோடு கிடக்கின்றன. 'நல்லதை இழந்த ஒருவரும் இருக்கக்கூடாது' என்று பிரௌனிங் கூறியபடி நம்மில் ஒவ்வொரு வரும் மிக நல்லதைச் செய்யமுடியும். என்ன அழகான நம்பிக்கை." [4]

நண்பர்கள் நோயுற்றபோது அல்லது அவர்களுக்கு ஏதேனும் தேவைப்பட்டபோது சரோஜினி அவர்களைச் சந்தித்தார். அவர்கள் மீது கொண்ட அன்பிலும், அவர்களைப் பற்றித் தாம் ஏற்ற பொறுப்பிலும் அவரது நட்புரிமையின் இரகசியம் அடங்கியிருக் கிறது.

அவர் எல்லாச் சாதி இனத்தவருடனும் நட்பு கொண்டார். அலி சகோதரர்கள், முகமது அலி ஜின்ஞு, சர். சி. பி. ராமசாமி

[4] Mission with Mountbatten, பக். 195.

ஐயர், சீனிவாச சாஸ்திரி போன்றோர் அவரது பழைய நண்பர்களில் சிலர். ஜின்னுவோடும், ஓர் இந்திய அரசியல் தலைவர் என்ற முறையில் அவர் மேற்கொண்ட நடவடிக்கைகளோடும் சரோஜினி மிக நெருக்கமாகத் தொடர்பு கொண்டிருந்தார். சரோஜினியின் வாழ்க்கையில் காந்திஜியின் பரந்த செல்வாக்குக்குப் பிறகு, ஜின்னுவின் செல்வாக்கு இருந்தது எனலாம். அறிவுநிலையிலும், ஆன்ம நிலையிலும் சரோஜினி அவரைவிடச் சிறந்திருந்தாலும், அறிவு நுட்பத்திலும், திறனிலும் வேறுபாடு இருக்கிறது. ஜின்னு மிக அறிவு நுட்பம் உடையவர்; உயர்ந்தவர் என்று சரோஜினியே நினைத்ததாகத் தெரிகிறது. ''அவர் தலைவர்களில் மிகப் பெரியவர் என்றும், புகழ் பெற்ற இந்தியர்களைப் பற்றிய நூலில் அவரது பெயரையும் நான் சேர்த்திருக்க வேண்டும் என்றும் சரோஜினி ஒரு முறை என்னிடம் கூறினார்'' என்று சரோஜினியை நினைவிற் கொண்டு சர். சி. பி. இராமசாமி எழுதினார்.

தீனபந்து சி. எஃப். ஆண்டுரூஸ் அவரது மற்றொரு நண்பர். கொத்தடிமையாளர் பற்றிய பிரச்னையில் இருவரும் பங்கேற்றனர். சரோஜினி மிஸ். மேயோ எழுதிய புத்தகத்தைக் குறித்துச் சென்ற அதே காலத்தில் சி. எஃப். ஆண்டுரூஸ் அமெரிக்காவுக்குச் சென்றிருந்தார். அவர் சரோஜினியைப் பற்றி, மகாத்மாவிடம் கீழ் வருமாறு விவரித்தார்:

> ''சரோஜினி நாயுடுவின் பயணம் வியப்புடையதாக இருக்கிறது. அவர் எல்லா இதயங்களையும் வென்றுவிட்டார். எங்கும் அவர் பயணத்தைப் பற்றிய பாராட்டுகளைத் தவிர வேறு எதையும் நான் கேட்கவில்லை.''

சரோஜினி, அவர் காலத்துச் சிறந்த எழுத்தாளர்களின் அன்பைக் கிளர்ந்தெழத் தூண்டினார். ஜெஸ்டிங் பைலேட் என்பதில் ஆல்டஸ் ஹக்ஸ்லி அவரைச் சிறப்பாகக் குறித்தார். 1925-இல் சரோஜினியைப் பம்பாயில் அவர் சந்தித்துக் கூறினார்: "பம்பாயில் இருக்கும்போது, அனைத்திந்தியக் காங்கிரஸின், புதியவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சரோஜினி நாயுடுவைச் சந்திப்பது நமது நற்பேறு. அவர் குறிப்பிடத்தக்க முறையில் அறிவாற்றலுடன், கவர்ச்சி, இனிமை, தைரியத்திறன் இவற்றை ஒருங்கு இணைக்கிறார். இந்திய அரசியல்வாதிகள் அனைவரும் திருமதி நாயுடுவைப் போல இருந்தால் இந்த நாடு உண்மையில் பெரும் பேறுடையது.''[5]

இரண்டாவது வட்டமேஜை மாநாட்டிற்குக் காந்திஜியுடன் சரோஜினி சென்றபோது ராஜதந்திரிகளைக் கவர்ந்த அளவு

[5] "Jesting Pilate, The Dairy of a Journey," by Aldous Huxley, பக். 12.

எழுத்தாளர்களையும் கவர்ந்தார். 'என் காந்தி' என்னும் நூலின் ஆசிரியர் ஜான் ஏன்ஸ் ஹோல்மஸ் அவரை 'மிகச் சிறந்த இந்தியப் பெண்' என எண்ணினார். ஓர் எழுத்தாளர் கூறுகிறபடி திருமதி சரோஜினி நாயுடு கவிஞர்; அரசியல்வாதி; ஒவ்வொருவர் பிரச்னையின் மேலும் நடைபோடும் கலைக்களஞ்சியம்; தம் வயதுக்குரிய அறிவு நுட்பத்தை, ஓர் இளைய பெண்ணின் சுறுசுறுப்புடன் ஒருங்கு இணைப்பவர்; ஆங்கில மக்களைக் கவரும் பல பண்புகளை, மற்ற இந்திய அரசியல்வாதிகளைவிட இவர் பெரும்பாலும் பெற்றுள்ளார். இவரால் (குரோதத்தைக் குறித்து) மற்றவரைக் கண்டு எள்ளி நகையாட முடியும். தம்மைப் பற்றிய நகைச்சுவையால் சபையோரைக் கவரவும் முடியும். தம்முடைய நாட்டவரிடம் இத்தகைய குணங்களைச் சந்திக்கும்போது சரோஜினி நாயுடு தாழ்வு மனப்பான்மை காண்பிக்கிறார் என்று யாரும் சந்தேகிக்க முடியவில்லை. மேலும் அவ்வேளைகளில்தான் அவர் மிகுந்த பரபரப் புணர்ச்சியுடனும் வெளிப்படையான வெடிப்பேச்சுடனும் தம் முடைய நாட்டவர்களிடம் கலந்துகொள்கிறார். மாநாட்டின் ஒரு பகுதி முடிந்திருக்கும்போது, அவர் காந்தியைக் காண்பதற்காகத் திரும்பியவர், "எங்கே நம் மகத்தான 'மிக்கிமௌஸ்' சுண்டெலி?" என்று கேட்ட சமயோசிதமற்ற கேள்வியினை யார்தாம் மறப்பார்கள்? மற்றொரு நிகழ்ச்சியைப் பலர் நினைவுகொள்வார்கள். ஒரு பிரதிநிதி, இரண்டாவது 'சேம்பர்' கூட்டத்தைக் கூட்ட வேண்டும் என்ற தம் நோக்கத்தைப் பலமுறைகளில் திரும்பத் திரும்பக் கூறி மற்றப் பிரதிநிதிகளுக்குப் பொறுக்க முடியாத சலிப்பை உருவாக்கினார். 'சேம்பர்' என்ற சொல்லின் சிலேடையில் அப்போது திருமதி நாயுடு, "இரண்டாவது 'சேம்பர்' ஒன்று ஏன்?" என்று கேட்டதோடும், அவர் "மூன்றாவது 'சேம்பர்' ஒன்றையும் தேவைப் பட்டியலில் சேர்க்க வேண்டும்" என்று கூறினார். சில அரசியல்வாதிகளுக்கு மூன்றாவதும் தேவை. அதாவது வீதல் சேம்பர் (நாய்களை நோகாமல் சாகடிக்கும் அறை' என்ற கேலிப் பொருளில்) வேண்டும் என்று கவியரசி வெடுக்கென்று கூறி வாயடக்கினார்.

இலண்டன் 'நண்பர் கூடும் மனை'யில் இந்தியர்களின் பெருந்திரளான கூட்டத்தினர் கூடி நின்றனர். கவிஞர் 'ஏ. இ. ஹவுஸ்மேன் அவர்களின் சகோதரர்' லாரன்ஸ் ஹவுஸ்மேன் அங்கு இருந்தார். அவர், "சரோஜினி பெண் தன்மையின் சிறந்த படிமம்; சொந்த நாட்டுப் பட்டின் வளமிக்க உடையில்—நிமிர்ந்த வடிவ அமைப்பு; நடத்தையில் கம்பீரம்; ஆற்றலுடைய அழகான தோற்றம்" என்று விவரித்தார்.[6] போதிய சிறப்படையாத்

[6] "My Gandhi" by John Haynes Holmes, பக். 41,

'இந்தியாவின்மீது தீர்ப்புரை' என்ற நூலின் ஆசிரியர் பிவர்லி நிக்காலஸ், சரோஜினியை மிகப் பாராட்டினார். சரோஜினியின் கறுப்புப் பூனையை அவர் பாராட்டியதால், அவரைத் தாம் விரும்பியதாகச் சரோஜினி என்னிடம் கூறினார்.

இவ்வாறாக அவர்தம் தைரியமான, கம்பீரமான, விரைவான வாழ்க்கைப் பயணத்தைச் சில ஆண்டுகளாக நடத்தினார். உலகின் அனைத்துப் பகுதியிலிருந்த அறிஞர் குழுக்களும் அவரை விரும்பின; மதித்தன. ஆனாலும், அவரிடம் துன்பமும், இரக்கமும் உடன் இருந்தன. ஏனெனில், அவர் தம் நண்பர்களை மிக விரும்பினார். அவர்கள் ஒவ்வொருவராக இறந்தபோது அவர் வருந்தினார்; அதை மறக்கவும் முடியவில்லை. மகாத்மா காந்தி கொலை செய்யப்பட்டபோது, எச். எஸ். எல். போலக், எச். என். பிரயில்ஸ் ஃபோர்டு, லார்டு பெதிக் லாரன்ஸ் ஆகியோர் பதிப்பித்த நூலுக்குச் சரோஜினி ஒரு முன்னுரை எழுதினார். அவர் கூறினார்:

''தீபாவளி விரைவில் வரப்போகிறது. ஆனால் தீபாவளியை முன்னிட்டு நமது கிராமங்களிலுள்ள அகல் விளக்குகளும், நகரங்களிலுள்ள வெள்ளி விளக்குகளும் எரியப் போவதில்லை. ஏனெனில் நூற்றாண்டுகளாகக் கட்டப்பட்டிருந்த இந்தியாவை விடுவித்து, அதற்கு விடுதலையையும், தனிக் கொடியையும் கொடுத்த மகாத்மா காந்தியின் இறப்புக்காகத் தேசத்தின் இதயம் இன்னும் மிக வருந்துகிறது.''

உண்மைதான். சரோஜினியின் இறப்புக்குப் பதின்மூன்று மாதங்களுக்கு முன்னால் 1948 ஜனவரி 30-ஆம் தேதி அவர் தலைவர் 'ஹரே ராம்' என்ற சொற்களைக் கூறியவாறே இறந்துபட்டார். அப்போதே சரோஜினியிடமும் ஏதோ ஒன்று இறந்துவிட்டது. உலகம் இருண்டுவிட்டது. முப்பத்தைந்து ஆண்டுகளாகச் சரோஜினிக்கு வழிகாட்டி வந்த கலங்கரை விளக்கம் இப்போது எரியவில்லை.

சரோஜினி தம் முன்னுரையில் கூறியபடி, இந்திய விடுதலைக்காக மேற்கொண்ட மகாத்மாவின் பெரிய சேவைகளில்,' 'அவரது கொடியின்கீழ்ச் சிறைக்குச் சென்ற அவரது பயணங்களில்,' அவரை விரும்பியவர்கள் அல்லது வெறுத்தவர்களது பாவங்களுக்காக அவர் மேற்கொண்ட விழுமிய நோன்பின்போது அமைந்த கண்காணிப்பில், தலைவருடன் தாம் நெருக்கமான தொடர்பு கொண்டிருந்ததை வெளிப்படுத்தினார்.

சரோஜினி மிக நெருக்கமாகத் தொடர்பு கொண்ட பிறகு, மிக ஆழமாகத் தம்மை அர்ப்பணித்த பிறகு, ''தனிப்பட்ட குணங்களை, அதிசயமான அறிவை, ஆன்மாவைப் பெற்ற நிகரற்ற வரைப் பகுத்துரைக்க முயல்வது அல்லது விளக்க முயல்வது உயிருள்ள விலங்கொன்றை அறுத்துப் பார்த்து உடற்கூறு காணும் செயல் போன்றதே, அவர் நம் தலைவர்; நம் நண்பர்; நம் தந்தை மட்டுமில்லை; நேர்மையாகவும் முழுமையாகவும் கூறி ஞல், அவர் நம் வாழ்வின் ஒன்றிய பகுதியே ஆவார்'' என்று உணர்ந்தார்.

அடுத்த ஆண்டில் அவரும் இல்லை; தம் தலைவர் மகாத்மாவுடன் 'பாரத கோகிலம்' பறந்து சென்று உறைந்தது; எதிரொலிக்கும் அவர் குரல் எப்போதும் அமைதியாயிற்று.

# 13. போராட்ட ஆண்டுகள்

1929-ஆம் ஆண்டின் இடையில் அமெரிக்காவிலிருந்து திரும்பிய சரோஜினி கிளர்ச்சி மிக்க அரசியல் வாழ்வில் சுயஉறுதிப்பாட்டுடன் கூடிய துன்பமயமான உலகில் ஆழ்ந்தார். மறியல் இயக்கங்கள், போலீஸ் கைதுகள், சிறைத் தண்டனைகள் அன்றாடக நடவடிக்கை களாக இருந்தன.

மகாத்மா காந்தி, 1930 மார்ச்சு 12ஆம் தேதி 'உப்பு யாத்திரை' யைத்தொடங்கினார். அவரது பாதயாத்திரையில் கலந்துகொள்ளத் தேர்ந்தெடுக்கப்பட்ட பட்டியலில் எழுபத்தைந்து பேர் இருந்தனர். அப்போது யாத்திரையில் அவருடன் பெண்கள் கலந்துகொள்ளக் கூடாது என்று மகாத்மா கட்டளையிட்டிருந்தார். பாதயாத்திரிகர் கள் ஒரு நாளைக்குப் பன்னிரண்டு மைல் நடந்தனர். அவர்கள் கடலை நெருங்கியபோது அவர்களது எண்ணிக்கையும் உயர்ந்தது. 24 நாள்கள் பயணம் செய்து, ஏப்ரல் 5-ஆம் தேதி இருநூறு மைல் தூரத்திலிருந்த தண்டியை அவர்கள் அடைந்தபோது, மகாத்மா வைச் சந்திக்கச் சரோஜினி தண்டியில் இருந்தார். கடவுள் வழி பாட்டிற்குப் பிறகு, காந்திஜி கடற்கரையிலிருந்த கொஞ்சம் உலர்ந்த உப்பினை எடுத்து உப்புச் சட்டத்தை மீறினார். அப்போது அஹிம்சைத் தொண்டர்களின் கூட்டத்தில் ஆயிரக்கணக்கான பெண்களும் சேர்ந்தனர். அவர்கள் கடல்நீரையும் வீணான உப்பை யும் வீட்டிற்குக் கொண்டு செல்லத் தம்முடன் பாத்திரங்களைக் கொண்டு வந்திருந்தனர். இதுவரை வீட்டைவிட்டு வெளிவராத அந்தப் பெண்களின் தைரியத்தை மகாத்மா காந்தி மிகவும் பாராட்டி, 'அவர்களின் பங்கு பொன்னெழுத்துக்களால் எழுதப் படும்' என்றார். இப்போது அவர் இயக்கத்தில் பெண்களும் முழுதும் சேர்த்துக்கொள்ளப்பட்டனர்.

மகாத்மா உப்பை எடுத்தபோது சரோஜினி 'விடுதலை தந்த வீரர்க்கு வாழ்த்து' என்று கூறினார். உடனே, ஆயிரக்கணக் கானவர் தமது பாத்திரங்களை நிரப்ப நீரில் இறங்கி முன்னேறினர். காவலர் உடனே அவர்களைக் கைது செய்யத் தொடங்கினர். அப்போது நாடு முழுவதும் போர் ஆரவாரமாக இருந்தது. மகாத்மாஜியின் அஹிம்சைச் சட்டம் அப்போதும் மீறப்படவில்லை. காந்திஜி கைது செய்யப்பட்டார். ஆனால் சிறையில் முழு திருப்தி யுடன் இருந்தார். சரோஜினி அவரைச் சந்தித்தார். அப்பாஸ் தியாப்ஜி கைது செய்யப்பட்ட பிறகு சரோஜினி தலைவராக

வேண்டுமென்று அவர் கேட்டுக்கொள்ளப்பட்டார். அவர் உடனே தர்சனுவுக்குச் சென்று ஒரு பெரிய படைக்குத் தலைவரானார். தர்சனுவில் அவரும், அவரைத் தொடர்ந்து வருபவரும் தடுத்து நிறுத்தப்பட்டிருந்தனர்; அவர்கள் கொதிக்கும் வெயிலில், மிகத் தாகத்துடன் தெருவில் அமர்ந்திருந்தனர். ஏனெனில், காவலர் அவர்களுக்குத் தண்ணீர் வண்டிகளைக் காட்டினாலும் அவர்களைக் குடிக்க அனுமதிக்கவில்லை. ஓர் அமெரிக்கர், ''அழுக்கான தெரு ஒன்று... அங்கே நாற்காலியில் அமர்ந்திருந்த ஒரு பெண் கடிதங்கள் எழுதி அல்லது கைகளால் பின்னல் பின்னிக் காலத்தைக் கடத்திக்கொண்டிருந்தார். அவரைச் சூழ்ந்து தரையில் தேசீய வாதிகள் உட்கார்ந்திருந்தனர். அவர்களால் தெரு நிரம்பியிருந்தது. அவரைப் பின்பற்றும் தொண்டர்களுக்கு எதிரில், அதே எண்ணிக்கையுள்ள காவலர் தம் கைகளில் தடிகளையும், துப்பாக்கிகளையும் வைத்துக்கொண்டிருந்தனர். காவலர் அமைதியாக இருந்தனர். ஆனால் அத்தேசீயவாதிகள் தாம் அடைய இருந்த தர்சனு உப்புப் பணிமனையை நோக்கி மேற்கொண்டு முன்னேறக் கூடாது என்று அவர்கள் முடிவெடுத்தனர்'' [1] என்று எழுதினார்.

திரு வெப்மில்லர் இந்த முக்கியமான இயக்கத்தைப் பற்றி ''நான் அமைதியைக் கண்டேனில்லை'' என்ற தமது நூலில் விரிவான விளக்கத்தைத் தருகிறார். அவர் பாராட்டுதல அளவிறந்தது: ''புகழ்பெற்ற இந்தியக் கவிஞர் சரோஜினி நாயுடு தர்சனுவுக்கு அருகில் இருந்த உப்பளத்தை நோக்கி ஓர் அஹிம்சைப் போராட்டத்தை முன்னின்று செலுத்துகிறார். மிக அருகிலுள்ள புகைவண்டி நிலையம் 'துங்கிரி'; அது தனித்திருக்கும் ஓரிடம்; நீங்கள் உங்களுக்குரிய உணவையும், நீரையும் நீங்களே கொண்டு செல்லவேண்டும். துங்கிரியிலிருந்து வண்டி வசதி பெற நீங்கள் திருமதி நாயுடுவுக்குத் தந்தி அடிப்பது நல்லது. அல்லது நீங்கள் பல மைல்கள் நடக்க வேண்டிவரும். கண்ணாடிக் குவளைகளில் நிரப்பப்பட்ட நீர் போதுமான அளவு இருக்கிறதா என்பதையும் உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள். ஏனெனில் வெள்ளையர்களுக்கு உள்ளூரில் கிடைக்கும் அந்தத் தண்ணீர் ஆரோக்கியமற்றது.'

திருமதி நாயுடு பயணத்தைத் தொடங்குவதற்கு முன்னால் அனைவரையும் கடவுள் வழிபாட்டிற்கு அழைத்தார்; கூட்டத்தினர் அனைவரும் மண்டியிட்டனர். சரோஜினி அவர்களுக்கு ஊக்கம் ஊட்டினார். ''காந்தியின் உடல் சிறையிலிருக்கிறது, அவர் உயிர் உங்களுடன் இருக்கிறது. எந்தப் பலாத்காரத்தையும் எந்தச் சூழ்நிலையிலும் நீங்கள் பயன்படுத்தக்கூடாது. நீங்கள்

[1] Quoted in women behind Mahatma, op. cit., பக். 158.

அடிக்கப்படுவீர்கள், அதை நீங்கள் எதிர்க்கக்கூடாது. அடிகளைத் தடுப்பதற்காக உங்களது கைகளைக்கூட நீங்கள் உயர்த்தக் கூடாது.'' மகிழ்ச்சி ஆரவாரத்துடன் அவர் பேச்சு வரவேற்கப் பட்டது.

திரு. மில்லர்: ''நான் திருமதி சரோஜினி நாயுடுவைப் பார்க்கச் சென்றேன். அவர் காவலர் அடிக்காதவாறு கூட்டங்களை ஒழுங்குபடுத்தத் துணைத் தலைவர்களுக்கு வழிகாட்டிக் கொண்டிருந் தார். நாங்கள் பேசிக்கொண்டிருந்தபோது பிரிட்டிஷ் அதிகாரி ஒருவர் அவரிடம் வந்து, அவரது கையைத் தொட்டு, 'நீங்கள் கைது செய்யப்படுகிறீர்கள்' என்று கூறினார்.'' சரோஜினி சிரித்த வாறே அவரது கைகளை உதறிவிட்டு, 'நானே வருகிறேன். ஆனால் என்னைத் தொடவேண்டாம்' என்றார். அவர் அந்தப் பிரிட்டிஷ் அதிகாரியுடன் திறந்த வெளியைக் கடந்து முள் கம்பிகள் வேயப் பட்ட இடத்திற்குத் தாண்டிச் செல்லும்போது கூட்டத்தினர் பித்துப் பிடித்தவர்போல் ஆரவாரம் செய்தனர். அவர் அங்குப் பாதுகாப்பில் வைக்கப்பட்டார். பிறகு அவருக்குச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. மணிலால் காந்தியும் கைது செய்யப் பட்டார். ''சீக்கிரம், சீக்கிரம் பல் விளக்கிகளை மூட்டை கட்டிக் கொண்டு, இந்த வண்டியிடம் வந்துவிடுங்கள்.''—இது திருமதி நாயுடுவின் நகைச்சுவைக் குறிப்பு.

இந்தியா முழுவதும் பலர் கைது செய்யப்பட்டனர். 1931 பிப்ரவரி 6-ஆம் தேதி பண்டித மோதிலால் நேரு காலமானார். இது சரோஜினிக்கு மிகத் துன்பத்தைக் கொடுத்தது. இருப்பினும், ''கிறிஸ்துவ வைஸ்ராய் இர்வின் பிரபுவுக்கும் மகாத்மா காந்திக் கும் இடையில் வளர்ந்த நட்பு 1931-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ஒரு மாறுதல் அளித்தது. ஆகஸ்டில், சரோஜினி, மகாத்மா காந்தியுடனும், மற்றவருடனும் வட்ட மேசை மாநாட்டில் கலந்து கொள்ளக் கப்பலில் பயணமானார். அவர்தாம் மகாத்மாவின் வலது கை என்பதை நிலைநாட்டினார், மற்றும் மகளிர் உரிமைகளுக் காகப் பெரிதும் உழைத்தார். மாநாடு முடிந்ததும் சரோஜினி அந்தக் கண்டத்தில் பயணம் செய்தார். கேப் டவுன் பகுதிக்கு ஸ்ரீநிவாச சாஸ்திரியுடன் சென்றார். இரண்டாம் வட்டமேசை மாநாடு தோல்வியடையவே தலைவர்கள் இந்தியாவுக்கு மீண்ட வுடன், மீண்டும் பலர் கூட்டாகக் கைது செய்யப்பட்டனர். சரோஜினியும் விலக்கில்லாமல் கைது ஆனார். மீராபென்னைப் போல அவரும் அதே சிறையில் அடைக்கப்பட்டார். அந்தக் கவிஞர் வந்தபோது பல வசதிகளும்கூட வந்தன, என்று மீரா பென் கூறுகிறார். அவர் மேலும் எழுதுகிறார்: ஒரு படுக்கை, சீப்பு, பிரஷ்ஷுடன் கூடிய அலங்காரம் செய்யும் ஒரு மேசையும்,

கழுவு பாத்திரமும், தாங்கியும், குளியல் தொட்டியும், திரைச் சீலைகளும் வந்தன. சிறைக் காவலாளி மிகத் தீவிரமாகக் காவல் செய்தார். மறுநாள் மிகுந்த உற்சாகத்தோடும் சிரிப்போடும் சரோஜினி வந்தார். அவர் வெளியில் இருந்தபோது வேகத்துடனும், எழுச்சியுடனும் இருந்ததை உண்மையாக வெளிப்படுத்தினர். அவரது வயதோ, வலியோ, நோயோ எதுவும் அவரை எப்போதும் அச்சுறுத்தியதில்லை. இப்போது, எல்லாச் செய்திகளையும் கேட்டறிவதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைத்தது. செய்திகளோ மிக அதிகம்; சிறையில் ஒருவருக்கு 'டைம்ஸ் ஆப் இந்தியா' வார இதழ் கொடுக்கப்பட்டது. சிலபோது அதில் செய்திப் பகுதிகள் சில வெட்டப்பட்டிருக்கும். ஆகவே மூன்று அல்லது நான்கு நாள்கள் ஒன்ருகவே இருந்தாலும் எல்லாச் செய்திகளையும், கதைகளையும், துணுக்குகளையும் அறிவது அருமையாகும்'' [2] என்று எழுதினர்.

பின் ஆண்டுகளில் விடுதலைப் போராட்டங்கள் தொடர்ந்து நடைபெற்றன. காங்கிரஸ் பிரகடனப்படுத்திய 'வெள்ளையனே வெளியேறு' என்ற முடிவான போரின் தொடர்பாக 1942-இல் பலர் கூட்டாகக் கைது ஆனர்கள். ஆககான் அரண்மனையில் மகாத்மா காந்தி, மற்றும் பலருடன் சரோஜினி சிறையில் அடைக்கப்பட்டார்.

ஆககான் சிறைச்சாலை சிறப்பில் மிகப் பெரியது. இந்தச் செல்வச் செழிப்புள்ள சிறைச்சாலை அச்சம் தரக்கூடிய உணர்வை உருவாக்கியது. அதன் பரந்த மதில்களுக்கு இடையில் காந்திஜி, அவர் மனைவி, சுசீலா நய்யார், மகாதேவ் தேசாய், பியாரிலால், மீராபென், சரோஜினி இவர்கள் அடைக்கப்பட்டிருந்தனர். மகாத்மாவும் அவரது மனைவியும் 73 வயதுடையவர்.

1942-இல் 'வெள்ளையனே வெளியேறு' என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பிறகு, முதலில் வைஸ்ராயைக் காண மீராபென் அனுப்பப்பட்டார். அவருக்கு அனுமதி மறுக்கப்பட்டது. ஆகஸ்டு 8-ஆம் தேதி காந்திஜி பம்பாயில் ஒரு பெரிய கூட்டத்தில் சொற்பொழிவாற்றிய பிறகு பிர்லா மாளிகைக்குத் திரும்பினர். அவருடன், பின்னர்ச் சிறைப்படுத்தப்படும் அவர் நண்பர்களும் அந்தத் தொழிலதிபர் மாளிகையில் தங்கியிருந்தனர்.

நள்ளிரவில் காந்தி கைது செய்யப்படுவார் என்ற தொலைபேசிச் செய்தி மகாதேவ் தேசாய்க்கு வந்தது. ஆகஸ்டு 9-ஆம் தேதி விடியற்காலையில் காவலர் குழுவினர் வந்தனர். மகாத்மாவையும் அவர் கூட்டத்தினரையும் சுருக்கமான கடவுள் வழிபாடு முடிந்ததும்

[2] The Spirits' Pilgrimage by Mira Behn, op. cit., பக். 61.

அழைத்துச் சென்றனர். காந்திஜி, சரோஜினி, பியாரிலால், மகாதேவ் தேசாய், மீராபென் ஆகியோர் மட்டும் அழைத்துச் செல்லப்பட்டனர். கஸ்தூரிபாய் தம் கணவருக்குச் செய்ய வேண்டிய பணிகளை வற்புறுத்தியபோது, அவரும் சுசீலாநய்யாரும் கைது செய்யப்பட்டுப் பின்னர் அதே சிறைச்சாலைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

குற்றவாளிகள் புகைவண்டியில் பயணம் செய்தனர்: அதே வண்டியில் காங்கிரஸ் செயற்குழுக் கூட்ட உறுப்பினரும் காவலில் இருந்தனர். ஒவ்வொருவரும் ஏதேனும் ஒரு சிறையில் இருக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

சிறையில் அடைக்கப்பட்ட சிறிது காலத்தில் மகாதேவ் தேசாய் மார்பு வலியால் துன்புற்று மாண்டார். கூட்டத்தினர் அனைவரும் துன்பத்தில் ஆழ்ந்தனர். துன்பத்திலும் கலங்காத சரோஜினி ஒளிமிக்கவராய்ப் பயமற்று அவர்கள் முன்னிலையில் துணையாக இல்லாவிட்டால், அவர்கள் அனைவரும் துன்பத்தால் மிகச் சோர்ந்திருப்பார்கள். அவரும்கூடச் சில சமயங்களில் அடக்கி மூடிவைத்த உணர்ச்சிக் கொந்தளிப்பைத் தாங்கிக்கொள்ள முடியாமல் துயர உணர்ச்சிக்கு இடம் கொடுக்க நேர்ந்தது. இவ்வளவு துயரங்களுக்கிடையிலும் சரோஜினிதான் அக்குழுவுக்கு உயிர்நாடியாக அமைந்திருந்தார் என்று கூறவேண்டியுள்ளது. மீரா பென், "ஆககான் அரண்மனையில் ஒருங்கே சிறைப்பட்டிருக்கும் இந்த நேரம் வரையில் பாபு உட்பட நம்மில் யாரும் சரோஜினி தேவியின் முழுமையான சிறந்த இயல்புகளை உணரவில்லை. அவர் நகைச்சுவையுடன் சாதுரியமாகப் பேசினர். தாய்மை இயல்புடன் அனைவரின்மீதும் தம் அன்பைப் பொழிந்தார்" என்று கூறுகிறார்.

**கா**ந்தி ஆறு மாதங்களுக்குப் பிறகு உண்ணா நோன்பிருக்க உறுதிகொண்டார். தொடக்கத்தில் பொதுமக்கள் இதை அறிய வில்லை. விடுதலைக்குப் போராடுவோர் சிலர், அவரது கடின முயற்சியால், 'அவர் இறந்துவிடுவாரோ?' என்ற அச்சத்தில் வாழ்ந் தனர். நாலாம் நாள் அவருக்குக் குமட்டத் தொடங்கியது; வங்காளத்திலிருந்து டாக்டர் பி. சி. ராய் அனுப்பப்பட்டார். அப் போது ஆறு மருத்துவர்கள் கையொப்பமிட்ட செய்தி அறிக்கைகள் முறையாக வெளியிடப்பட்டன. பிப்ரவரி 21-ஆம் தேதி ஒரு சிக்கல் நிகழ்ந்தது; ஆனால் அது அடக்கப்பட்டது. ஆனால் உண்ணா நோன்பு முற்றுப்பெற்றபோது சரோஜினி தேவியும் சற்று வெறுப் புணர்ச்சி கொண்டார். இருப்பினும் ஆரஞ்சுப்பழச் சாற்றை முதலில் பருகுவதற்குரிய நிகழ்ச்சிக்கு அவரும் மெல்லிய ஊதா நிறப் புடைவையணிந்து வந்து, அந்த மருத்துவர்களுடன் நகைச்

சுவையுடன் பேசினார். ஆனால் கஸ்தூரிபாய் விரைவில் இறந்து விடப்போவது, அக்கூட்டத்தினர் மனத்தில் நிழலாடியதாகத் தெரிந்தது.

சரோஜினியும்கூட மலேரியா நோயால் பெரிதும் துன்புற்றார். அவர் 1943 மார்ச்சு 21-ஆம் தேதி ஒரு படுக்கையில் கிடத்தப்பட்டு அந்த அரண்மனைச் சிறைச்சாலையிலிருந்து வெளியில் கொண்டு செல்லப்பட்டார். மீராபென், "முக்கியமாக நானும், பிறரும் எந்த அளவு அவரை நழுவவிட்டோம்" என்று ஏக்கத்துடன் எழுதினார். கஸ்தூரிபாய் இன்னும் சிறைச்சாலையில்தான் இருந்தார். 1944 பிப்ரவரியில், ஏறக்குறைய ஓர் ஆண்டுக்குப் பிறகு, அவர் தமது கணவரின் கைகளில் கிடந்தபடி உயிர் துறந்தார். உடல்நிலை காரணமாக மகாத்மா மே 6-ஆம் தேதி விடுதலையடைந்தார். சுதந்தரப் போராட்டம், ரத்தக்கறை படிந்த அவல நாள்களுடன் மெல்ல மெல்ல முடிவை நோக்கி நகர்ந்தது. அப்போது சமுதாய அவல நிகழ்ச்சிகள் தொடர்ந்தன.

சுதந்தரத்திற்குப் பிறகு, முற்பகுதியில் அமைந்த கடைசி மாதங்கள் சிறிது நம்பிக்கை அளித்தன. கடைசி ஆண்டுகளும் நல்ல முடிவைத் தெரிவிப்பனவாகத் தோன்றின.

## 14. நகைச்சுவை, வண்ணம், விடுதலை

சரோஜினி நாயுடு 1917-ஆம் ஆண்டுக்குப் பிறகு எந்தப் பாடலையும் எழுதவில்லை. அவர் பாடல்கள் எந்த வகையிலும் மறக்கப்படவில்லை. இந்தியாவின் அனைத்துப் பகுதியிலும் அவர் தம் பாடல்களைக் கூறினார்கள். வில்லியம் ஹீன்மன் வெளியிட்ட அவரது பாடல்களின் மூன்று தொகுதி நூல்கள் இப்போது கிடைப்பதில்லை. ஆகவே, அவரது அனைத்துப் பாடல்களையும் ஒரே தொகுப்பாக வெளியிடுவதை இந்தியாவும் மேலை நாடுகளும் வரவேற்கும் என்ற உணர்வு இருந்தது. மிகவும் தேவையான இத்தொகுதி நூலை 1937-இல் அமெரிக்காவில், 'தி ஸெப்டர்ட் ஃப்ளூட்' என்ற பெயரோடு 'டாட்மெட் அண்ட் கோ' என்ற பதிப்பகம் வெளியிட்டது. இதற்கு முன்னுரை எழுதியவர் (Joseph Auslander) ஜோசப் ஆஸ்லாண்டெர். இந்நூலின் படியை நண்பர் அமர்நாத் ஜாவுக்கு அன்பளிப்பாக அளித்த சரோஜினி தாம் எழுதியதைப் பார்த்தார். ''எனது வாழ்க்கை அல்லது ஒருவேளை, எனது உணர்வுகள் எனக்கு அளித்த எல்லாப் பொருள்களிலும், நகைச்சுவை விலை மதிப்பற்ற ஒரு பரிசு என்று நான் மதிக்கிறேன். ஆமாம் என்னைக் குறித்தும் நான் நகையாடவில்லையா?''[1]

இத்தொகுதி மிக விரைவில் விற்பனையாயிற்று. அதனால் ''தி ஸெப்டர்ப் ஃப்ளூட்'', 'சாங்ஸ் ஆஃப் இந்தியா' என்ற பெயரோடு மற்றொரு வெளியீடு 1943-இல் கிதாபிஸ்தானால் தோன்றியது. 1946-இல் அதன் இரண்டாம் பதிப்பு வெளியிடப்பட்டது. முன்னர் ஹீன்மன் வெளியிட்ட மூன்று தொகுதிகளும் அமெரிக்கப் பதிப்பில் உள்ளவாறே அடங்கியுள்ளன. 'வாழும் மிகச் சிறந்த கவிஞரது' தொகுப்பு நூலை முதல் முதல் இந்தியாவிற்குத் தருவதற்குத் தாம் பெரிதும் மகிழ்ச்சி அடைவதாக வெளியீட்டாளர் கூறினர்.

சரோஜினியின் வாழ்க்கையில் குறிக்கத்தக்க மிகச் சிறப்புகளில் ஒன்று நகைச்சுவை ஆரவாரம். அவரைச் சூழ்ந்து அது எப்போதும் ஒலிக்கும். குறிப்பாக அவர் எங்கே சென்றாலும் அவர் கூட்டும் மாலை நேர உரையாடலில் அந்த ஒலி கேட்கும். சரோஜினியுடன் இருக்கும் நண்பர்கள், அவரை விரும்பிச் சூழ்ந்திருக்கும் பலரை உடனே வரவேற்றனர். பிறகு அவர் உட்காருவார்; நகைப்பார்; பேசுவார்; தம்மைப்பற்றியும், தாம் அறிந்த

[1] Sarojini Naidu by Amarnath Jha பக். 15.

ஆண்கள், பெண்களைப்பற்றியும் செய்தித் துணுக்குகளைக் கூறுவார்.

திருமதி மார்கரெட் இ. கஸின்ஸ், ''குறிப்பிட்ட அந்த நாளில் அவரது புடைவையைக் கவனத்துடன் தேர்ந்தெடுத்தார்; வெள்ளி நிலவொளி, நீல நிற வானத்தில் ஒளிர்வதைப்போல அது பயன்தரக்கூடும் என்று எம்மிடம் அவர் கூறியதை நான் நினைவு கூருகிறேன். ஒரு பெண், ஒரு கவிஞர், விரும்பிய முடிவை முடித்துக் காட்டும் ஒரு மேலாளர் அனைத்தும் ஆகிய அவர் நீதியையும், ஒருமைப்பாட்டையும் தேர்ந்து விசாரித்து உற்ற துணை செய்கிறார்; தூண்டுகிறார்''[2]—என்று எழுதுகிறார்.

அமெரிக்காவில், தொடர் வண்டியில் மேற்கொண்ட ஒரு 'சூருவளி'ச் சுற்றுப் பயணத்தை வருணித்து மகாத்மா காந்திஜிக்குச் சரோஜினி எழுதினார்: கோமேதகம், நீலக்கல் கோலத்துடன் ஒளி கூட்டிச் சூரியன் படர்ந்த நாடுகளுக்கு மத்திய வடக்கு மாகாணங்களில் வைரமும் வெள்ளியுமெனப் பனி படிந்த பிரதேசங்களின் வனப்புதான் எத்தகையது! எனது உடலின் சூடு மிக்க எலும்புகளையும் உலுக்கிய குளிர் நடுக்கத்துக்கு விடுதலை நல்கிய அந்த இனிய வீட்டில் நான் சூரிய தேவனுக்குக் குதூகல மூட்டும் காயத்ரி மந்திரத்தை எழுப்பியதுபோல், எனது வேத காலத்து முன்னோர்களின் ஆத்துமாக்களும் எழுப்பியிருக்க இயலாது என்பதை நான் தங்களுக்கு உறுதியாகக் கூறுகிறேன்''[3] என்று எழுதினார்.

ஓர் ஆர்வமுள்ள வாழ்க்கை வரலாற்று ஆசிரியர் தம்மிடம் சிறிது நேசம் பேச முயன்ற கதையை ஒரு முறை அவர் கூறினார். அந்த ஆசிரியர் தொடர் வண்டியின் படியில் நின்று பயணம் செய்தார். வண்டி ஒரு நிலையத்தில் நின்றபோது ஆசிரியர், அவர் இருந்த பெட்டியில் ஏறினார். அவர் கேட்டார்: ''இளைஞரே உங்களுக்கு என்னவேண்டும்?'' என்று.

''உங்கள் வாழ்க்கை வரலாற்றை (biography) நான் எழுத வேண்டும்'' எனப் பதிலுரைத்தார்.

''எனது உயிர் நூலா (biology), நிச்சயமாக முடியாது. எனது உயிரியல் பற்றி நான் யாரிடமும் கூறுவதில்லை!'' என்று விளையாட்டாகக் கூறினாராம் கவிஞர்.

அவர் பி.சி. ராய் அவர்களை 'ஒலிபெருக்கி' என்று விளையாட்டாகக் கூப்பிடுவார். காரணம் அவரது குரல் மிக உரத்த குரலாக இருந்தது.

---

[2] The Awakening of Asian womanhood by Margaret E. Cousins, பக். 120,121.

[3] Young India April 11,1929, யங் இந்தியா ஏப்ரல் 11,1929.

அவரது டாஜ் அறையைச் சில சிறுவர்கள் கண்டு பம்பாயின் காட்சிகளைப் பார்த்துக்கொண்டு இருப்பதாக அவரிடம் கூறி ஞர்கள்.

''நானும் அப்படி ஒரு காட்சி என்று நீங்கள் நினைக்கிறீர் களா?'' என்று அவர் கேட்டார்.

அவரைப் பற்றிய கதைகள் விருப்பத்தோடும் பழைய நினைவு களோடும் கலந்து அனைவராலும் கூறப்பட்டன. அவரது கருணையை, உதார குணத்தை நினைவுகொள்ளாதவர் மிகச் சிலரே.

இவ்வாருக ஆண்டுகள் கடந்தன. சரோஜினி நாயுடுவின் வாழ்க்கையும் பல காட்சிகளாக நகர்ந்தது. இறுதியாக இந்தியா சுதந்தரம் பெற்ற ஆண்டு வந்தது. இந்தியா சுதந்தரம் பெறு வதற்கு ஆறு மாதங்களுக்கு முன்னல், 1947 மார்ச்சில் 'ஆசிய நல்லுறவு மாநாடு நடைபெற, அவர் அதன் தலைவராக இருக்கும் படி கேட்டுக்கொள்ளப்பட்டார். முழுச் சபைக் கூட்டம் மார்ச்சு 23-ஆம் தேதி டில்லி பழைய கோட்டையில் நடைபெற்றது. திரளான கூட்டம் வந்திருந்தது. ஆசியாவின் மிகப் பெரிய வரை படம் மேடையில் பின்னணியாக இருந்தது. தலைவர் சரோஜினி நாயுடு, வரவேற்புக் குழுத் தலைவர் திரு. ஸ்ரீராம் தலைமையில் ஊர்வலம் உள்ளே வந்தது. பண்டிதர் நேரு, மாநாட்டைத் தொடங்கினுர். பிறகு சரோஜினி பேசினுர்: 'சாதாரணப் பெண்' எதற்காகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்ற வியப்புக் குறியோடு தம் பேச்சைத் தொடங்கினுர். அவரது சொற் பொழிவு வாழ்க்கையில் அவர் ஆற்றிய அழகுமிக்க, ஆற்றலான, திறன்மிக்க சொற்பொழிவுகளில் ஒன்று.

''நண்பர்களே! ஆசிய உறவினர்களே!

''இந்நாளைய மதிப்பிற்குரிய ஓர் இடத்தை நிறைவு செய்வதற்கு எதற்கு ஒரு சாதாரண பெண் தேர்ந்தெடுக்கப்பட்டாள் என்று நீங்கள் வியப்படையலாம். இதன் விடை மிக எளியது. இந்தியா எப்போதும் அதன் பெண்களுக்கு மதிப்பளிக்கிறது. ஆசிய நாடு களிலிருந்து வந்த இந்தப் பெரிய கூட்டத்தை நான் பார்க்கும் போது மிக நெகிழ்ந்துவிட்டேன். பெரும்பாலும் நான் ஊமை யாகிவிட்டேன். ஒரு பெண்ணை ஊமையாக்கும் அளவிற்கு அது இருக்கிறது.

''உங்களில் எத்தனை பேர் உயர்ந்த மலைகளின் கணவாய்களைக் கடந்து வந்திருப்பீர்கள் என்று வியக்கிறேன். பல வண்ணங் களுடைய கடல்களின் அகன்ற மேற்பரப்பில் மிதந்து வந்தவர்கள் எத்தனை பேர்? வைகறை, இரவுக் காலத்தின் மேகங்களுக்கிடை

யில் வளர்ந்து வந்தவர்கள் எத்தனை பேர்? நினைந்து பாருங்கள். இன்று, இங்கு இப்போது நாம் நிற்கிறோம். ஆசியாவின் இதயத்தின் மையப் பகுதியில் நிற்கிறோம். ஆசியாவின் ஒற்றுமைக்காக அழியாத ஓர் உறுதிமொழி எடுக்க நாம் இங்கு வந்திருக்கிறோம். இதன்மூலம் துன்பப்படும் உலகம்—அவலம், துன்பம், சுரண்டல், துக்கம், வறுமை, அறியாமை, அழிவு, இறப்பிலிருந்து இதன் மூலம் விடுதலை பெறமுடியும்.

''ஆசியா எப்போதும் சிறப்படைவது எதனால்? ஆசியாவின் பல செயல்களை—கொடுமையான அநாகரிகமான செயல்களைப் பற்றி நாம் படித்திருக்கிறோம். அவை நமது வரலாற்றை எழுதுபவரைப் பொருத்தே அமைந்துள்ளன. ஆனால் இதில் ஒரு பொருள் உள்ளது. அது இந்தப் பெரிய கண்டத்தின் மிக உண்மையான பண்பு—அது ஆசியாவின் ஒவ்வொரு தேசத்தையும், பொது அமைதிக் கொள்கையில் வந்து பங்கு கொள்ளும்படி அழைக்கிறது—மறுப்பினால் வரும் அமைதி அன்று; அடைக்கலத்தின் அமைதி அன்று; ஒரு கோழையின் அமைதி அன்று; இறக்கிறவரின் அமைதி அன்று; ஆனால் அந்த அமைதி, எதிர்க்கும் தன்மையுள்ள, ஆற்றலுள்ள, படைப்புத் திறனுள்ள, மேம்படுத்தும் மனித ஆன்மாவின் அமைதியாம்.

''மேலும் ஆசியா அதன் மறுமலர்ச்சி கொண்டு என்ன செய்யும்? வெல்லும் படைகளுக்கு, சுரண்டும் படைகளுக்கு அது துணை செய்யுமா? அல்லது அமைதிக் காவலர்கள், அன்புச் சேவகர்கள் என்ற முறையில் புதிய படைக்கலன்களை உருவாக்குமா? பழைய கொள்கைகளுக்குப் பொருத்தமாகத் தனது படை பலத்தை அது மாற்றி அமைக்குமா? பகைமை வெறுப்பின் மூலமாக, சினம் சண்டை மூலமாக, உலகம் விடுதலை பெறாது. ஆனால் இரக்கம், அன்பு, மன்னிக்கும் தன்மை மூலம் விடுதலை பெறும் என்று எனது சிறந்த அன்புத் தலைவர் மகாத்மா காந்தி நமக்கு அறிவுறுத்தினார். மற்றும், இது ஒரு புதுச் செய்தி அன்று. இந்திய மக்களின் அநுபவம், துணிவு, துன்பம், நம்பிக்கையால் உருவாக்கப்பட்ட ஆசியாவின் ஒரு பழைய செய்தி. வெறுப்பால் அல்லாமல், அன்பால் இந்த உலகம் விடுதலை பெறும்.

''ஆகவே முழு உலகத்தின் புதுச் செய்தியையும் வந்து தெரிந்துகொள்ளும்படி இந்தியா தனது ஆசியா உறவுகளை அழைத்தது.''

இந்தியா சுதந்தரம் அடைந்தபோது சரோஜினி உத்தரப் பிரதேசத்தின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். பதவி ஏற்பு விழாவில் சரோஜினி அழகான கவிதை நடையில் அமைந்த உரைநடையில் விடுதலையின் பெருமைகளை வற்புறுத்தினார்.

"ஓ சுதந்தர தேசங்களைக் கொண்ட உலகமே! நாங்கள் விடுதலையடைந்த இந்நாளில், வருங்காலத்தில் நீங்கள் விடுதலை பெற நாங்கள் வழிபடுகிறோம். பல ஆண்டுகளாக நடந்த, பல உயிர்களை விலையாகக் கொண்ட விழுமிய போராட்டம் எங்களுடையது; அது ஒரு போராட்டம், நாடக முறையில் அற்புதம் அமைந்த போராட்டம். லட்சக்கணக்கானவர்களில் தலை சிறந்தவர்களின் ஒரு போராட்டம் இது. நாம் பாராட்டும் ஒரு சக்தியாக மாற்றப்பட்டு, திரண்டெழுந்த பெண்களின் ஒரு போராட்டம் இது. ஒரு திறன்மிக்க தியாகமாக, கொள்கைகளாக விரைந்து மாற்றப்பட்ட, இளைஞர்களின் ஒரு போராட்டம் இது. இளையவர்கள்—முதியவர்களின், பணக்காரர்—ஏழைகளின், கற்றவர்—கல்லாதவர்களின், பாதிக்கப்பட்டவர்களின், சாதி கடத்தப்பட்டவர்களின், குஷ்டரோகிகளின், துறவிகளின் போராட்டம் இது.

"நம் துன்பங்களின் கடின சோதனைகளிலிருந்து இன்று நாம் மீண்டும் புத்துயிர் தாங்கிப் பிறந்திருக்கிறோம். உலக தேசங்களே! உங்களை, என் தாய் இந்தியாவின் பெயரால் வாழ்த்துகிறேன். 'எனது தாயின் வீடு' பனிக் கூரையைக் கொண்டிருக்கிறது; வாழும் கடல்கள் அதன் மதில்கள். அதன் கதவுகள் அனைத்தும் உங்களுக்காக எப்போதும் திறந்துள்ளன. உங்களுக்குத் தங்குமிடம் அல்லது துணை வேண்டுமா? அன்பும், புரிந்துகொள்ளும் பரிவுணர்ச்சியும் உங்களுக்கு வேண்டுமா? எங்களிடம் வாருங்கள். உண்மையோடு எங்களிடம் வாருங்கள். நம்பிக்கையோடு எங்களிடம் வாருங்கள். தருவதற்குரிய எல்லாப் பரிசுகளும் எங்களிடம் உள்ளன என்பதை நம்பி எங்களிடம் வாருங்கள். இந்த மகத்தான இந்தியாவின் விடுதலையை நான் முழு உலகுக்கும் அளிக்கிறேன். அந்த விடுதலை இதுவரை அழிந்ததில்லை; இனிமேல் அழியக்கூடியதும் இல்லை. அது உலகை நிரந்தரமான அமைதிக்கு அழைத்துச் செல்லும்."

# 15. இறுதி நாட்கள்

லக்னோவில் இருந்த அரசு மாளிகை இப்போது பண்பாட்டுக்கும், ஊக்கமிகு செயல்களுக்கும், மகிழ்ச்சி தரும் நிகழ்ச்சிகளுக்கும், சர்வதேசக் கூட்டங்களுக்கும் மையமாகத் திகழ்ந்தது. அழகாக விருப்பமிக்க சிறப்பு விருந்தினராக விளங்கியிருந்த சரோஜினி நாயுடு நேர்த்தியான முறையில் கலையழகு மிளிர அமைக்கப்பட்ட வீட்டில் தாராளமாக விருந்தோம்புவதில் மற்ற ஆளுநர்கள் பின் பற்றும்படி ஒரு முன்மாதிரியை அமைத்தார்.

சரோஜினி பல சொற்பொழிவுகளை ஆற்றும்போது, ஆங்கிலத்தில் பேச மிக்க மகிழ்ச்சி அடைந்ததாகத் தெரிகிறது. காவலர் அணிவகுப்பு ஒன்றில், ''இலக்கணமில்லாத இந்தியில் நான் பேச நீங்கள் கேட்டீர்கள்; இலக்கணமுள்ள ஆங்கிலத்தில் இனிப் பேசுவேனாக'' என்று அறிவித்தார். மகாத்மா காந்திஜியின் 78-ஆம் பிறந்த நாள் விழாவில் அவர் ''அனைத்துலகும் இவருக்கு மதிப்புத் தருக'' என்று உற்சாகம் ததும்பப் பேசினார்.

1948 ஜனவரியில் மகாத்மா காந்தி கொலையுண்டபோது அதிர்ச்சியடைந்து, குழப்பமடைந்து உடைந்த மனத்துடன் சரோஜினி டில்லியை அடைந்தார். தலைநகர் கண்ணீரில் கிடந்து, துன்பத்தால் தகர்ந்தது. சரோஜினியின் முகத்தில் துன்பத்தின் சாயல் இருந்தாலும், அவர் புலம்பவும் இல்லை. அவருக்கே உரிய அச்சமற்ற முறையில் கேட்டார்: ''மூக்கைச் சிந்தி அழுவது எதற்காக? வயது முதிர்ச்சியால் தளர்ந்து அல்லது அஜீரணத்தால் தளர்ந்து அவர் இறக்கவேண்டுமா? இந்த வகையான ஓர் இறப்பே அவருக்கு மிகப் பெரியது.''[1]

அவரது வானொலிப் பேச்சில் அவர் உலகிற்கு அறைகூவி அறிவித்தார்! ''தனிப்பட்ட துன்பத்தின் காலம் கடந்துவிட்டது. மார்பிலே அடித்துக் கொள்வதற்கும், தலையில் அடித்துக்கொண்டு மயிரைக் கலைத்துக் கொள்வதற்கும் உரிய காலம் கடந்துவிட்டது. எழுந்து நின்று மகாத்மா காந்தியை எதிர்ப்பவரோடு நாங்களும் முரண்படுவோம் என்று கூறவேண்டிய காலம் இப்போது இங்கு நேர்ந்திருக்கிறது.''

அவருடைய ஈமச் சடங்குகளை நிறைவேற்றப் பெரு முயற்சி எடுத்துக்கொண்டார். மகாத்மாவின் அஸ்தியைக் கொண்ட

---

[1] ''Prison and chocolate Cake'' by Nayantara Sehgal, பக். 220.

குடங்களில் ஒன்று அலகாபாத்தில் விடப்பட்டது. திரிவேணி சங்கமத்தில் இந்தியாவின் சிறந்த தலைவர்கள் தேசத் தந்தைக்கு இறுதி மரியாதை செலுத்தினர். சரோஜினி நாயுடு சடங்கு முன்னேற்பாடுகளைக் கவனிப்பதற்காக, டில்லியைவிட்டுப் புறப்பட்டு, பிப்ரவரி 12-ஆம் தேதி, பண்டித நேரு, பண்டித பந்துடன் அலகாபாத்தில் அஸ்தியைச் சிறப்பாக ஏற்றுக்கொண்டார். பிறகு சங்கமத்திற்கு அந்த நீண்ட ஊர்வலம் புறப்பட்டது. இருபது லட்சம் மக்கள் தெருக்களில் வரிசையாக நின்றனர். மகாத்மாஜிக்கு மிகப் பிடித்தமான 'கருணையுடன் ஒளிகாட்டு' என்ற பக்திப்பாட்டை மாதா கோயிலுக்கு முன் ஒரு பெருங் குழுவினர் பாடினர். சங்கமத்தில் அஸ்திக் குடத்துடன் சரோஜினியும் பிற தலைவர்களும் ஒரு வண்டியில் சென்றனர். வேத விதிப்படி அஸ்திக் குடம் நீரில் விடப்பட்டது. சரோஜினி நாயுடு தனியாக அளித்த ஒரு பேட்டியைப் பிப்ரவரி 13-ஆம் தேதிய 'தி லீடர்' வெளியிட்டது. ''உலக வரலாற்றில் அவரது இறுதிச் சடங்குகளைச் செய்து அமைப்பது என்பது அதிசயமான, சிறப்பான விழாக்களில் ஒன்று. அவரது பெயர், அன்பு, வாக்கின் மேன்மை, உண்மை, அஹிம்சையுடன் மனித குல வரலாற்றில் எப்போதும் ஒளிவீசும்.

''சிறந்த ஆறுகளான கங்கையும் யமுனையும் பல காலங்களாக, அந்த ஆறுகளின் சங்கமத்தில் முழு நிலையடைந்த பல லட்சக்கணக்கான ஆண்கள் பெண்களது அஸ்திகளைத் தாம் தமது பரப்பில் ஏற்றுக்கொண்டன. இந்திய வரலாற்றில் அந்தக் கங்கையும் யமுனையும் மனித குலத்தில் மிக மேன்மையான இத்தகைய ஒருவரது அஸ்தியை இதுவரை ஏற்றதே இல்லை. அவரது வாழ்க்கையும், இறப்பும் நாம் பக்தியோடு பின்பற்றத் தகுந்த அழியாத எடுத்துக்காட்டுகளாகும்.''[2]

சரோஜினி நாயுடுவின் உடலும் நலமாக இல்லை. மகாத்மா இறந்ததால் ஏற்பட்ட வருத்தமும், ஆர்வம் திரண்டு நெருக்கிய கடமைகளும் அவருக்கு எப்போதும் ஆபத்தான உடல் நிலையைத் தந்தன. தமக்குத் 'தளர்ந்த இதயமும்', உயர்ந்த இரத்த அழுத்தமும், அடிபட்ட காலும் இருந்தன என்று அமர்நாத் ஜாவிடம் அவர் தெரிவித்தார். 1949 பிப்ரவரி 13-ஆம் தேதி அவர் 70-ஆம் வயதை அடைந்தார். அடுத்த நாளே நோய்வாய்ப்பட்டார். ஆனால் டில்லிக்குப் பயணமாவதை வற்புறுத்தினார். வழியில் அவருக்குத் தலையில் அடிபட்டது. ஆனாலும் தமது அனைத்து நிகழ்ச்சிகளையும் நிறைவேற்ற முடிவு கொண்டார். கடுமையான தலைவலியோடும் உயர்ந்த இரத்த அழுத்தத்தோடும் நான்கு நாட்களில் லக்னோ மீண்டார். அவர் முழு ஓய்வெடுக்கவேண்டும்

[2] The Leader, February, 14, 1948.

என்று கூறப்பட்டது. அப்போது மூச்சுவிடுவதிலும் துன்பம் ஏற்பட்டது. பிப்ரவரி 18-ஆம் நாள் அவருக்குப் பிராண வாயு செலுத்தவேண்டியிருந்தது. பிராண வாயுவின் துணையிருந்தாலும் அவரால் உறங்க முடியவில்லை. 1949 மார்ச்சு முதல் தேதி இரவு செவிலியைத் தம் அருகில் வந்து பாடும்படி வேண்டினார்: ''என்னிடம் யாரும் பேசுவதை விரும்பவில்லை'' என்ற இறுதிச் சொற்களைக் கூறி, அந்தப் பாடலைக் கேட்டவாறே உறங்கினார். மார்ச்சு 2ஆம் தேதி காலை 3·30 மணிக்கு அவர் மறைந்தார். இந்தச் செய்தி துன்பத்தில் ஆழ்ந்து செயலற்ற தேசமெங்கும் எட்டியது. அரசு மாளிகைக்குப் பொதுமக்கள் மிகப் பலர் திரண்டனர். சவ ஊர்வலம் மாலை 4—15 மணிக்குத் தொடங்கியது. மூவண்ணக் கொடியால் சுற்றப்பட்ட உடல், பக்திப் பாடல்கள், வழிபாட்டுப் பாடல்களின் இசைகளுக்கு இடையில் சுமந்து செல்லப்பட்டது. பண்டித நேருவும் மற்றவர்களும் அதனை ஒரு துப்பாக்கி வண்டியில் வைத்தனர். அவரது குழந்தைகள் அவரைச் சூழ நின்றனர்.

தலைவர்களில் மிக்க துன்பம் கொண்டவர்கள் திருமதி மவுண்ட்பேட்டன், இந்தியத் தலைவர்கள், அமைச்சர் பலர், புடை சூழ வேத முறைப்படி இறுதிச் சடங்குகள் நடந்தன. இறுதி இராணுவ இசை கோமதி ஆற்றைக் கடந்து ஒலித்தது. சரோஜினி நாயுடுவின் மூத்த மகன் ஜய சூரியன் சிதைக்குத் தீ மூட்டினார். சி. இராஜகோபாலாசாரி ஈமச்சடங்கு இரங்கல் உறை ஆற்றினார். இந்தியாவின் புகழ்பெற்ற மகளின் சம்பூர்ணமாக வாழ்ந்த வாழ்க்கை இவ்வாறாக முடிந்தது. பாராட்டுகள் குவிந்தன. இந்த அச்சமற்ற பெண், கவிஞர், அமைதியை உருவாக்கியவர், பெண்கள் விடுதலைக்குத் தலைவி, நண்பர், தத்துவஞானி, வழிகாட்டி, விடுதலைக்காக அஹிம்சை நெறியில் மிகப் போராடியவர் ஆகிய இவரது இழப்புக்காக இன்றும் தேசம் வருந்துகிறது. இவரது வாழ்க்கைக் காலத்தில் இவரைப் பலர் பாராட்டினர். வாழ்க்கையின் தொடக்கத்தில், அவர் ஐதராபாத்தில் செய்த தொண்டுகளுக்காக 'கெய்சர் ஹிந்து' தங்கப்பதக்கத்தைப் பெற்றார். அதைப் பிரிட்டிஷ் அரசுக்குத் திரும்பத் தந்துவிட்டார். அவர் 'ராயல் சொஸைடி ஆஃப் லிடரேச்சர்' என்ற அமைப்பில் அங்கத்தினரானார். சென்னை, கல்கத்தா, கராச்சி நகரங்களது நகர்ப் பிரவேச உரிமை பெற்றார். அலகாபாத் பல்கலைக் கழகத்தின் 'டாக்டர்' பட்டம் பெற்றார்; இன்னும் பல சிறப்புக்களையும் பெற்றார்.

# 16. இந்திய ஆங்கிலப் பாடல்கள்

ஹென்றி லூயிஸ் வியன் தெரோஜியோ (1809–1831) தொடக்கமாக, இந்திய ஆங்கிலப் பாடல்களின் வயது 150 ஆண்டுகளாம். உண்மையில் அம்மொழி தனது தாராள நோக்கங்கள், இலக்கியச் செல்வம், பண்பாடு, சகிப்புத் தன்மையுடன் இந்த நாட்டிலுள்ள கற்றவர்களைக் கவர்ந்து, ராஜாராம் மோகன்ராய் (1772–1833) காலம் முதலே இந்தியாவில் பொதுவாகவே வளர்ந்திருந்தது. ஹென்றி தெரோஜியோ அவர்களின் தாய் இந்தியர்; தந்தை போர்த்துகீசியர். அவரது கவிதை நூல் 'ஃபக்கீர் ஆஃப் ஜங்கீரா அண்டு அதர் போய்ம்ஸ்' கவனத்தை ஈர்த்து, விரைவில் இந்தியர்கள் இந்த அந்நிய மொழியில் எழுதும் பழக்கத்தையும் தோற்றுவித்தது. மற்றக் கவிஞர்களும் விரைவில் இதைப் பின்பற்றத் தொடங்கினர். காஷி பிரசாத் கோஸ் முதல் வங்காளி ஆங்கிலக் கவிஞர். கவிஞர்கள் மிகப் பலர் உடன் தோன்றத் தொடங்கினர். சிலரது வளர்ச்சி வெறும் காளான்களைப் போன்றது. டோருதத் போன்றோர் இப்போதும் பாராட்டப்படுகின்றனர். அவர் எழுதியனவற்றைப் படிப்பவர் உண்டு. மோகன்லால் ஹாசன் அலி, பி. ராஜகோபால், ராஜ் நாராயண் தத்தா, டோருதத்தின் குடும்பத்தினர் ஆகியோர் தொடக்கக் காலத்துச் சிறந்த இந்திய ஆங்கிலக் கவிஞர்கள்.

'லாங்மன்ஸ் கிரீன் கம்பெனி', பதிப்பகத்தில் 'தத் குடும்பக் கவிக் கொத்து' என்ற நூலை வெளியிட்டனர். மைக்கேல் மதுசூதன் தத் அவர்கள் கவிதை, 'தத்'தின் குடும்பத்தினருக்கு உறவினர் அல்லர், அவரும் ''தி கேப்டிவ் லேடி'' என்ற நூலை எழுதி, அதன் மூலம் ஆங்கிலக் கவிதைப் படைப்பைத் தொடங்கினார். ஆனால் விரைவில் அவர் சொந்த மொழியான வங்காளியில் தம் கவனத்தைத் திருப்பிக் கவிதை இயற்றினார். இப்போது அவர் வங்காளத்தின் சிறந்த எழுத்தாளர்களில் ஒருவராகக் கருதப்படுகிறார். 1843 இல் அவர் கிறித்துவ மதத்தைத் தழுவினார்.

இதற்கிடையில், ஆங்கிலம் இந்தியாவில் செல்வாக்குடன் வளர்ந்தது. மெக்காலே அவர்களின் குறிப்பு, லார்டு பெண்டிங் அவர்களின் சட்டமானது. அதன் விளைவாக, ஒதுக்கப்பட்ட நிதி முழுவதும், ஆங்கிலக் கல்வி ஒன்றினுக்கே பயன்படத் திருப்பி விடப்பட்டது. ஆங்கிலம் கற்றே தீர வேண்டும் என்ற நிலையும் வற்புறுத்தப்பட்டது. இச்சட்டத்திற்குப் பிறகு 1835 முதல்,

ஆங்கிலம் இந்தியாவின் மிக முக்கியமான மொழியாக உத்தியோகப் பூர்வமாக வந்துவிட்டாலும்-உண்மையில் பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில், கோவாவின் சேசுமத போதகர் தாமஸ் ஸ்டீவன்ஸ் (1549-1619) அவர்களுடன் ஆங்கிலம் இந்தியாவுக்கு வந்தது.

வங்காளிகளும், பிரிட்டிஷாரும் 1817-ஆம் ஆண்டு கல்கத்தாவில் ஓர் இந்துக் கல்லூரியைத் தொடங்கினர். அந்த நகரத்தில் இதுவே முதல் ஆங்கில—வங்காளக் கல்வி நிலையம். அடுத்த ஆண்டு வில்லியம் கேரி, வார்டு, மார்ஷ்மன் என்போர் சிராம்பூர்க் கல்லூரியை நிறுவினர். அக்காலத்துச் சிறந்த முதல்வர்கள் டாக்டர் தத், பின்னர், டேவிட் லாஸ்டர் ரிச்சர்ட்ஸன் என்போர். பின்னவர் 'கல்கத்தா லிடரரி கெஜட்' என்பதையும் பதிப்பித்தார். மற்றும், அவரது லிடரரி லீவ்ஸ் என்ற நூல் இளைய இந்திய எழுத்தாளர்கள் பலரை ஆங்கிலத்தில் எழுதத் தூண்டியது. பெங்கால் மாகஸின், கல்கத்தா ரிவ்யூ போன்ற இதழ்கள் புதியவற்றை எழுத ஊக்கமளித்தன. தோருதத் அந்த இரண்டு இதழ்களிலும் டெரோஜியோ அவர்களின் பாடல்களை வெளியிட்டது மட்டும் அல்லாமல் 1874-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் அவரைப் பாராட்டினார்.

தோரு அவர்களின் இரண்டாவது வங்காளிச் சகோதரரும், சிறந்த எழுத்தாளரும், இந்திய இயல் தெளிந்த அறிஞருமான ரமேஷ் சந்திரதத் பிறகு சம்ஸ்கிருதக் காப்பியங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். இவ்வாறு இந்திய ஆங்கிலப் பாடல் காலந்தோறும் வளர்ந்தது. மேன்மேலும் அதனைக் கவனித்திருக்குமாறும் வளரத் தொடங்கியது. கவிஞர் மன்மோகன் கோஸ் அவர்களின் மகள் லோதிகா கோஸ் 1933-இல் இந்திய எழுத்தாளர்களைப் பற்றி ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதினார். அதற்கு முன்னால் 'ஆங்கிலக் கவிதைகளின் வங்காள நூற்கொத்து' என்பது தியோடர் டக்ளஸ் அவர்களால் தொகுக்கப்பட்டுச் சென்னையில் (லாங்மன்ஸ் கிரீன் பதிப்பகம்) 1918-இல் வெளியிடப்பட்டது.

தன்னுணர்ச்சிப் பாடல், பதினான்கு அடிப்பாடல், கையறுநிலைப் பாடல், வருணனை முன்னிலைப் பாடல் போன்ற மரப்புப்படி அமைந்த கவிதை வடிவங்கள் சிறந்து விளங்கின. அப்போது 1913-இல், இரவீந்திர நாத் தாகூர் தமது சொந்த வங்கக் கவிதைகளையே கட்டுப்பாடற்ற, ஆங்கில கவி நடையில் மொழிபெயர்த்து 'கீதாஞ்சலி' என வெளியிட்டு, 'நோபல் பரிசை' வென்றார். ஒரு புது வடிவம் தோன்றியது. அவரைப் பின்பற்றுபவர் சில நாள் அதனைப் போற்றினர். ஸ்ரீ அரவிந்தர், தாகூர் ஓரளவு டோருதத், சரோஜினி ஆகியோர் அவர் தம் திறன்களையும் இந்திய ஆங்கிலப்

பாடல்களின் வடிவங்களையும் அமைக்க உதவினர். "கற்பனை உணர்ச்சிகளை ஒரு குறிப்பிட்ட சொல் வடிவத்தில் உணர்த்தும் முறை சரோஜினி நாயுடுவின் சம காலத்தவரோடு ஒருவேளை முடிந்திருக்கலாம். ஆனால் கற்பனை உணர்ச்சியே முடிந்து விட்டதாகக் கருதிவிடக் கூடாது."[1]

பத்தொன்பதாம் நூற்றாண்டில், மேலை, கீழைத் திசைகளின் சிந்தனைக் கலப்பும், இலக்கியப் படிப்பின் கலப்பும் மிகுதியாக இருந்தன. ஐரோப்பிய அறிஞர்கள் பலரைச் சம்ஸ்கிருதம் கவரத் தொடங்கியது. சர் வில்லியம் ஜோன்ஸ் அவர்களின் தூண்டுகோலால் கல்கத்தாவில் ராயல் ஏஷியாடிக் சொஸைடி தோன்றியது.

இந்தியாவின் மகத்தான பாரம்பரியச் சொத்து ஐரோப்பாவுக்குத் திகைப்பூட்டியது. ஜான் வில்சன், சர் எட்வின் ஆர்னல்டு, சர் வில்லியம் ஹண்டர், மத போதக அறிஞர்கள், டேவிட் ஹேரே, வில்லியம் கேரி, ரிச்சர்ட்சன் போன்றோர், தம் பங்காக, இந்தியாவின் கலைச் செல்வத்தையும் பாடல்களையும், சமய நூல்களையும், பேராவலுடன் அறிந்தனர்.

மீண்டும் ஆங்கிலத்தையும், அதன் செழிப்பான இலக்கியங்களையும் அறிவதுடன் இந்தியர்கள் நின்றுவிடவில்லை. முன்னேற்றமடைந்துள்ள மேலைநாடுகளில் உறங்கிக் கிடந்த அறிவையும், ஆராயும் உணர்வையும் புதுப்பித்தனர். அது வாழ்க்கையைச் சீராக்கிப் புதுப்படைப்பின் வேட்கையைத் தூண்டியது. புத்துயிர்ப்புக்கொண்ட இந்திய உள்ளுணர்ச்சி, புதிய நிலைகளையும் கருத்துக்களையும் நேருக்குநேர் எதிர்கொண்டு—அப்புதிய போக்கை உணர்ந்து, தன்னுடன் இரண்டறக் கலந்து, அவற்றை வென்று மேலும் உயர்ந்த இலக்கியப் போக்கினை உருவாக்கும் அவசரத் தேவைக்கு ஆட்பட்டது.[2] இந்த இலக்கியச் செல்வாக்கை முதல் முதல் ஏற்றவர் வங்காளிகள். இப்புதிய ஆங்கிலப் பண்பாட்டை இந்தியர்களும் விமர்சிக்கத் தொடங்கினர். ஆங்கில மொழி வழிப் படி கல்வி கற்கும் முறையில் உருவாக்கப்பட்ட சரோஜினி நாயுடுவும்கூட இந்நிலையை வருத்தத்துடன் விமர்சித்து, "தேசீயத் தன்மையை இழந்துபோன இந்திய இளைஞர்களின் பல தலைமுறைகள் மேற்குத் திசை மயக்கத்தில் அடிமைத்தளை பூண்டு தம்மைத் தாமே விற்று—குருட்டு அறிவுத் துறையில் தம் நிலையிழந்தனர்" என்று கூறியுள்ளனர். இவ்வகையில் உண்டான நிறைந்த நற்பயன்கள் புறக்கணிக்கப்படவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்

---

[1] The Golden Treasury of Indo-Anglian Poetry, Ed. V. K. Gokak, பக். 35.

[2] Sri Aurobindo in The Renaissance in India, பக். 26.

டின் பரந்த மனப்பான்மை கொண்ட சுதந்தர உணர்வினைத் தாகூர் குறிப்பிட்டு எழுதினர்.[3]

சமயம், உலகியல், அறிவியல், மனிதவியல் தொடர்பான இலக்கியங்கள் மிகப் பல இந்தியாவில் தோன்றத் தொடங்கின. இந்திய அறிஞர்கள் கிறிஸ்துவின் அன்பு, தொண்டு பற்றிய கொள்கைகளையும், பழைய இந்து தத்துவத்தையும், வேதக் கருத்து களையும் இப்போது இணைக்கத் தொடங்கினர். ராஜாராம் மோகன்ராய் உருவ வழிப்பாட்டைக் கடியத் தொடங்கினர்; அதற்காகத் தண்டிக்கப்பட்டார். அவர் 1828-இல் பிரம்ம சமாஜத்தை நிறுவினர். சீர்திருத்தப்பட்ட இந்த இந்து மதத்திற்கு எதிர்ப்பிருந்தாலும், பெரியவர்கள் பலர் இதற்கு ஆதரவு அளித் தனர். உடன்கட்டை ஏறுவதைத் தடுத்தல், பெண்களுக்கு விடுதலை தருதல், சாதிப் பிரிவின் கொடுமைகளில் கவனத்தை ஈர்த்தல், தூர நாடுகளுக்கு இந்தியர்களை அனுமதித்தல் போன்ற சமுதாயச் சீர்திருத்தங்களும் உடனுக்குடன் நடைபெற்றன. மேலைநாட்டின் புதிய தாக்கத்துடன் கல்வி மிக விரைவுபடத் தொடங்கியது என்பது உண்மைதான்.

இராஜாராம் மோகன்ராய் தொடங்கிய பிரம்ம சமாஜத்தி லிருந்து, தேவேந்திரநாத் தாகூர், கேசவ் சந்திரசென் என்ற இரு வரும் ஒருங்கே பத்தாண்டுகள் உழைத்து ஒரு வன்மையான மதத்தை உருவாக்கினர். ஆனல் கேசவ் அவர்களின் போதனைகள் கிறித்துவக் கொள்கைகளையும், வடிவங்களையும் பெரும்பாலும் அடிப்படையாகக் கொண்டவை. அவை உண்மையான சமாஜத்தி லிருந்து ஒரு தனிக் கிளையாக உருவெடுத்தன. உண்மையில் அப் போது அங்கு ஒரு பிளவு இருந்தது. 1866 முதல் மூல பிரம்ம சமாஜம், ஆதி பிரம்ம சமாஜமாக உருவெடுத்தது. பிறகு ஷாத ரான் பிரம்ம சமாஜம் ஆனது. கேசவ் சந்திரசென் அவர்களது கிளை நவபீடன் எனப்பட்டது.

அக்காலத்துச் சிறந்த அறிஞர்கள், இந்தியாவின் மற்றப் பகுதி களில் கூட, மேற்கில் பிரதான சமாஜம், வடக்கில் ஆரிய சமாஜம், தெற்கில் பிரம்ம ஞான சபை போன்ற சீர்திருத்தப்பட்ட சமய மதங்களை அமைத்தனர். வங்காளத்தில், பிரம்ம சமாஜம் தவிர, இராமகிருஷ்ண மடாலயங்கள் மிகப் புகழ்பெற்ற ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் கூறிய கருத்துகளின் அடிப்படையில் சமயக் கொள் கைகளை விரிவாகப் பரப்பவும் மக்களுக்குத் தொண்டு செய்யவும் தொடங்கின. கவரும் சக்தி வாய்ந்த மற்றொரு புதிய மதம் இங்கு உள்ளது. இப்புதிய மதங்கள் அனைத்தும் ஒரு தனிப்பட்ட சமயத் தைக் கடிந்துரைக்காமல், தமது சகிப்புத் தன்மை கொள்கை

[3] Indo-English Poetry by P.C. Kotoky, பக். 5-6.

களால் அனைத்துச் சமயங்களையும் மதிப்பதாகவும் அரவணைப்பதாக வும் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

இந்திய—ஆங்கில எழுத்தாளர்களின் சிறப்பியல்பும் இதுவே: கவிஞர்கள் ஆங்கில மொழியைத் தேர்ந்து அதனைக் கீழைத் திசைக் குரிய சூழலில் உருவாக்கினர். ஐரிஷ், வேல்ஸ், போலிஷ், பிரெஞ்சு அல்லது ஆங்கிலத்தில் எழுதும் எந்த எழுத்தாளரையும் போல, கற்பனை அவர்கள் சொந்த நாட்டுக்குரியது. ஆனால் அதை ஆங்கில வழி வெளிப்படுத்தினர். ஆனால் 'இந்திய, ஆங்கிலப் பாடல்' வாழ்க்கைக் கருப்பொருள்களின் மேல்மட்டத்தை அல்லது புறக் கொள்கைகளையே பெரும்பாலும் காட்டியது. அது பெரும் பகுதி வன்மை பெற்றிருக்கவில்லை. ஸ்ரீஅரவிந்தர் கூறியவாறு அது 'ஒரு காலத்தின் மூலப்பொருள்.' அது இந்தியப் பாடலில் நிலையான மரபுத் தன்மையைவிட உயர்ந்துள்ளது[4] என்று இந்திய ஆங்கிலப் பாடல்களைப்பற்றி ஒரு விமரிசனம் உள்ளது. புராணம், கட்டுக் கதை, வரலாறு அல்லது ஒரு நாளைய வெறும் அநுபவம் என்பன இந்திய ஆங்கிலக் கவிஞர்களின் அடிக்கருத்துகளாகும். பலர் ஒரு புது பொம்மையைக் கண்டறிந்ததைப்போல், அந்தப் புது மொழி யுடன் விளையாடினர். அவர்கள் அந்த வடிவங்களை ஆய்ந்தனர்; பின்பற்றினர். ஆங்கில மொழியை அவர்கள் பயன்படுத்துவதில் மேன்மை இருப்பதை உணர்ந்தனர். ஆனால் ஐரிஷ் அல்லது வேல்ஸ் அல்லது வேறு நாட்டைச் சார்ந்தவர்களாகி, ஆங்கிலத் தில் எழுதிய ஈட்ஸ், டைலன் தாமஸ் போன்றோர் எழுதியனபோல் அவை அமையவில்லை; பல பாடல்கள் உயர்ந்த தரத்துடன் விளங்கவில்லை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில், மேலை, கீழைத் திசைகளுக் கிடையில் பரிவர்த்தனை செய்துகொள்ளும் உணர்வு, ஒரு புதிய சிந்தனை, பண்பாடு கொண்ட கூட்டத்தை உருவாக்கியது. அந்தக் கூட்டத்தின் தலைவர் கேசவ் சந்திரசென் ஆவார். தூர நாட்டி லிருந்து அண்மையில் திரும்பி, தேசாபிமான ஆர்வத்துடன் சீர் திருத்த வேட்கை நிறைந்த அகோரநாத் சட்டோபாத்யாய அவர்தம் சிறந்த நண்பர்களில் ஒருவர். இவர் நவபீடண் நிறுவனத் தில் ஒரு பிரம்மோ (உறுப்பினர்) ஆனார். பிரம்மானந்த சென் அவர்களாலேயே முதலில் ஏற்றுக்கொள்ளவும் பட்டார். சென் குடும்பத்தில் வரத சுந்தரியும் ஒருவர். ஆகவே சரோஜினியின் பெற்றோர்கள், இந்தியாவை உலகிற்கு உணர்த்தக் கூட்டிய மிக ஆற்றல் நிறைந்த கூட்டங்கள் ஒன்றுடன் முன்னரே தொடர்பு கொண்டிருந்தனர். அனைத்துச் சாதி, மத, இனங்களில் தாராள மனப்பான்மையும் சகிப்புத் தன்மையும் கொண்டிருக்கும் சூழலில்

[4] Indian writing in English, பக். 40.

அவர் வளர்ந்தார். குழந்தைப் பருவ முதலே கீழை, மேலைத் திசைகளின் தொடர்பை உணரும்படி அவர் கற்பிக்கப்பட்டார். 1879-இல் அவர் பிறந்தபோது, இந்தியர்கள் ஆங்கிலத்தில் எழுதும் எண்ணப் போக்கினைப் பெற்றிருந்தனர். இந்தப் பரம்பரை எண்ணத்தை அகோரநாத் தம் மகளுக்கு அளித்தார். ஆனால் அகோரநாத் ஐதராபாத்திற்குச் சென்ற பிறகு இருந்த சூழல், இந்து, இஸ்லாம், பிரிட்டிஷ் பண்பாடுகளின் கலப்பாகும்.

முல்க் ராஜ் ஆனந்த், "சரோஜினி, தம்மைப் புலப்படுத்த மேலைநாட்டு மொழியையும், மேலைநாட்டுத் திறன்களையும் பின் பற்றினாலும், அவர் காலிப், ஜோக்மீர், ஹாலி, இக்பால் இவர் தம் மரபில் வந்த முக்கியமாக இந்துஸ்தானிக்குரியவராகவே எனக்குத் தோற்றமளிக்கிறார்"[5] என்று குறிப்பிடுகிறார். மனித இனத்திற் காகச் சகிப்புத் தன்மையையும் அன்பையும் உணர்த்தும் பிரம்ம தத்துவத்தின் உண்மையான பின்னணியுடன் ஐதராபாத்தின் இந்து முஸ்லீம் அமைப்பின் ஒரு குழந்தையாக அவர் இருந்தார். பாரசீகப் பாடல்களின் செல்வாக்கும் அவரிடம் போதுமளவு இருந்தது. அவரது பார்வையில் பொருத்தமான ஆங்கிலத் தன்மையையும் அவர் பெற்றிருந்தார். "அவரது பாடல்களில் சில அந்நியக் கற்பனையின் வெளிப்பாடு அளவைவிடச் சிறிது மிகுந் திருக்கின்றது. செவி வழிக் கீழைத் திசையை அறிந்த ஓர் ஆங்கில எழுத்தாளரிடமிருந்து அவை வந்திருக்கக்கூடும்" என்று ஒரு திறனாய்வாளர் கூறுகிறார். ஆனால் சரோஜினி இந்தியாவில் வாழ்ந் தார், இந்தியாவில் வாழப் பெருவேட்கை கொண்டிருந்தார் என் பதை நான் உணர்கிறேன். இது உறுதி.

மேளதாளங்களின் ஒலிகளையும், நாடோடிப் பாடல்களின் சந்தப் பாடல்களையும் அவர் உணராவிட்டால், தெருவில் வணிகம் செய்வோரின் கூப்பாடுகளையும், அகன்ற ஆறுகளின் மேல் மிதந்து வரும் படகோட்டியின் எளிய தத்துவத்தையும் அவர் கேளாவிட் டால், பாம்புகள் தனக்கு முன் நடம்பயின்று கொண்டிருக்க, மாயா சக்தி வாய்ந்த தனது மகுடியை இசைத்தவாறு அமர்ந்திருக்கும் பாம்பாட்டியையும், வளையல் விற்பவரையும், பல்லக்குச் சுமப்பவரை யும் அவர் காணவிட்டால், தனிப்பட்ட 'பருதா நசீன்' என்னும் முகத்திரை உலகின் கவர்ச்சியான அழகோடும், பொலிவோடும் அவர் வாழாவிட்டால், இறுதியாகத் தாம் எழுதிய அக்காலத்துப் பெரிய மனிதர்களை அவர் விரும்பிப் போற்றாவிட்டால் அவர் அத்தகைய மிக அழகான தன்னுணர்ச்சிப் பாடல்களை இயற்றி யிருக்கமுடியாது. இந்தியாவின் இந்தக் கற்பனை உலகத்தையே அவர் ஆங்கிலத்தைப் படிப்பவர்க்கு அளித்தார்; அதைக் கவிதையாக

[5] The Golden Breath, பக். 102, quoted in Indo-English Poetry, பக். 42.

வடிப்பதிலும் பெருங்களிப்புக் கொண்டார். இதோ ஓர் இந்தியா இருக்கிறது; இதைக் குறித்து அவர் பெருமை கொண்டார். அதில் பெருமகிழ்ச்சியுடன் இருந்தார்; அதற்குத் தொண்டு செய்தும் அன்பு செலுத்தியும் பூசித்தார். இந்த விருப்பமான நாட்டையே தூர நாட்டினருக்கு அவர் விளக்கவேண்டும். அவரது நாட்டின் குற்றங்களையும், அதற்கு விரைந்து நடக்கவிருக்கும் பலாபலன்களையும் யாவரும் அறிய வெளிப்படுத்துவதில் அவர் நம்பிக்கை கொள்ளவில்லை. அப்படிக் கொள்வதும் ஏன்? அவருக்குப் பாடல் கலை என்பது ஓர் அழகு—வாழ்க்கையின் வெறும் யதார்த்தமான—அருவருக்கத்தக்க வெறுப்பும், இழிந்த குறிக்கோளும் கொண்ட வியாபாரக் கலையாக இல்லை. இவற்றுக்கு உண்மை நடைமுறையில் வரவேற்பு இருந்திருக்கலாம். ஆனால் சரோஜினிக்கு இந்நிலை எந்த உணர்ச்சியும் ஊட்டவில்லை.

அவர் எழுதியபோது இந்தியா ஓர் அடிமை நாடாக இருந்தது. சரோஜினி தம் தாய் நாட்டின் தகுதியை மற்றத் தேசங்களுக்கு முன்னால் உயர்த்த விரும்பினார். இங்கிலாந்து பெருமை அடைந்து விட்டது. ஏனெனில் அவர்களின் குற்றங்களை அவர்கள் எப்போதும் ஏற்றதில்லை என்று ஒருமுறை என் தாயாரிடம் அவர் கூறினார். நாம் நமது நாட்டைச் சுதந்தர நாடாக, ஆற்றல் மிக்க நாடாக ஆக்க முயலும்போது நாம் மட்டும் ஏன் ஏற்கவேண்டும்? ஆகவே அவர் இந்தியாவைப்பற்றி ஆங்கிலத்தில் உயர்ந்த அழகு செறிந்த கவிதைகளை இயற்றினார். அவர் காலத்தில் இந்தியாவின் அரசியல் மொழி ஆங்கிலம். இப்போதும், பதின்மூன்று மாநில மொழிகளுடனும், தேசிய மொழியான இந்தியுடன் விளங்கும் சுதந்தர இந்திய அரசின் அரசியல் மொழியாக உள்ளது. ஆகவே, ஆங்கிலத்திலுள்ள இந்திய இலக்கியம், இந்தியாவின் உறுதியான ஒரு பகுதியே ஆகும். பழங்காலத்தில் இந்தியாவை வென்ற மேலை நாட்டவர் வளர்ந்த அளவு, இங்கிலாந்தும் இந்தியாவின் வளர்ச்சிக்குத் தன்பங்கினை ஆற்றியது. ஆரிய வருகையாளர், ஆரிய மொழியான சம்ஸ்கிருதத்தை இந்தியாவுக்கு முதல் முதல் அறிமுகப்படுத்தினர். இப்போது அது இந்தியாவிற்குரியதாகவே மாறிவிட்டது. கிரேக்க, முகலாயச் செல்வாக்குகளும் பிறவும் நம்மிடம் எப்போதும் கலந்துள்ளன. இந்தியாவின் பெருமை இதில் அடங்கியுள்ளது. நாம் நம்மிடையில் நமது ஒருமைத் தன்மையை எப்போதும் இழந்ததில்லை; இந்தியா போற்றிய எந்த மொழியில் எழுதினாலும் அல்லது பேசினாலும் நாம் வேற்று நாட்டுக்குரியவராக மாறியதில்லை. இந்தியர்கள் ஆங்கிலத்தில் இயற்கையாகவும், சரளமாகவும் எழுதும் நோக்கிலும் உறுதியானவராவார், சரோஜினி. ‘‘செறிந்த வேற்றுமையில் ஒற்றுமை

காணுதல் என்ற இந்திய தத்துவ நோக்கத்தை இந்திய—ஆங்கில இலக்கியம் எடுத்துக் காட்டுகிறது.''[6]

கவிஞர்கள், நாவலாசிரியர்களையும் கூடத் தம் தாய்மொழி இல்லாமல் வேற்று மொழியில் அவர்கள் எழுதிய காரணத்திற்காக அவர்களைக் குறுகிய நோக்கத்துடன் குறைகூறுவது பாதகமானது என்று கருதவேண்டும். ஏனெனில் தமது சொந்தத் தேசிய மொழியில் எழுதிய சிறப்பில்லாத சவிஞர் உண்டு; வேற்று மொழியைத் தேர்ந்தெடுத்த சிறந்த கவிஞர்களும் உண்டு. ஆங்கிலக் கவிஞர்கள் என்று அழைக்கப்படும் பலர் சிறப்பற்ற பாடல்களை எழுதியுள்ளனர். ஆங்கிலம் 'ஆபத்தானது; அது ஆங்கிலேயருக்கே சஞ்சலம் தரும் மூலகாரணமாக எப்போதும் உள்ளது'[7] என்று அடிக்கடி கருதப்படுகிறது. மாறாக இந்தியர்கள் சிலர், ஆங்கிலேயர்கள் பலரைவிடத் தூய ஆங்கிலத்தை எப்போதும் பேசுகின்றனர் என்று குறிப்பிட்டுள்ளனர். அரசியல் மேடையிலிருந்து இந்தியர் எழுதும் ஆங்கிலத்தைப் பலர் மதிப்பிடுவர். பல சமயங்களில் இந்திய நாட்டுக்குரிய அளவுகோல்களைக் கொண்டும் அளப்பதில்லை. வெறும் வட்டார உணர்ச்சி, வெறும் இனத் தேசியப் பற்று இவற்றுக்குரிய அளவுகோல்களைக் கொண்டே அளக்கின்றனர். எடுத்துக்காட்டாக, சரோஜினி நாயுடு போருதத், ஸ்ரீஅரவிந்தர் போன்ற பழைய கவிஞர்களும் பிறரும் ஆங்கில மோகத்தில் வீழ்ந்துவிட்டதாகக் கூறக் கேட்டதுண்டு. தாய்மொழியை நினைக்கமுடியாத அளவு தம்மை இழக்க வைத்த சூழ்நிலை எது?[8] ஆனால், இந்த அளவு இல்லாவிட்டாலும், இக்கால இந்திய—ஆங்கிலக் கவிஞர்களும் அதே மனப்பிராந்தியால் துன்புறவில்லையா? அதுமட்டுமல்லாமல் வங்காள—மோகம், ஒரியா—மோகம், தமிழ் மோகம், இந்தி மோகம் போன்றவற்றின் சார்பும் உள்ளது. இவ்வாறு, கவிதை, மிக மிக வட்டாரச் சார்புடையதாக அமையலாம். சிறந்த மொழிபெயர்ப்புக்களின் மூலம் அது வேறு வட்டாரங்களையும் அடைந்து விளங்க முடியுமானால் அப்படி அமைந்தது எல்லாம் நன்மையே.

இந்திய ஆங்கிலக் கவிஞர்கள் மிகச் சிலரைத் தவிர—ஸ்ரீஅரவிந்தர் அல்லது சரோஜினி நாயுடுவைவிடத் தேசியப்பற்று அல்லது நாட்டுப்பற்று உடையவரை எடுத்துக்காட்ட வேறு ஒருவரும் இல்லை. ஆங்கிலத்தில் கவிதைகளை எழுதித் தம்மைத் தாமே கவிஞர்களாக மதித்துக்கொள்ளும் சிறு கவிஞர்கள் தாம்

---

[6] Indo-English Literature in the 19th Century by John Alphonso Karkala, பக். 1.

[7] The Swan and the Eagle, பக். 2.

[8] Modern Indian Poetry in English, பக். 5.

எழுதுவதை நிறுத்திக்கொள்ளவேண்டும் என்பதை ஏற்கத்தான் வேண்டும். ஆங்கிலக் கவிதைகளை எப்படி எழுதவேண்டும் என்ற நுட்பத்தைப் பலர் அறிவதும் இல்லை.

இறுதியாக, அனைத்துக் கலைகளும் சுதந்தரமானவையாகவும், தடைப்படாதனவாகவும் இருத்தல் வேண்டும் என்று இருக்கும் போது, ஒரு நாட்டையும் ஒரு மொழியையும் பிணைக்கின்ற, தொடர்புபடுத்துகின்ற இந்திய ஆங்கிலக் கவிதை என்ற முத்திரை ஒன்று தேவைதானா என்று சிலர் ஐயுறுவர். தம் சுதந்தரத்திற்குள்ள தடைகள் அனைத்தையும் விரும்பாத ஒரு பாடற் பறவையான சரோஜினி நாயுடு இந்திய ஆங்கிலக் கவிஞர் வரிசையில் இடம் பெறத்தக்கவர் அல்லர் என்பது உறுதி. ஈட்ஸ் அவர்களை ஐரிஷ் ஆங்கிலக் கவிஞர் என்றோ அல்லது தாமஸ் அவர்களை வேல்ஷ் ஆங்கிலக் கவிஞர் என்றோ ஒருவரும் அழைப்பதில்லை. சரோஜினி நாயுடு குதூகலம் நிறைந்த உயிர்த்துடிப்பு மிக்க மனித இயல்புகளால் தம்மைத் தாமே உருவாக்கிக் கொண்டவர்; சக்தி வாய்ந்த ஒருவர்; அவர் ஆரோக்கியத் தன்மையற்ற விருப்பு வெறுப்புகளின் அறிகுறிகள் கொஞ்சமும் பிடியாத வாழ்க்கையுடையவர்; வாழ்வில் ஆரோக்கியமான பரந்த நோக்குடையவராக விளங்கி வலியையும் துன்பத்தையும் வென்றவர். இன்று இந்திய ஆங்கிலக் கவிதைகளை எழுதி, மிக வேறுபட்டவராக விளங்குபவர்களின் கூட்டத்தின் ஒரு பகுதியாகத் தம்மை இனம் பிரித்துக் காட்டுவதை, அவர் சம்மதிப்பாரா? அக்கவிஞர்கள் அடிக்கடி தம்மை, சரோஜினியினும் உயர்ந்த கவிஞர் என்று கருதிக்கொள்கின்றனர். அவர்களில் சிலர், 'கொச்சை லாகிரி'க் கவி என்று சரோஜினியின் கவிதைகளை அழைக்கிறார்கள். அப்படியே இருக்கட்டும். சரோஜினியும் டோருதத்தும் ஸ்ரீஅரவிந்தரும்—வேறுபட்ட மரபுகளில், காலங்களில் எழுதிய இவர்களைப் போன்ற அனைவரும் அப்படியே இருக்கட்டும். அவர்கள் தமக்குரிய இடத்தினைத் தம் வாழ்வில் சமைக்கட்டும். ஆனால் எவரும் அவர்களுக்கென்று ஒரு முத்திரை அல்லது சின்னத்தையிட்டு அவர்களுக்குரிய சுதந்தரத் தன்மையைக் குறைவுப்படுத்தத் தேவையில்லை.

## 17. கவிதையும், தத்துவமும்

சரோஜினி நாயுடு, தமது கவிஞர் வாழ்க்கையின் தொடக்கக் காலத்தில், ஆங்கிலக் கவிதை வரலாற்றில் தம்மைத் தாமே ஒரு சிலையாக வடித்துக் கொண்டார். ஓர் இந்தியர் ஆங்கிலத்தில் எழுதினார் என்பது தோன்றாமல், அவருக்கு ஆங்கிலமே மிகப் பொருத்தமான வழியாக அமைந்தது. அந்தப் பேரறிவில் அவர் மேம்பட்டார். அவர் எவ்வாறும் இந்தியாவுக்கு மாறான இயற்கையுடையவர் அல்லர். தூய இந்தியத் தன்மையுடைய எழுதுகோல் கொண்டு அவர் தம் நாட்டைப் பற்றி எழுதினார். நாட்டுப் பற்றுடைய மகளான அவர் தம் நாட்டை மிக விரும்பினார்; அவருடைய பெரிய நாட்டின் இணைப்புச் சக்தியும் ஆயினார். இக் குறிப்பினை மிக அழுத்தமாக வற்புறுத்தக் கூடாது. ஆங்கில வாசகர்கள் அவரைப் பெரிதும் போற்றினர். இப்பொழுதும் அவருக்கோர் இடம் ஆங்கில இலக்கியத்தில் உள்ளது. அவர் எழுதிய சில ஆன்மிக உருவகக் கவிதைகளில் உள்ள அவரது உண்மையின் நயம் விரைந்து பாராட்டப்பட்டது. ஆங்கில ஆன்மிகக் கவிதைகளின் ஆக்ஸ்போர்டு நூல் தொகுப்பில்[1] எப்போதும் ஒளி தந்து அவர் வாழ்கிறார். இந்தத் தொகுதியிலுள்ள சரோஜினியின் பாடல்கள், அவர் ஆங்கில இலக்கியத்தில் இடம் பெற்ற உண்மையை எடுத்துக்காட்டி நிலைநாட்டப் போகின்றன.

இந்த நூலில் உள்ள அவர் தம் மூன்று கவிதைகளில் முதலாவது:

### ஆத்மாவின் பிரார்த்தனை

''குழந்தைமையின் எக்களிப்பில் கோமானே
  உனைக்கேட்டேன்;
பேரருளே உன் மூச்சைப்பெய்தென்னை உருக் கொடுத்தாய்;
தெள்ளத் தெளிவாகச் செப்பிடுவாய் நாயகனே!
உயிர்ப்பின் மரணத்தின் உட்பொதிந்த உன்விதியை
உவகை, துயரமிதன் ஒவ்வொன்றின் மதுவினையும்
நான் பருக வழங்கிடுவாய்
நித்தியமாம் நின்கரத்தால் நீ உணர்ந்து வழங்கும் எலாம்
விடாய் தணியா என் ஆன்மா வேகத்தில் அறக்குடிக்கும்
உலகத்தின் மிகப்பெரிய உவகையெலாம் கசப்பெல்லாம்

[1] Oxford Book of English Mystic verse

உறப்பருகி விடாய் தீர்ப்பேன்; ஒரு துளியும் விடமாட்டேன்
உவகை, துயர்ச்சுமைகள் ஒன்றையும் நீ ஒதுக்காதே.
வெற்றிப் பரிசோ வெறுந்துயரோ ஒன்றனையும்
விட்டு வைக்க வேண்டாம் நீ
வேண்டுகிறேன் உன்றனையே!
காதலுக்குள் உட்புகுந்த காதைகளைச்
சவக்குழியின் தனியறிவின் மர்மமெலாம்
வழங்கத் தவறுதே! வழுத்தியுனை வேண்டுகிறேன்
தணிவாகப் பேசிடினும் தயக்கமில்லை உன் பதிலில்:
'குழந்தாய் உன் பிரார்த்தனைக்குக் குளிர்ந்து
செவிசாய்ப்பேன்
தோல்வியே அறியாத தூய நின்றன் உயிர்ப்புணரும்
பெருங்களிப்பின் பரவசத்தை அருந்துயரை அனைத்தையுமே
களிப்பைப் புகழ் மதுவைக் கடைசித்துளி வரையில்
வற்றக் குடிக்க வல்ல வரம் கொடுத்தேன் உன்றனுக்கே.
காதல் உன்னைச் சுட்டெரிக்கும் கனல்கக்கும் தீச்சுடல் போல்
மண்டும் துயர் நெருப்பில் மாசற்ற பொன்னுவாய்;
பாசத்தில் ஏறி நின்ற பழங்கறைகள் விலகி விடும்;
குலையாத உன்னுயிர்ப்பின் குருட்டுப் பிரார்த்தனையில்
விடுதலையைத் தேடுவை நீ; வேட்கை உணர்ந்த மதன் நான்.
பாவமன்னிப்பினிலே பலநாள் கடந்து நொந்து
என் அமைதி கூட்டுகின்ற எளிய ரகசியத்தை
நானுனக்குச் சொல்கின்றேன்.
ஏழுமலை தாண்டி எண்ணரிய சிகரத்தில்
நின்று குனிந்துன்றன் நினைப்பையுற்றுக் கேட்கின்றேன்
விரைந்திட்ட என் கருணை வித்தையினைக் கற்பிப்பேன்
மூண்ட இந்த வாழ்க்கை ஒரு முப்பட்டைக் கண்ணுடி
என் ஜோதி இதில் பாய்ந்தால் ஈது வாழ்வு
நீண்ட என்றன் எழில் முகத்தின் நிழல்வீசும் மறுபுறத்தின்
இச்சாயை தான் சாவு

அவருடைய தன்னுணர்ச்சிப் பாடல்கள் சிலவற்றை விட அதன் யாப்பு மிக எளியது. அவர் தம் நான்கு அசைகளைக் கொண்ட அடிகள் அனைத்தும் அவற்றின் எளிமை காரணமாக மிக ஆற்றல் உடையன. வேறுபட்ட அவருடைய வேறு சில பாடல்களின் ஒளிநய ஓட்டம் ஒன்றுடன் ஒன்று மிகுதியாகப் பலமுறை இடறும்; ஆயினும் இதில் ஒலிநய அமைதி அவற்றை விட மிக இயல்பாக உள்ளது. ஆன்மாவின் பிரார்த்தனையில் உள்ள ஆன்மிகத் தன்மை தெளிவானது. கடவுளின் குரலை அவர் உண்மையாகவே கேட்டார். கடவுள், அவர்தம் அமைதியின் இரகசியத்தை

அவருக்கு உணர்த்துகிறார். தோற்றம் தெளிவானது. ஆனால் அது எப்போதும் பிறப்பு இறப்பினைச் சுற்றிச் சுழல்கிறது.

ஆங்கில ஆன்மாநுபவக் கவிதைகளின் ஆக்ஸ்போர்டு நூல் தொகுப்பில் தமது இரண்டாம் கவிதையில் சரோஜினி நிலையான அமைதியை மீண்டும் பெறுகிறார். அது அவரை உலகின் குழப்பங்களிலிருந்தும், சச்சரவுகளிலிருந்தும் விடுவிப்பதாக அமைந்துள்ளது.

மாந்தர் கூறுவர்:

''அச்சமும் வெறுப்பும் நிறைந்த திவ்வுலகம்;
ஓய்வொழிவற்ற ஊழெனும் அரிவாள்
பரிதாபமற்ற பற்களால் பற்றிக்
கடுவினைப் பயனும் கதிர்மணி அரிந்திட
அறுவடை வயலாய் அமைந்ததிவ் வாழ்க்கை;
ஆனால் நானோ அமைந்த இப்பிறவியில்
இனியதோர் ஆன்மா ஈதுஎன் எக்களிப்புப்புடையேன்;
கதிர்மணி அசையும் கழனி மாடங்களில்
உச்சியில் ஏறி நான் உற்று நோக்கு கையில்
புதிய நின் காலைப் பொன்னுதயத்தின்
வைகறை வெள்ளியின் வனப்பில் திளைப்பேன்;
இந்த வையகத்தின் இச்சையும் களிப்பும்
காண்கையில் ஏன்யான் கவலையில் ஆழ்வேன்?
மாலைவேளையில் மயக்குநின் அலையிடை
வீடு திரும்பும் வெண்புறாக் கூட்டத்தின்
வெள்ளிச் சிறகில் விரிந்திடும் அழகொளி
காண்பார் யாரே!
ஆரவாரத்தில் அலைப்புறும் உலகத்
துயரினைக் கண்டு நான்துயருறுவேனோ?
சாத்விகம் என்னும் சாந்திக் கதிர்களின்
மெல்லிய மணிகளை மேதகச் சேர்த்துக்
களஞ்சியம் குவித்துக் கதிர்ஒளி வீசியென்
சிந்தனைக் கனலிடைத் திருவருள் பதித்தாய்;
உலகத்துயரில் உலைவுறுவேனோ?
விதியின் தமோ குண வேதனை என் செயும்?
வேதனை நிறைந்த விசனத் தனிமையின்
பயங்கரம் கண்டு பயப்படுவேனோ?
சுடுகாட்டமைதியின் சுருண்டெழும் அச்சம்
என்னையென் செய்யும்?
என்றன் இன்ப இதயம் உன்றன்
திருவடித் தேனினைத் திளைத்துப் பருகியது.

என்றும் வாழும் இனிய பரவசத்தின்
உள்ளுறை மதுவே! உன்னைப் பருகினேன்
நித்தியத் துள்ளுறை நின்மலர்ச்சாறே!
துயரெலாம் என்னைத் துயருறச் செயுமோ!''

காட்சிகள் பொருத்தமாக உள்ளன. சரோஜினி தம் சாளரத்தின் வெளியே நோக்கியவாறு, பொன்னிற ஒரியோல் பறவையுடன் ஓர் உலகில் மிகமிக உயரப் பறந்து, 'அழிவற்ற தன்மையின் அந்தரங்கச் சாற்றை'ப் பருகி, அதில் முழுவதும் நனைவதை ஒருவர் காணலாம். இது ஒரு கருத்தாழமிக்க, விரும்பத்தக்கக் கவிதை. ஆன்மிகச் சிறப்பு மிக்க ஆங்கிலக் கவிஞர்களின் நேர் இதயத்திற்கே சரோஜினியை இது அழைத்துச் செல்கிறது; இதைப் போலச் சிறப்புடன் சில கவிதைகளையே அவர் எழுதினார் என்பதற்கு நாம வருந்துகிறோம்.

மூன்றாவது, இறுதியானது; மற்றொருவரின் அநுபவம், புத்தரே அநுபவித்த அநுபவம் அது.

புத்தர் பிரானே! தாமரைத்தவிசில் நீ
அரிதுயில் விழிகளில் அமைதி சேர்கையில்
அறியொணுச் சொல்லொணு அழிவிலா உண்மையை
உள்வளர் ஆனந்த உவகையைக் கொண்டனை;
அதன் ரகசியத்தை அறிவிப்பாயோ?
எங்கள் ஆர்ப்பினுல் எட்டாழியாதது!
உலகமாந்தரின் கலகத்தை அறுத்த
எத்தகைச் சாந்தியின் சக்தியைக் காட்டினை!
எங்கள் பாதையில் எழுங்குழப்பங்கள்
சந்தடி போரிடை சாந்தியைப் பரப்ப
நித்திய மாறுதல் நெடுங்காற்று வீசும்;
பிறவாநாளைப் பெருந்துயர்க் கூட்டம்
கழிந்த நேற்றைக் கவலைகள் மாற்றும்;
கனவுகள் விதைத்தோம்; கனவுகள் விளைந்தன;
கலகம் பின்னே கலகம் தொடர்வன
வாழ்வு பின்னிய வண்ணப் பின்னலை
மரணம் பிரித்தது.
வாழ்வில் தொடர்ந்த எம் வருத்தம் வெம்மைகள்
எங்கள் பெருமிதத்து இனிய மர்மங்கள்
அழிந்த சிந்தனைச் சிதறல்கள்; ஆசைத்
தோல்விக்களத்தில் துயர்விலை கொடுத்து
அரும்பாடு பட்டே அறிந்த பாடங்கள்
எத்தனை எத்தனை எத்தனை அநுபவம்?
மலருமுன் சரிந்த மலர்கள் எத்தனை?

கனியுமுன் சிதைந்த கனிகள் எத்தனை?
எனினும் நின்றன் இணையிலாப் பேருய்த்
தருமம் மலர்ந்திடு சாந்திக்கு ஈடிலை
பங்கயத் தவிசார் பகவான் புத்தரே!
பயனிலாக் கைகளால் பயன்பெற முயல்கிறோம்;
எட்டாக் கனவுகள் எம்முன் வளர்க்கிறோம்;
தள்ளாடும் கால்களில் தடுமாறி நின்றுயாம்
ஆழும் நம்பிக்கை அடங்கிய நிலையில்
தெய்விகம் உயரும் சிகரங்கள் ஏற
இன்னும் முயல்கிறோம், இளைப்பில் தவிக்கிறோம்.
ஆனந்த வீட்டை அவாவிடும் எங்கள்
ஆத்மப் பசியினை அடக்கவும் கடக்கவும்
இன்றெமக் கியல்வ தன்றுகாண்.
அந்த முடிவிடம் தேவா!
வழியால் நீள்வது; வழுக்கிச் செல்வது
மோகனப் படிகளை முன்னின்று காட்டி
மயக்கி மறைவது; மாயாத் தவமது.
கழியும் வாழ்வில் அழியும் கணந்தொறும்
நித்திய சத்தியின் தத்துவம் அமையும்
தாமரைத் தவிசில் தவழும் நிர்வாணமாம்
அறிவில் அகப்படா அரியமாப் பெரிய
சாந்தியைச் சாருநாள் சமைவதும் என்றோ?

முன்னைய வெளியீடுகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு, ஆங்கில ஆன்மாநுபவக் கவிதைகளின் ஆக்ஸ்போர்டு தொகுப்பு என்ற நூலில் வெளியிடப்பட்டுள்ள இம்மூன்று பாடல்களே சரோஜினி எழுதிய உருவகம் அல்லது ஆன்மிகப் பாடல்கள் என்பது இல்லை. உண்மையில், அவரது மூன்று சிறிய தொகுதிகளில் வாழ்க்கையின் ஆழ்ந்த தத்துவங்களும் மற்ற உலகக் காட்சிகளும் அங்கங்கே காணப்படுகின்றன.

அவர் இங்கிலாந்தில் இருந்தபோது சைமன்ஸ், கோஸ்— ஆகிய அக்காலக் கவிஞர்கள், திறனாய்வாளர்களின் கூட்டத்தில் மிகச் சரளமாகப் பழகினார்; மற்றும் (ரைமர்ஸ் கிளப்) கவிபுனை வோர் சங்க அங்கத்தினர்களோடும் பழகினார். அங்கு அவர் சொற்கள் சீராக இருத்தல்வேண்டும் என்பதை அறிந்திருக்கலாம். ஏனெனில், அவர் 'சொற்கள் தொடர்பான, நுண்ணிய ஆற்றலை யும் மரபுத் தொடர்களிலும்,' ஒலிநயத்திலும் உயர்திறனையும் உறுதியாகப் பெற்றார். அவை இல்லாமல், அவர் அவரது கற்பனை களையும், அநுபவங்களையும் இனிய பாடல்களாக மாற்றியிருக்க

முடியாது.[2] உண்மையில் பல்வேறுபட்ட காதல், உண்மை, நாட்டுப்பற்று, விடுதலை ஆகிய உணர்வுநிலைகளுக்குச் செல்லும் புனிதப் பயணங்கள், கற்பனைகள், கனவுகள் என அவை அமைந்தன. சரோஜினி, தம்மிடமிருந்து கிளர்ந்தெழுந்த செஞ்சொற்களால் உந்தப்பெற்று, உயிர்த் துடிப்பினைப் பெற்ற ஆன்மிக அநுபூதித் திளைப்பில் தாமே தோன்றிய உற்சாகம் செறிந்த உணர்வுடைய அநுபவங்கள் இவை. கவிதைச் சிந்தனையை ஒரே தொடர்ச்சியாக அமைக்க அவர் முயல்வதில்லை. தூக்கணங் குருவிகள் மெல்லப் பறத்தலைப் போன்ற இனிய கவிதைகளை அவர் இயற்றினார். இதில்தான் அவர் மிகுந்த வெற்றியையும் பெற்றார். மனிதத் தன்மையையும், தன்னையே இழந்து, தன்னையே அர்ப்பணிக்கும் ஒரு பெண்ணின் தெய்வத் தன்மையுடைய காதலையும் பிணைக்க முயன்று, 'ஒடிந்த சிறகு', 'கோயில்', 'காதலின் புனிதப் பயணம்' போன்றவற்றில் இருப்பதைப் போன்று ஒரு தத்துவக் கருத்தை அமைக்க முயலும்போது அவர் படிப்பவரைத் திருப்திப் படுத்துவதில் மட்டும் அமைவதில்லை. முன்னரே எடுத்துக்காட்டிய படி, கருத்தை வற்புறுத்தி ஈர்க்குமளவு அவர் தம் மனித உணர்வுகள் பொருத்தமாக அமைகின்றன.

இறக்க விரும்புவதை அவர் தொடர்ச்சியாக வெளியிடுகிறார். ஆனால் எலியட் அவர்களின் ஜெராண்டியன் போலப் போதிய ஆழம் அதில் இல்லை.

எலியட் அவர்களின் சொற்கள் உரையாடற் போக்குடையன. வாசகரைத் தமது தன்னம்பிக்கையில் ஒன்றச் செய்து அவர் உடன் அழைத்துச் செல்கிறார். சரோஜினி இறப்புடன் நிகழ்த்தும் உரையாடலில் அதைப் போன்ற காட்சிகளைப் பதிக்கத் தவறிவிட்டதாகத் தோன்றுகிறது. அவர் தமது கடந்த காலத்தைச் 'சூன்யமாகவும்', 'பயனில்லாமலும்' கழித்தார்; ஆனால் இதற்காக எதையும் விட்டுக்கொடுக்கவில்லை. 'விதிக்கப்பட்ட செயல்களை' அடைவதற்கு முடிவெடுத்தார். அவரது 'தப்பாத பிரகாசத்தின் இடையில் நிலையான துன்பம்' படிந்திருப்பதேன்? அவர் 'இறப்பை நெருங்கியதால்' அதன் சாயல் உங்களைப்பற்றியதுதான் இதற்குக் காரணமோ? எனக் கோகலே ஒருமுறை அவரைக் கேட்டார். அவர் அதற்கு 'இல்லை; நான் வாழ்க்கைக்குச் சமீபமாக வந்துவிட்டேன்; அதன் நெருப்பு என்னை எரித்துவிட்டது' எனப் பதிலிறுத்தார். ஆனால் டி. எஸ். எலியட் மிக எளிமையாக வரைந்த மனிதத் தன்மையின் பொருத்தமான வடிவம் இதில் இல்லை. வாழ்வின் பல தடைகளை வெல்லுதல்வேண்டும் என்ற சரோஜினியின் சொந்த வேட்கை போதுமளவு நிறைந்திருந்தாலும்

[2] Indian Writing in English, பக். 175.

அவரது கவிதையோட்டம் வாழ்வில் எப்போதும் உண்மைத் தன்மையுடையதாக இல்லை.

## 2

சரோஜினியின் பாடல்கள் மிகப் பாராட்டப்பட்டன. 1905-இல் தங்கத் தலைவாயில் முதல் முறையாகப் பதிப்பிக்கப் பட்டது. வில்லியம் ஹீன்மன் அவர்களால் 1906, 1909, 1914, 1916 ஆண்டுகளில் (இருமுறை) தொடர்ச்சியாக மீண்டும் பதிப் பிக்கப்பட்டது. ஓர் இளைய இந்தியப் பெண், தான் கற்றுப் போற்றிய வேற்று மொழியில் அமைந்த பாடல்களைக் கொண்ட, அதிக விற்பனையாகும் நூலை வெளியிடுவது என்பது ஒரு குறிப்பிடத் தக்க விந்தையே. 1905-இல் பதிப்பிக்கப்பட்ட பாடல்களை அவர் எழுதியபோது, அவர் பதினேழுக்கும் இருபத்தாறுக்கும் இடைப் பட்ட வயதுடையவராக இருந்தார். இந்தத் தொகுதியிலிருந்து தான் 'தாமரையில் அமர்ந்திருந்த புத்தருக்கு' என்ற பாடல் ஆக்ஸ்போர்டு தொகுப்பில் அமைந்த ஆன்மாநுபவக் கவிதை நூலில் சேர்க்கப்பட்டது. அவரும் மிகச் சிறந்த ஆங்கிலக் கவிஞர் வரிசையில் சேர்ந்தார். 'தி மாடர்ன் மியூஸ்' மேற்கண்ட அப் பாட்டை மீண்டும் பதிப்பித்தபோது அந்த இளைய இந்தியக் கவிஞருக்கு மீண்டும் ஒரு பெருமை கிடைத்தது. தங்கத் தலைவாயி லின் பாடல்கள், 'வேம்பின் இடையில் நடனமிடும் விசித்திரமான மின்மினிகள் என்று கருதப் பெற்றுக் கைவிடப்படவுல்லை. முன்னரே எடுத்துக்காட்டியபடி, இங்கிலாந்தில் அவை மிகச் சிறந்த பாராட்டுக்களைப் பெற்றன. அப்போது இருந்த சிறந்த கவிஞர் களும்கூட இந்த விந்தையான கற்பனை மிகுந்த இந்தியப் பெண்ணின் கவிதைகளை விரும்பினர். ஒரு திறனாய்வாளர், ''இந்தக் காட்சிகள் கீழைத்திசைக்கு உரியன; இது உண்மை. ஆனால், இவற்றில் அடிப்படையான மனிதத் தன்மை சிறிது உள்ளது. அது ஒரு சிறந்த பாட்டு, கீழைத்திசை அல்லது மேலைத் திசை என்று பகுத்தறியாது என்பதை அது நிலைநாட்டுவதாகத் தோன்றுகிறது'' என்றார்.

சரோஜினி நாயுடு எழுதுவதற்குத் தமது உலகத்தையும், தமது காலத்தையும் முழுமையாகப் பயன்படுத்தினார். வெற்றியும் பெற்றார். ஏனெனில் கவிஞர்கள் இந்த உலகத்தை அச்சிட்ட பக்கங்களில் வரைந்து காட்டவேண்டும். ஆனால், அவர் பல அவலப் பழக்கங்களையும், நிகழ்ச்சிகளையும் தமது கவிதைப் பொருள் களாகப் பயன்படுத்தினாலும், அவர் தம் உலகம் வாழ்க்கையின் உறுதியான யதார்த்தக் கோலங்களாக மட்டும் இல்லாமல் கற்பனை

உலகமாகவும் இருக்கிறது; அவரது தன்னுணர்ச்சிப் பாடல்களைப் பற்றிக் கூறினால் ஏதாவது ஒரு செயற்கைத்தன்மை எப்போதும் உள்ளது.

ஜே. பி. ஈட்ஸ் அவரை ஒரு 'தூய கற்பனையாளர்' என்று அழைத்தார். எட்வர்ட் தாமஸ், 'அவர் தமது சிறப்பியல்புகளை நிறைந்த அளவு பெற்றிருக்கிறார்' என்றார். மேலும் ''காலப் பறவை'' 1912-இல் தோன்றியபோது அவர் 'ஓர் அசாதாரண ஜார்ஜிய வெளித் தோற்றமும் உள்ளுறை மகிமையும் அடைந்தார்'' என்றார். மற்றொரு திறனாய்வாளர், அவர் ஒரு பக்கத்தில் மறக்கமுடியாத மரபுத் தொடர்களை விண்மீன்களைப் போலப் பரப்புகிறார். இருந்தாலும், ஒரு பாடலின் முடிவில் சிகரமான அழகைத் தேக்கும் விதத்தை அவர் அறிவார். அவர் இந்தியாவின் 'எலிஸபெத் பாரட் பிரௌனிங்'[3] என்று வரையறுத்தார். சரோஜினியின் பாடல்களை டெனிஸ் ஸ்டோல், இ. எம். பாஸ்டர், ஹெர்மன் ஊல்டு, காஸ்வர்த் என்பவர்களும் கூட அநுபவித்தனர்.

சரோஜினியின் மொழி பளிங்குபோலத் தெளிவானது. அதற்குப் பல விளக்கங்கள் தேவையில்லை; ஒரு குழந்தையும் அவற்றைப் படிக்கலாம்; புரிந்துகொள்ளலாம். ஆனால் அக் குழந்தை இந்தியச் சூழலில் வாழவேண்டும். அத்தகையவருக்கு அனைத்தும் தெளிவாகும். சரோஜினி எந்தச் சூழ்நிலையிலும் தெளிவற்ற தன்மையில் இருக்க முயல்வதில்லை. ஆகவே, தமது எழுத்துச் சுதந்தரத்தால் எல்லா ஓசை, ஒலிநய வடிவங்களையும் தெளிவான உணர்வுக் காட்சிகளையும்கூடச் சிதறப் பரப்பிய ஜார்ஜ் காலப் பகுதியுடன் அவர் பொருந்தி வரவில்லை.

1911—12-இல் தமது புதிய கவிதைப் பகுதியைத் தோற்றுவித்த ஜார்ஜ் காலப் பகுதியினர் மறுமலர்ச்சி அல்லது அபூதக் கற்பனைக் காலப் பகுதிகளைப் போலப் புகழ்பெற்ற மற்றொரு கவிதா சகாப்தத்தை நிறுவ விரும்பினர். மந்தமான மரபுநிலை மிகுந்த விக்டோரியா எட்வர்டு சகாப்தப் பாடல்களின் காலப் பகுதிக்குப் பிறகு இந்த மறுமலர்ச்சியுடன் அவர்கள் திருப்தியடைந்தனர். இருந்தபோதிலும், கனவுகளைக் கற்பனை செய்பவர் இந்த ஜார்ஜ் காலத்தவர். இந்த நோக்கத்தில் இப்பிரிவில் ஒருவராகச் சேரச் சரோஜினி உறுதியாகத் தகுதி பெறுகிறார். இருபதாம் நூற்றாண்டின் இருபதுகளைச் சேர்ந்த இந்தப் புதிய கவிஞர்களின் போக்கில் முதல் உலகப்போரின் செல்வாக்கு இன்னும் ஏற்படவில்லை. அப்போதுதான் அந்தப் பிரிவு தொடங்கப்பட்டது—காலம் வசந்த காலம்; காற்றும் தூய்மையானது; காலை மணி ஏழு; இந்த இளைய

[3] Indian Writing in English, பக். 176.

ஆர்வம் மிக்க கவிஞர்கள்மீது, குழப்பம் மிகுந்த எதிர்காலத்தின் சிதறல்கள் இதுவரை விழவில்லை. வீழ்ச்சிக் காலப் பகுதி கடந்தது; தமது தளர்ந்த வேற்றுலகத் தோற்றங்களுடன் உருவகக் கவிஞர்களும் மறைந்தனர். இங்கு ஒரு புதிய வாழ்க்கை. ஒரு புதிய சகாப்தம் தொடங்கப்படவேண்டும். அவர்கள் குயில்கள், வானம் பாடிகளைப் பற்றிப் பாடுவர்.

இந்தியாவிலும், விடுதலையின் புத்துயிர் பிறக்கிறது. தொடக்கத்தில் இந்த வசந்தகால உலகைச் சரோஜினி நிறுவினார். கீழ்த் திசைத் தன்மையும், ஆங்கிலமும் இயைந்த ஒரு புதிய கவிதை வடிவத்தைச் சரோஜினி உறுதியாக உருவாக்கினார். எந்த உண்மைக் கவிஞருக்கும் தேவைப்படும் இந்தப் புதிய நடையோடு, அவர் ஒரு புதிய சிறப்பியல்பினைப் படைத்தார். கவிதை மொழி, இவற்றின் வருங்கால வளர்ச்சிக்கு அவர் பாடல் ஒரு பரம்பரைச் சொத்து. அது புத்துணர்ச்சி அளிக்கிறது; தற்சமயம் கலப்படம், விகாரம், கற்பனை வறட்சி, எல்லை கடந்து மிகைப்படுத்தப்பட்ட தன்மை, நவிற்சி இவற்றால் தரம் குறைந்த கவிதையுலகில் அவர் கவிதை புத்துணர்ச்சியை ஊட்டுவதாய், தொடர்ந்து புத்துணர்வை ஊட்டிக்கொண்டிருப்பதாய் அமைந்தது. ஆங்கிலத் திறனாய்வாளர் ஒருவர், அவரை ஒரு புடைவை கட்டிய தற்கால ஆர்னால்டு என்று வெறுமனே கூறிவிடுத்தார். அதற்கு இந்தியத் திறனாய்வாளர் ஒருவர், 'மேத்தியூ ஆர்னால்டு மேலங்கியோ, பாவாடையோ அணிந்திருந்தால் பொருத்தமில்லாதவராக இருப்பாரோ?' எனக் கேட்டார்.

சரோஜினி இங்கிலாந்தில் பெருமையடைந்தது தவிர, ஆங்கில இலக்கியத்தில் ஓர் இந்தியராகவும் திகழ்ந்தார். மேலும் ஜேம்ஸ் ஜாய்ஸ், ஈட்ஸ், சீன் ஓ காசி, ஃபாக்னர் மற்ற ஐரிஷ் அல்லது அமெரிக்க எழுத்தாளர்களோடு ஒப்பிடும்போது, அவர்களது எல்லைகளை அவர் எப்போதும் எட்டியதில்லை அல்லது அக்காலச் சிந்தனை வடிவத்தைத் தோற்றுவித்ததும் இல்லை. எடுத்துக் காட்டாக, ஈட்ஸ் ஓரளவு ஓர் உருவகக் கவிஞர்; ஆங்கில எழுத்தாளர்களை மிகவும் பாதித்த பிரெஞ்சு உருவகக் கவிஞர்களின் எழுத்துக்களை அவர் பின்பற்றினார். ஆனால், உருவகத்துடன் விக்டோரியன் காலப் பிற்பகுதியின் சீர்கேடும் கலந்து வந்தது. உறுதியாக எச்சரிக்கையுடன் சரோஜினி இச்சிந்தனை மரபுகளைப் பின்பற்றவில்லை; எழுத்துச் சுதந்தரம் கொண்ட ஜார்ஜ் கால இயல்பையும் பின்பற்றவில்லை. நம்பிக்கையற்றுக் கண்மூடித்தனமான போக்கில் யதார்த்த சூழ்நிலைகளுக்குச் சரணாகதி அடையும் நிலையில் குழப்பமிக்க காலத்தின் அவலச் சூழ்நிலைகளைக் கருப்பொருளாக்கிக் கொண்டு செல்லும் நவீனக் கவிமரபின் ஓட்டு

மொத்தமான உண்மைத் தன்மையையும் முடிந்த முடிவாகப் பின்பற்றினர் என்று கருத இடமில்லை. ஆனால் அதற்குப் பிறகு இந்தியா தனக்கு உரித்தான சிந்தனை வளர்ச்சிகளையும், தனக்கு நேர்ந்துவிட்ட குழப்பமிக்க புரட்சிகளையும் பெற்றுக் கிளர்ந்தது. புகைவண்டி யந்திரம் தன் பாதையில் எதிர்ப்படும் வளைவுகளையும் திருப்பங்களையும் கவனத்துடன் கண்டு திரும்பி ஊர்ந்து முன்னேறு வதைப் போல அதுவும் ஆங்கிலத்தின் சட்டதிட்டங்கள் வகுத்த படியே தன் எதிர்ப்பட்ட பாதைகளைக் கவனத்துடன் கடந்து நகர்ந்ததாகத் தோன்றுகிறது.'[4]

## 3

சரோஜினி நாயுடு எழுதுவதற்குக் கீழை நாட்டுப் பழங்கதை களையும், புராணக் கதைகளையும் நன்கு அறிந்திருந்தார்; ஆனால் அவர் வருணனைக் கவிதையை எழுத இயலவில்லை. தன்னுணர்ச்சிப் பாடல்களில் தமக்கேயுரிய நிகரற்ற முறையில் படிப்பவரை மகிழ வைக்கவும், கவரவும், மேற்கொண்ட முயற்சியில் இந்தியாவைச் சாதாரணமாகவே அறிமுகப்படுத்தினர். அவர் அடிக்கடி எழுதி யவை படிப்பவரைப் பெருங்களிப்பில் ஆழ்த்தின; சிறப்பாக நாடோடிப் பாடல்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய 'பல்லக்குச் சுமப்போர்' பாடல் போன்ற தன்னுணர்ச்சிப் பாடல் கள் பெருமகிழ்ச்சி தந்தன.

சில வேளைகளில், மாமரம் அல்லது தென்னை மரத்தோப்பு களின் இடையிலுள்ள கிராமங்களில் கொட்டப்படும் மேள ஒலியை அல்லது மிருதங்கம், தபேலாவின் கலப்பு மிக்க ஒலியை நாம் கேட்கிறோம். மீனவர் கூட்டத்தினர் தமது கிராமங்களில் துயிலுணர்த்தப்படுகிறார்கள். அவர்கள் ஒரு விழாவிலோ அல்லது திருமணத்திலோ ஈடுபட்டிருக்கலாம்; அவர்கள் துயிலுணர்தலோடு மேள ஒலி கேட்கிறது.

''எழுமினோ சோதரர்காள் எழுமினோ! வாழ்த்திசைக்கும்
எழில்பூத்த வானவெளி இளங்காலைக் கதிரொளிக்கே;
ஒழிவின்றி இரவெல்லாம் உறங்காத கைக்குழந்தை
ஓய்ந்ததுபோல் காற்றசைந்து ஒளித்தோள்மேல் கண்
ணுறங்கும்;
தழுவும் கரையோரம் தளையவிழ்ப்போம் கட்டுமரம்;
தாவிவலை சேகரிப்போம்; தண்ணீரில் சஞ்சரிப்போம்.
உழுவோம் அலைமீது உந்திவிழும் செல்வங்கள்
உற்றதெலாம் பற்றிடுவோம் உயர்கடலின் புத்திரர் நாம்.''

[4] The Golden Treasury of Indo-Anglian poetry by V. K. Gokak, p. xxii.

பிறகு, கிராமக் குடில்களுக்குள் எட்டிப் பார்த்து அவர் தமது தாலாட்டுப் பாடல்களைப் பாடுகிறார்.

கிராமக் குடிசைத் தொட்டில் பாட்டு

*மணம் பரப்பும் நந்தவனம்*
*மணிபிடித்த நெல்வயல்கள்*
*தாமரையின் பூமலர்ந்த தமனியத்து நீரோடை*
*இவற்றினூடே கண்தேடி*
*எடுத்துவந்த பனித்துளிகள்*
*முத்தாரமாக்கியொரு மோகனமாம் சிறுகணவை*
*உனக்கேநான் கொண்டு வந்தேன்.*

*(ஒளிப்பூவே கண்வளராய்!)*

கவர்ச்சியான உணர்ச்சிமிக்க சிறு இசைப் பாடல்களில் கிராமப் பழக்கங்கள் சித்திரிக்கப்பட்டுள்ளன. திரைக்குள் மறைந்து விளங்கும் ஒதுக்குப்புறமான வீடுகளில் மாதர்கள் உறையும் அந்தப் புரங்களிலும் அப்பாடல்கள் விரைந்து நுழைகின்றன.

*''மகிழ்கோகிலம் கூவும் மருதாணி மலர்ப்பரப்பில்*
*விரா! விரீ! விரா! விரீ!*
*விரைந்திடுவீர் கன்னியர்காள் விரைந்து புறப்படுவீர்!*
*மருதாணிமரம் சொரிந்த மணித்துளிர்கள் சேகரிக்க*
*மணமகளின் கண்ணிமைக்கு மங்காத சிவப்புண்டு;*
*பவள இதழ் புன்னகைக்குப் பாக்கின் சிவப்புண்டு;*
*ஆனால் கவினார்ந்த குமுதம்போல் கைவிரல்கள் கால்களுக்கோ*
*மருதாணிச் சிவப்பின்றி மறுசிவப்பும் பொருந்திடுமோ?*

அடிக்கடி அவர் வெளிப்படுத்தும் துன்பச் சாயலைத் தவிர புது வசந்தம் காற்றிலும் மலரிலும் வண்ணத்திலும் அமைந்து காணப் படுகிறது; வசந்த மணத்திலும் அல்லது மழையால் புதியதாகக் கழுவப்பட்ட நிலத்திலும்—அவரது கவிதையில் எப்பொழுதும் இழையோடிக் கொண்டுதான் இருக்கிறது.

''இளவரசி ஜெலு உன்னிசா தன் அழகில் தான் வியந்து பாடும் கீதங்கள்'' வரிசையில் அவர் பாடும்போது அவரது கற்பனை இந்தியக் கற்பனைக்கு, அல்லது பாரசீகக் கற்பனைக்கு நிகரானது.

தமது வடிவங்களுடன் ஒருங்கிணையும் பாங்கில் உமர்கயாமும் அவர்மீது தம் செல்வாக்கைச் செலுத்தினார். ஆனால் சரோஜினி பாரசீகத்திலும் உருதுவிலும் சிறந்த புலவர். இஸ்லாமிய உலகைப் பன்னிப் பன்னி வடிவாக்குகிறார்.

ஆனால் சரோஜினி பாரசீக அல்லது உருது அல்லது இந்திக் கவிஞர்களைப் போல ஆழ்ந்த தத்துவத்தை அமைப்பதற்கு நிகராகத் தமது வளம் மிக்க கவிதைமூலப் பொருள்களின் கருவூலத்திலிருந்து எடுத்து வழங்கிய செழிப்பான உருவகங்கள், உவமைகளின்மூலம் தமக்குத் தாமே திருப்தி பெற்றார்.

''சொர்க்க மகன் தெய்வச் சுடர் நெற்றித் திலகம்போல்
மிக்க ஒளி சாந்தம் மிகு தெய்வதம் சூழச்
சுடர்வட்டப் பொன்னிலவு துலங்குதல் காண்வானத்தே.''

இந்த அடி மட்டும் மிகத் தூய்மையாக உள்ளது. அதை முடிய எழுதத் தமது அனைத்து நாள்களையும் முழுமையும் அர்ப் பணித்திருந்தால், தாம் மேற்கொண்ட கலைகளை மேலும் ஆழ மாகப் பயின்றிருந்தால் சரோஜினி பாடலின் ஆழத்தில் எத்துணை யளவு மூழ்கிவிடுவார் என்று ஒருவர் வியப்படையக்கூடும்.

## 4

சரோஜினியின் கவிதையில் ஓசை, ஒலி நய உணர்வு பெரும் பாலும் மிக நிறைவு மிக்கவை. ஆனால் அவை இரண்டையும் கட்டுப்படுத்தி மிகத் திறமையுடன் கையாள்கிறார். அவரது யாப்பமைதிகள் மிகப் பல; அலகிடுதலில் சில தவறுகள் உள்ளன. குறில் நெடில் ஈரசைச் சீர்களின் அடிப்படையில் அமைந்த யாப்பமைதியின் இடையில் குறலிணை நெடிற் சீரிலான அடியில் பொருத்த விரும்புகிறார். அவரது இன்னிசை வண்ணத்தில் அவர் தவறுவதில்லை. ஒன்றைக் காட்டாகக் காண்போம்.

'களையிழந்த நகரத்தின் கருவழிந்த உருவரைப்பு.
கல்லறையில் அடங்கிவிட்ட கன்னியர்கள் எழிற்சிரிப்பு,
பழம் போரின் வாட்படைகள்; பழமன்னர் முடியணிகள்;
பகட்டில்லா எம் இன்பப் பழம்பெருமைத் துயரணிகள்.''

சரோஜினி அடைமொழிகளை அமைப்பதில் மந்திர சக்தி வாய்ந்த திறனுடையவர்; தொடர்களின் ரத்தினக்கச்சிதமான ஓர் அழகில், புதிய கருத்துக்களும் உணர்ச்சிகளும் செறிந்த ஓர் உலக மாக ஜொலிக்கும் ஓர் அடைமொழியின் ஒற்றை மின்வீச்சில் சரோஜினியை ஒளி பெற்று மிளிரச் செய்கின்ற அவரது நுட்பம் வாய்ந்த மாயாஜாலம் கொண்ட கற்பனை மனோபாவத்தில் அவர் மாபெரும் சக்தி வாய்ந்தவராக அமைகின்றார்.[5]

ஆனால் அவர் பழைய முறைகளில் எழுதுவதில் பரம திருப்தி யடைந்தாலும் தமக்குச் சொந்தமான ஒரு நடையையும், நுட்பத்

[5] Speeches and writings of Sarojini Naidu, p. xviii.

திறனையும் உருவாக்கினாலும், தமது முழுமை பெற்ற சொந்த வடிவங்களால் தாம் மிகுந்த திருப்தி அடைந்தார். சில காலத்திற்குப் பிறகு அவர் எடுத்தாண்ட கருப்பொருள்கள்கூட வறண்டு சுவையற்றுக் காணப்பட்டன. அவருடைய பகட்டலங்காரமான அடைமொழிகள் வரம்பு கடந்த உணர்ச்சி வெளிப்பாடுகளாகி, ஒரு காட்சி, ஒரு தலைவன் அல்லது தலைவி, ஒரு பழக்கம் அல்லது கொள்கை—இவற்றை அளவுக்குமேல் வருணிப்பதாய் அமைந்தன. ஒரு நிலையில் பண்டைக் காலச் சம்ஸ்கிருதக் கவிகளைப் போலத் தெவிட்டும் சுவைப் பிழம்பாகி, யாப்பின் அளவினை இட்டு நிரப்பும் சொற்றொடராய்த் தோற்றமளித்தனவே தவிர, அத்தொடர்கள் இன்றியமையாத் தேவைமிக்க அடை மொழிகளாய்த் தோன்றவில்லை. இந்தியாவின் பாரம்பரியச் சிறப்புடைய தொன்மை வரலாறுகளை அவர் சிறிதளவே பொருட்படுத்தினார்; அவ்வாறு பொருட்படுத்தியபோதும் உருவாக்கிய வீரப் பண்புகளை வரம்பு கடந்த மிகைப்பாடுகளாகவே அமைத்துக் காட்டினார்.

ஒரு தொகை நூலும், சமய நூலுமான 'ஆங்கிலத்தில் தற்கால இந்தியக் கவிதை''[6] என்ற நூலை எழுத்தாளரின் தொழிலகம் வெளியிட்டபோது அது 1947-ஆம் ஆண்டுக்குமுன் வாழ்ந்த சிறந்த புலவர் அறுவரை ஏற்றது. டோருதத், மன்மோகன், கோஸ், சரோஜினி நாயுடு, ஆர்.சி. தத், ஸ்ரீ அரவிந்தர், ஹரீந்திரநாத் சட்டோபாத்யாய என்போர் அவர்களாவர். தாங்கள் தேர்ந்தெடுத்த 'முதல் மொழியான' ஆங்கிலத்தில் அவர்கள் எழுதினர். இருப்பினும், நாம் அறிந்தவாறு அவர்கள் இந்தியர்; அயல் நாட்டினர் அல்லர்; மாறாக அவர்கள் உண்மையான இந்தியர்கள் ஆவார்கள்.

அந்த ஆறு ஆங்கில இந்தியக் கவிஞர்களின் கவிதைகளை விவரிக்கும்படி மேற்குறித்த நூலில் தற்காலக் கவிஞர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டனர். மரபுத் தொடர்கள், வடிவங்கள், தொடர்கள் ஒப்பிடப்பட்டன. பழமையின் பின்னணியில் புதிய கவிஞர்களைப் பற்றிய ஓர் அறிக்கை அமைக்கப்பட்டது. எப்படியோ அந்த ஒப்புமைகள் இல்லாமலேயே அத்தொகை நூல் வெளியிடப்பட்டிருக்கலாம். ''ஆனால் தற்கால அளவுகோலுக்குத் தகுந்தபடி நான் ஏன் எழுதவேண்டும்? நான் எப்படி எழுத விரும்புகிறேனோ அப்படியே எழுதுவேன்'' என்று சரோஜினி கூறுவதை நான் பெரிதும் உணர்கிறேன்.

---

[6] Edited by P. Lal.

## 5

சரோஜினியின் உவமைகள் அனைத்தும் கனவுலகைச் சார்ந்தவை; பெரும்பாலும் சோகம் தழுவியவை. 'இறப்பும் நிகழ்வும்' என்னும் தொகுதியில் உள்ள அவரது தொடக்கக் காலப் படைப்பொன்றில் அவர் கடந்த காலத்தைத் துறவு நினைவுகள் படிந்த மலை முழைஞ்சோடு ஒப்பிடுகிறார். அவரது கடந்த கால வாழ்வை ஒரு கணம் திரும்பி நோக்கினால், துறவியுறையும் மலைக் குகைகளை விடப் பகட்டு நிறைந்த தந்தக் கோபுரங்களையே ஒருவர் காண முடியும். ஏனெனில் அவர் தம் கவிதைகளை எழுதியபோது அவர் சிறுமியாகவே இருந்தார். நிகழ்காலம் என்பது ஓர் ஆன்மா; அது தெளிவற்றது; ஆழமான எதிர்பார்ப்புகளையும் புதிர் படிந்த மனத் துயரத்தையும் தன்னுள் கொண்டது. எதிர்வு என்பது 'புதுமையான முடிவுக்கு ஆளான மணப் பெண்' போன்றது. அவர் மிகச் சிறுமியாக இருந்தபோதே, மறைந்த கனவுகளைப் பாடினார்; அன்புக்குரிய கனவுகள் தகர்க்கப்படவேண்டும்; அவை இறந்துபட்டவை என்று பாடினார். அவர் கவிதை பாடும்போதெல்லாம் பலவீனமுற்றார். அவர் இவ்வுலகத்திலிருந்து தப்பித்து ஓடுவதையே விரும்புகிறார். ஆனால் இவ்வுலகத்தில் எழும் போர்கள், மக்கட் கூட்டத்தின் பூசல்களங்களாக இடம் பெற்று அவரால் தவிர்க்க முடியாத கருப்பொருள் ஆகின்றன. துயரங்கள், இறந்துபட்டவர்கள் பற்றி அவரது குறிப்புகள் அனைத்தும், சரோஜினி நாயுடு, இரட்டை மனோபாவம் கொண்டவர் என்னும் உண்மையையே நமக்குப் புலனாக்குகின்றன. ஓர் ஆளுமையில் மகிழ்ச்சியான நுகர்ச்சியுடன், அதாவது அவர் முழு மனத்தோடு அவர் உலக வாழ்வை நுகர்ந்தார்; ஆழமாக இல்லாவிடினும், மேலெழுந்த நிலையில் அவர் உலக வாழ்வை விரும்பினார். அவரது மற்றொரு ஆளுமை துயரம் நிறைந்த பாவனை உலகத்தை நாளும் தேடிக் கொண்டே இருத்தல். ஆனால் இத்தேடல் வெற்றி பெறவில்லை. அம்முயற்சி அவரை இலட்சியக் கனவுகளிலும் உன்முகமாகத் தன்னையே தேடும் நிறைவேறா ஆர்வச் சிந்தனைகளிலும் செலுத்தின.

அவரது உடற்பிணி அவரைத் தூண்டிக்கொண்டே இருந்தது. பெதும்பை நிலை கடந்த மங்கைப் பருவத்தினராய் அவர் இருந்தபோதும், அவரது மிக நொய்ம்மையான உடலமைப்பு இங்கிலாந்தில் பலரது கவனத்தையும் கவர்ந்தது. ஆனால் துயரம் நிறைந்த உலக வாழ்வைத் தம் துயரம் நிறைந்த கவிதைகளால் அவர் வெற்றிகொண்டார். 'காட்டில்' என்னும் அவரது தொடக்கக் காலக் கவிதைபற்றிக் குறிப்பிடும்போது, 'இந்திய சமூக சீர்திருத்தவாதி' என்னும் ஏடு 1902-ஆம் ஆண்டு பின்

வருமாறு எழுதியது: 'அப்பாடல் கவித்துவ அழகு நிரம்பி வழிவது' என்றும், டோருதத்துக்கு ஒரு பரம்பரை கிடைத்து விட்டது என்பதையும் அப்பாடல் காட்டுகிறது' என்றும் எழுதிற்று. அப்பாடலில் சாந்நித்தியம் கொண்டு விளங்கும் கலையுலக எழில் தேவதை 'முளையில் கிள்ளியெறிந்த மொட்டினை விடவும் அழகு மிக்கது; வேகமாக உயரப் பறக்கும் வல்லாண்மைகொண்டது' என்றும் எழுதிற்று.

இப்பாடல் வரிகளில் பயின்று உண்டாகும் உணர்ச்சிக் கனிவு எல்லார்க்கும் வாய்ப்பதன்று; இயற்கையால் கொடையாகத் தரப்பட்ட (திட்சண்யமான பார்வையும்) நோக்கரிய நோக்கும் நுணுக்கரிய நுண்ணுணர்வும் உடையார்க்கே வாய்ப்பதாகும். இவ்வார்த்தைகள் இக்கவிஞரின் பெருமையைச் சற்றே மிகைப் படுத்துவனவாகத் தோன்றலாம். எனினும் சரோஜினியின் பாடல்களில் ஏதோ ஒரு போதை மயக்கினை ஊட்டும் மாயப் பண்பு கனிந்துள்ளது; வரம்பு கடந்த தன்மை கனிந்துள்ளது. அவையும் பாடல் முழுதும் ஒரு படித்தாக அன்றி ஆண்டொன்றும் ஈண்டொன்றுமாக ஆங்காங்கே காணக் கிடக்கின்றன. கவர்ச்சிகரமான கருஞ் சிவப்புத் திட்டுகளைப் போல் அவை காணப்படுகின்றன. இப்பார்வை மரபு வழியாக அமைந்த வேறு பாடல்களில் காண்டற்கில்லை.

மயானத்தின் தத்துவ மர்மங்களை அறியும் நாட்டத்தில் மெய் வருத்தம் அல்லது உணர்வுப் போராட்டம் இவரது கவிதையில் குறைவுபட்டதாகத் தெரியவில்லை. கடவுளே அவரது பிரார்த்தனைகளுக்கு விடையிறுக்கிறார்; 'எல்லை கடந்த கழிபேருவகைக்கும், மனமுறிவு நிலைக்கும் இடையில் அவரே கவிஞருக்கு ஞான தீட்சை வழங்குகிறார்.' கவிஞர் மகிழ்ச்சியையும், புகழையும், காதலையும், துயரத்தையும் மனமார அநுபவிக்கிறார். சரோஜினியின் உள்ளத்தில் அமைந்து கிடந்த இந்த இரு வேறுபட்ட ஆளுமை அவரை முழு ஆன்மிகக் கவிஞராக ஆக்காமல் சற்றே பின்னுக்கு இழுத்து விட்டது. அவர் கனவுலகில் உயர உயரப் பறந்து போகிறார்; அவை புனிதமானவையா அல்லவா என்பது அவருக்கு ஒரு பொருட்டல்ல; அவர் அப்பயணத்திலிருந்து தாமே திரும்பி வருகிறார். உலகத்திற்கே உரிய துன்பங்களையும் இன்பங்களையும் மனமாரச் சுவைக்கிறார். இந்த இரு வகை ஆளுமையே உணர்ச்சி நெருப்பின் அடிமூலத்தைத் தேடித் துழாவும் ஆர்வலராக இக் கவிஞரை மாற்றியது. சொல்லப்போனால் அப்பாலுக்கப்பாலான ஆன்மிகத் தேட்ட அறிவு அவர் நெஞ்சில் கனலாகவே எரிந்து கொண்டிருந்தது எனலாம்.

அவரது இருவகை ஆளுமை இன்னொன்றுக்கும் காரணமாக அமைகிறது. நாம் அவரை வெறும் தன்னுணர்ச்சிப் பாடல்களைப் பாடித் தீர்க்கிற—அலையலையாய் அருவிபோல் வீழும் சொல்லடுக்குகளில் களிவெறியை ஊட்டுகிற—வெறும் கவிஞராக எடை போட்டு ஒருபுறத்தே ஒதுக்கிவிடவும் அவரது ஆளுமைதான் காரணம்.

'நிலைபேறுடைய பேரமைதிக்கு என் வணக்கம்' என்னும் பாடலில் மேற்கூறிய இருமைப் பண்பு—இரண்டாட்ட நிலை—நன்கு புலனாகிறது. அச்சம், வெறுப்பு, தவிர்க்கவியலாத ஊழ் இவை ஒரு பக்கமாக எதிர் நிற்க, சரோஜினி தம்மை மறந்த பெரும் பேருவகையில் உரக்கப் பாடுகிறார்.

''ஆனால் நானோ அமைந்த இப்பிறவியில்
இனியதோர் ஆன்மா எக்களிப்புடையேன்;
கதிர்மணி அசையும் கழனி மாடங்களில்
உச்சியில் ஏறிவான் ஊற்று நோக்குகையில்
புதியநின் காலைப் பொன்னுதயத்தின்
வைகறை வெள்ளியின் வனப்பில் திளைப்பேன்.''

இந்த இடத்தில், கண நேரத்தில் காலாதீதக் களிப்பினைக் கண்ட கவிஞர் தாகூர் போல் சரோஜினியும் காட்சி தருகிறார். ஒருமணிப் பொழுதில் ஊழிக் காலத்தைக் கண்ட வில்லியம் பிளேக் போல் காட்சி தருகிறார். ஆனால் அவர்களைப் போல அதீதப் பாழ்வெளியில் மூழ்கிவிடாமல் சரோஜினி விரைவிலேயே சுய நனவுலகிற்கு மீண்டும் வந்து விடுகிறார்.

ஒருவேளை பெருங்கவிஞர் வரிசையில் சரோஜினி இடம் பெற முடியாமற் போனதற்கு இந்த இரண்டாட்ட நிலை காரணமாக இருந்தாலும் இருக்கலாம். ஓர் ஆன்மிகக் கவிஞருக்கோ உலகியல் கவிஞருக்கோ இருந்தாக வேண்டிய ஒருமித்த மன அமைதி அவரிடம் இல்லை; எனினும் சரோஜினி கால எல்லையினைக் கடந்தவராகவே இன்றும் விளங்குகிறார்.

## 6

டோருதத் அகால மரணம் அடைந்தவர். அவரது சிந்தனைகள் முதிர்நிலை அடைவதற்கு முன்பே அவர் மறைந்துவிட்டார். எனினும் மிக நேர்த்தியான காலத்தில் அழியாத பாடல்களை அவர் பாடினார். சரோஜினி எவ்வளவோ எழுதுவதற்குரிய அளவு நீண்ட காலம் வாழ்ந்தார். காதல் கனிவு செறிந்த சில பாடல்களைப் பாடியதோடு அவர் நிறுத்திக்கொண்டார். மேற்கூறிய இரு கவிஞர்களுக்கும் இடையே உள்ள ஒற்றுமை யாதெனில்,

இருவருமே இந்திய நாட்டின் இணையற்ற பெண்மணிகள்; இருவருமே தம் கவிதை வெளிப்பாட்டிற்கு, ஆங்கில மொழியை ஊடகமாகக் கையாண்டவர்கள்.

டோருதத் இன்னும் பல காலம் வாழ்ந்திருந்தால் அவர் எவ்வளவோ எழுதியிருப்பார் என்று நினைத்து வருந்தத் தோன்றுகிறது. சரோஜினி விஷயத்தில் இவர் தம் முப்பத்தெட்டாவது வயதோடு எழுத்துலக வாழ்வை முடித்துக்கொண்டு பொது வாழ்க்கைக்கு—அரசியல் வாழ்க்கைக்குப் போய்விட்டாரே என்று வருந்த வேண்டியுள்ளது. கவித்துவத்தின் ஏற்ற இறக்கம் நிறைந்த முகடுகளில் எங்கெங்குச் சென்று சஞ்சரிக்க முடியுமோ—அங்கெல்லாம் சென்று மீண்டவர் டோருதத் என்னும் உணர்வே நமக்கு ஏற்படுகிறது. ஏனெனில் அவர் ஆங்கிலத்தையும், பிரெஞ்சு, சம்ஸ்கிருத மொழிகளையும் ஐயம்திரிபறக் கற்றவர்; ஓர் உண்மையான கவிஞனின் ஆன்மாவைப் பெற்றவர். சரோஜினியைப் பற்றி நினைக்கும்போது நமக்கு ஏற்படும் எண்ணம் வேறானது. 1917-ஆம் ஆண்டிலேயே சரோஜினியின் கவித்துவம் வெளியுலகத்தோடு அவர் கொண்டிருந்த உறவாலோ அல்லது இரு வேறுபட்ட உள்ளப்பிளவினாலோ வற்றத் தொடங்கிவிட்டது. பழமையினின்றும் விடுபட்டுப் புதிய கவிதை உலகத்தோடு அவரால் நிலைத்து உறவாட முடியவில்லை என்று அவரே உணர்ந்திருந்தமையும் ஒரு காரணம் போலும். அவரது மனத்தில் இருந்து கலைத்தேவதை, அவரது கவித்துவ உணர்வை விட்டு நீங்கி, உணர்வின் எழுச்சிகளை வற்றச் செய்தது போலும். அவர் கவிதைகளை மேலும் மேலும் படைக்காமல் நிறுத்திக்கொண்டதற்கு அவர் கவிதைகள் ஒரு சிறுமிக்குரிய முதிராப்பருவம் உடையனவாய் இருந்தது காரணமாகவும் இருக்கலாம். தம் நாற்பதாம் வயதில் உணர்ச்சிப் போக்கில் வெளிப்படும் இசைப்பாடல் வழியினை மாற்றிக்கொண்டு, அதனினும் சிறந்த பொருள் செறிந்த படைப்புகளைப் படைத்தல் வேண்டும் என்று எண்ணினார்; அதையே செய்தார்.

இவ்விரு பெண்பாற் கவிஞர்களுக்கும் இடையே உள்ள மற்றோர் ஒருமை இருவருமே எட்மண்டு கோஸ் என்பவரால் ஆதரிக்கப்பட்டவர்கள். இருவருடைய நூல்களுக்கும் கோஸ் முன்னுரை எழுதியுள்ளார். எட்மண்டு கோஸ்தான் தமக்குக் கவிதைக் கோயிலின் முகப்பு வாயிலைச் சுட்டிக் காட்டியவர் என்று சரோஜினி ஒப்புக்கொள்கிறார். டோருதத் பற்றிக் கோஸ் கூறும்போது நம்முடைய நாட்டின் இலக்கிய வரலாறு எழுதப்படுமானால் மென்மைப் பொலிவும் அயற்பண்பும் விரவிய டோருவின் கவிதைகளைப்

பற்றி எழுதக் கட்டாயம் ஒரு பக்கத்தை ஒதுக்கியே ஆதல் வேண்டும் என்று கூறுகிறார்.

டோரு, சரோஜினி ஆகிய இருவருமே எளிமையானவர்கள். ஆனால் முன்னவர் சற்றே இயல்பான தன்மை உடையவராகவும் பக்குவ முதிர்ச்சி பெற்றவராகவும் விளங்கினார். பின்னவரோ மரபுவழிப்பட்டவராகவும், மழலைப் பிள்ளைத்தனம் உடையவராகவும் இருந்தார். டோரு தம் சொந்த வாழ்வின் துயரங்களையோ உவகைகளையோ இந்த உலகத்திற்குச் சொல்ல முடியவில்லை. சரோஜினி புறவுலக நோக்குடைய கவிஞராக இருந்து அவற்றைப் பாடல்களில் வெளியிட்டார். சவுக்கு மரம் போன்ற செவ்விய கவிதைகளிலும், தம் தந்தைக்கு எழுதிய கவிதைகளிலும், டோரு தம் சொந்தமான உணர்ச்சிகளைக் கொட்டினார் என்றாலும் தம் குறுகிய சோக வாழ்வின் அவலத்தை யாண்டும் குறிப்பிடவில்லை.

இயற்கையைக் கூர்ந்து கண்டு அறிவதிலும் இக்கவிஞர்கள் வேறுபட்டிருந்தனர். உதாரணமாக, டோருவின் மரத்தைப் பற்றிய வருணனை சரோஜினியின் வருணனையோடு முற்றிலும் மாறுபட்டதாகவே இருக்கின்றது. சரோஜினி தம் வருணனைகள் 'இந்தியத் தன்மை' கொண்டனவாக இருக்கவேண்டும் என்று உணர்ந்திருக்கிறார். ஒருக்கால் அது கோஸ் கூறிய அறிவுரையின் காரணமாக இருக்கலாம். டோருவுக்கு அவர் நேசித்த மரங்கள் இந்திய நாட்டில் உள்ளன என்பதைத் தவிர அதற்குமேல் வேறு விசேடம் இல்லை. சரோஜினி கண்ட மரங்கள் இந்தியப் பின்னணியில்—சுதேசியப் பின்னணியில் வருணிக்கப்படவேண்டும் என்று கருதினார்.

*கவின் நிலவு கணுமூங்கில் இடைவெளியில் தோன்றும்*
*காட்சியைப்போல் பேரழகு பிறிதொன்றும் இல்லை*
*குவிந்த வெள்ளிக் கிண்ணம்போல் தாமரைகள்மாறக்*
*குதூகலத்தால் மயக்கமுற்றுக் கருத்தூன்றி நோக்கி*
*நவையற்ற பேரழகை உளமார மாந்தி நலம்பெறலாம்*
*பழங்கால ஈடன்நகர்ப் பரவசத்தில் தோய்ந்தே.*

இதோ, நம் சரோஜினி 'சண்பகத்தின் மலர்ச்சி' பற்றிப் பாடுவதைக் கேட்போம்.

*அழகிய நிமிளைப் பூவின்தோடே*
*ஆனையின் தந்தப்படிவே!*
*செதுக்கிய பச்சை மணிக்கல் ஒத்த*
*சித்திரவார்ப்பே! உன்றன்*

நறுஞ்சுவை அமிழ்தின் நல்எழில் மிக்க
நலம்பெறும் கழனிக்காடே!
நிலைபே றற்ற மலர்ச்சியின் விதியினுல்
நித்தம் மெலிவாய், உதிர்வாய்! நீயே!

ஒரு திறனுய்வாளர் சரோஜினி பற்றிக் குறிப்பிடும்போது, டென்னிசனுக்கு மனித உணர்ச்சிகளைச் சித்திரிக்க இயற்கை பின்னணியாகப் பயன்பட்டதுபோல், இவருக்கும் பயன்பட்டதாகக் கூறுகிருர். அக்கருத்து எமக்கு உடன்பாடன்று. சரோஜினி மனித உணர்ச்சிகளை ஆழமாகப் புரிந்துகொண்டதாகவோ அழகுற வெளிப்படுத்தியதாகவோ சொல்வதற்கில்லை. அவை இதழ்கள், பறவையின் இன்னெலி போன்ற கனவு மயமான பிரமையால் பொதியப் பெற்று மதச் சார்புடைய குறியீட்டு உருவகங்கள் நிறைந்தனவாய் உள்ளன. குமிழியிட்டு நுரைத்தெழும் கற்பனைக் கனவுகள், நளினமான தொடர்கள், உவமைகள் முதலியவற்றை அணிந்துகொண்டு வருவனபோல் அவை விளங்குகின்றன. அக் கவிதைகள் மின்னல் வீசி மறைவன; ஆனுலும் அவற்றைப் படிக்கும் நம்மை நிறைவுபடுத்துகின்றன; ஆன்மிக உட்பொருளும் இலட்சிய உயிர்ப்பும் உடையனவாய்க் கற்பார் உணர்வைக் கிறங்கச் செய்வன.

7

சரோஜினி நாயுடுவின் தத்துவச் சிந்தனைகள் அவரது மேடைப் பேச்சுக்களில் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் வெளிப்படுகின்றன. அவர் ஆற்றிய பேச்சுக்கள் மறக்கமுடியாத பெருஞ்சிறப்புக் குரியன; நாம் அதைக் கேட்டு மகிழும் வாய்ப்பினைப் பெற்றிருந் தோம். சில குற்றச்சாட்டுக்கள் அவரைப் பற்றிக் கூறப்படுவ துண்டு. அவர் கையாண்ட மொழி நடை இன்னேசையுடையது, அணி நலமுடையது; எளிமையானது; கேட்போரைக் கனவுலகில் ஈர்க்கவல்லது. இது ஓரளவு உண்மை என்பதை நானும் உணர்ந் திருக்கிறேன். அவரது பேச்சுக்களில் சிந்தனைக் கனம் இருந்தது. நாம் பின்பற்றத்தக்க கொள்கைகளை அவர் பேச்சில் வழங்கினுர். விரிந்த வானவெளியில் உச்சியில் திகழும் நிலவை எட்டிப் பிடிக்க நாம் முயன்ருேம். ஒன்றுபட்ட உலகத்தைச் சமைப்பதற்கு ஒன்று பட்ட சமுதாயத்தைக் காண்பதற்கு நாம் முயன்ருேம். நாம் சில சீர்த்திருத்தங்களை மேற்கொள்ளவேண்டியிருந்தது; தீமைகளை நசுக்கவேண்டியிருந்தது; சுதந்தரத்தைப் பெறவேண்டி இருந்தது. அமைதியான வாழ்வை வற்புறுத்தவேண்டி இருந்தது. எல்லா வகைப்பட்ட சாதி மத இனபேதம் உடையாரிடத்தும் ஒரே மாதிரி யான அன்பைப் பொழியவேண்டியிருந்தது. அவர் பேச்சைக்

கேட்டுவிட்டு நாம் வறிதே திரும்பியதில்லை. அவர் பேச்சைக் கேட்க நேர்ந்தபோதெல்லாம், இம்மை வாழ்வு தந்த தப்பும் தவறுமாய்க் கிளைத்து எழும் சிறகுகளைக் கொண்டு, நம் உழைப்பாலும், ஊக்கத்தாலும் மேலே மேலே உயர்ந்து போவதுபோல் நாம் உணர்ந்தோம். உழைத்து முன்னேறுவதோ—மனித சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காக இடை ஓய்வு இல்லாமல் உழைப்பதோ நம் லட்சியமாக இருந்தது. நம்பிக்கையும் மலர்ச்சியும் நிறைந்த ஒரு புதிய உலகைப் படைப்பதே ஒவ்வோர் ஆணினுடைய—பெண்ணினுடைய கடமையாக இருந்தது.

இவ்வாறாக இந்தத் தன்னேரிலாத இப்பெண்மணி வாழ்ந்தார்; மக்களுக்காக உழைத்தார்; பெருமிதத்திற்குரிய தனிமையில் மறைந்தார்; தம் கனவுகள் நிறைவேறவேண்டும் என்பதற்காகவே அவர் அடுத்தடுத்து இடையறாது முயன்றார். நாம் பலாத்காரம், துன்பம், பழிவாங்குதல் போன்ற உணர்ச்சிகளோடு வாழக்கூடாது, நாம் குழந்தைகளைப்போல் கூடி வாழவேண்டும். மன உறுதியோடும், பொறுமையோடும் இறுதிவரை அயராது லட்சியத்தை அடைய நினைக்கும் நினைப்போடு வாழ்வோம். உணர்ச்சித் தீவிரம் கொண்ட படையாக வாழ்வோம். அடுத்தடுத்து ஆயிரமாயிரம் துன்பங்கள் தன்னைச் சூழ்ந்தாலும் அதுபற்றிக் கவலைப்படாமல் இறுதி வெற்றி பெற்ற அரிச்சந்திரனைப் போல் வாழ்வோம். நம்முடைய உணர்ச்சி அழியாதது. நாம் நம் முந்தையோரின் பரம்பரையில் வாழையடி வாழையாக வந்தவர்கள். ஏனெனில் நாம் உண்மையின் காவலர்கள் என்னும் உண்மையை இந்த உலகத்திற்கு நம் செயல் மூலம் நிரூபித்துக் காட்டுவோம்.

# BIBLIOGRAPHY


1. *Songs*, pub. privately by Aghorenath Chattopadhyay, 1896.
2. *The Golden Threshold*, W. Heinemann, London, 1905.
3. *The Bird of Time*, William Heinemann, London, 1912.
4. *The Broken Wing*, William Heinemann, London, 1917.
5. *The Sceptred Flute*, Dodd Mead & Co. with an introduction by Joseph Auslander, 1937.
6. *The Sceptred Flute*, Kitabistan, First published in India, 1943. Second Edition, 1946.
7. *The Gift of India*, Reprinted from the Report of the Hyderabad Ladies' War Relief Association, 1914–15.
8. *Gopal Krishna Gokhale*, A booklet first published in the Bombay Chronicle.
9. *The Soul of India*, First edition, Hyderabad, Deccan 1917.
   2nd edition, The Cambridge Press, Madras, 1919.

   Above-mentioned titles are by Sarojini Naidu.
10. *Speeches and Writings of Sarojini Naidu*, G. A. Natesan & Co., Madras. 2nd & 3rd editions.
11. *Great Women of India*, Kamala Satthianadhan, Longmans, Indian Reading Books, 1930.
12. *Life and Myself Dawn Approaching Noon* by Harindranath Chattopadhyay, Vol. I, Nalanda Publications, Bombay.
13. *The Ladies' Magazine*, 1901-1917 Ed. K. Satthianadhan.
14. *Men and Women of India*, May, 1906.
15. *Sarojini Naidu*, A. Jha, a private publication.
16. *Indian Writing in English*, K. R. Srinivasa Iyengar, Asia Publishing House, 1962.
17. *The Renaissance of India*, James H. Cousins, Ganesh & Co. Madras.
18. *Women of India–Chief Editor*, Tara Ali Baig, Publications Division, 1958.
19. *Women Behind Mahatma Gandhi*, Eleanor Morton, Max Reinhardt, London, 1954.

20. *A Bunch of Old Letters,* Asia Publishing House, 1958.

21. *My days with Gandhi,* Nirmal K. Bose, Nishana, 1953.

22. *Mission with Mountbatten,* Alan Campbell Johnson.

23. *Jesting Pilate,* Aldous Huxley, Chatto and Windus, 1931.

24. *The Naked Fakir,* Robert Bernays, Victor Gollancz, London, 1954.

25. *My Gandhi by John Hynes Holmes,* Allen & Unwin, London, 1954.

26. *The Awakening of Asian Womanhood,* Margaret E. Cousins, Ganesh, Madras, 1922.

27. *Young India,* April 11, 1929.

28. *The Leader,* Feb. 14, 1948.

29. *The Golden Treasury of Indo-Anglican Poetry,* 1829-1865. Ed. V. K. Gokak, Sahitya Akademi.

30. *Indo-English Poerty,* P. C. Kotoky, Dept. of Publications, Gauhati University, 1969.

31. *Indo-English Literature in the Nineteenth Century,* John B. Alphanso-Karkala. The Literary Half-Yearly University of Mysore.

32. *Critical Essays on Indian Writing in English,* Ed. M. K. Nair, S. K. Desai, G. S. Amar, Karnatak University, Dharwar, 1968.

33. *The Swan and the Eagle,* B. C. D. Narasimhaiah. Indian Institute of Advanced Studies, Simla. 1969.

34. *The Two-Fold Voice,* Essays on Indian Writing in English, Ed. D. V. K. Raghavacharyulu, Navodaya Publishers.

35. *Asian Relations,* Report of the Proceedings and Document of the First Asian Relations Conference, New Delhi, 1947. Asian Relations Organisation, New Delhi, 1948.

36. *The Oxford Book of English Mystic Verse,* Clarendon Press, Oxford, 1917.

37. *The History of the Indian National Congress,* Pattabhi Sitaramayya, Padma Publications, Bombay 1946-47.

38. *Modern Indian Poetry in English,* Anthology & Credo, Ed. P. Lal, Writers Workshop, Calcutta.

39. *Sarojini Naidu,* Padmini Sengupta, Asia Publishing House, 1966.

சரோஜினி நாயுடு (1879–1949) ஆங்கிலக் கவிதை வரலாற்றில் தமக்கென ஓர் தனி இடம் பெற்றுக்கொண்டவர். ஆங்கிலம் எழுதும் இந்தியர் என்ற முறையில் அல்லாது இயல்பான ஆங்கிலக் கவிஞர் என்ற வகையில் சிறப்புப் பெற்றவர். அதனுல் இந்திய நாட்டுக்கு அவர் அன்னியராகிவிடவில்லை. அவர் இலக்கியமெல்லாம் இந்தியப் பொருளே; தேச பக்தி நிறைந்த இந்த இந்தியத் திருமகள், பாரத நாட்டின் ஒருமைப்பாட்டின் உருவெனத் திகழ்ந்தவர்.

இந்து முஸ்லிம் பண்பாட்டில் சிறந்த ஹைதராபாத்தில் பிறந்த இந்தப் பெண்மணி பிரம்ம சமாஜ தத்துவப் பின்னனியில் வளர்ந்து, சகிப்புத் தன்மை நிறைந்து மனித குலத்தின்மீது அன்பு காட்டி வாழ்ந்தவர். ஆங்கிலக் கல்வியின் தயாரிப்பான இவர், பாரத இளைஞர்கள் கண்மூடித்தனமாக மேலை நாட்டுப் போக்கில் கவரப்படுவதைக் கண்டித்தார். ஆயினும் குழந்தைப் பருவத்திலிருந்தே இவர் கீழ்த் திசை மேல் திசை நாடுகளின் நட்புறவில் நம்பிக்கையுடன் வளர்க்கப்பட்டவர்.

நல்வினை அடைவோம், வானமே எல்லை, எனவே இணைந்த உலக நலனுக்கே உழைப்போம் என்பதை நமக்கு மீண்டும் மீண்டும் நினைவுபடுத்தியபடியிருந்தார், சரோஜினி.

'பாரத கோகிலம்' சரோஜினி தேவியின் தங்கக் குரல். அவர் உரைகளைக் கேட்டவர் செவியில் இன்றும் ஒலித்துக்கொண்டிருக்கும். அரசியல் தலைவர் என்ற வகையில் மட்டுமே பலரும் அறிந்த சரோஜினியை, இந்திய இலக்கியச் சிற்பிகளுள் ஓர் கவிஞராக அறிமுகப்படுத்துகிறது இந்த நூல். நூலாசிரியர் திருமதி பத்மினி சென் குப்தா, தம் அன்னையார் உற்ற தோழியான சரோஜினியைப் பற்றி ஆதாரப்பூர்வமாக அறிந்து எழுதியுள்ளார்.


அட்டை அமைப்பு: சத்யஜித் ராய்

உருவ ஓவியம் : அதர் லஸ்கர்

பட உதவி : சுனில் ஜானா

விலை ரூ. 5·00